# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Thursday, the 11th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

MR. SPEAKER : Short notice question No. 4.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I am not putting my short notice question.

*Labour courts*

* 100-B *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of Sri N. K. Palanisami) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to abolish Labour Courts;

(*b*) the number of cases pending in these Courts; and

(*c*) whether any representations have been made not to abolish these Courts?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) The number of pending cases with the Labour Courts at the end of July 1958 are—

| | |
|---|---|
| Labour Court, Madras ... ... ... ... | 44 |
| Labour Court, Coimbatore ... ... ... | 19 |
| Labour Court, Madurai ... ... ... ... | 25 |

(*c*) The Labour Court, Madurai, which was constituted in July 1957 had been temporarily continued up to May 1958. Representations from certain managements and unions of workers were received requesting the Government to sanction the continuance of the post of the Labour Court beyond 1st June 1958. The post has been continued up to 29th February 1959.

SRI T. SAMPATH : Sir, may I know the reason for the delay in the disposal of the cases in these courts?

THE HON. SRI R. VENKATARAMAN : On the contrary, the hon. Member will realise that there has been no delay at all. The number of cases pending in Madras is 44, the number in Coimbatore is 19, and the number in Madurai is 25.

SRI A. A. RASHEED : Sir, where is the necessity for separate courts for labour cases?

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member has to educate himself on Industrial Law.

[11th September 1958

SRI S. B. ADITYAN : May I know, Sir, whether these courts are free from interference from the Government?

THE HON. SRI R. VENKATARAMAN : The Hon. Speaker will certainly take exception to the suggestion in the question. These are all judicial tribunals presided over by District Judges, and I am sorry that such a question has been put by the hon. Member.

MR. SPEAKER : It is a sort of insinuation, which is not desirable.

### *Small-scale Industries*

* **100-C** *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழிலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே முதலாவது 5-ஆண்டு திட்டக் காலத்திலே சிறு கைத்தொழில் அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் எந்தெந்த இடங்களிலே என்னென்ன தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டு இருக்கின்றன ?

(ஆ) இத் தொழிற்சாலைகள் நிறுவுவதற்காக ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(இ) இரண்டாவது ஐந்து ஆண்டு திட்டக் காலத்திலே என்னென்ன தொழிற்சாலைகள் எங்கெங்கே ஆரம்பிப்பதற்காகத் திட்டமிடப்பட்டிருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Nil, Sir.

(*b*) Does not arise.

(*c*) During the Second Five-Year Plan, the following Small Scale Industries are proposed to be started in the Coimbatore district.

(1) Wood Seasoning Plant at Pollachi.

(2) Industrial Colony at Erode.

(3) Model Leather Goods Unit at Erode.

(4) Model Foundry at Erode.

(5) Bolts and Nuts Factory in Erode.

(6) Common Central Servicing Tool Room shop at Erode.

SRI M. JAGANNATHAN : Sir, what is the big idea in starting all these small scale industries only in the district of Coimbatore?

THE HON. SRI R. VENKATARAMAN : Not at all. A number of small scale industries are started throughout the State. But the question relates to Coimbatore and therefore the answer relates to Coimbatore.

SRI S. NAGARAJA MONIGAR : கோயம்புத்தூரில் எல்லாம் ஒருங்கே சேர்ந்திருக்கிறது என்றல்ல. ஈரோட்டிலே நாலைந்து பாக்டரிகள் ஆரம்பித்து இருப்பதாக தற்போது சொல்லப்படுகிறது. சிறிய கைத்தொழில்களாக இருக்கிறபோது கூட ·ஒரேயிடத்தில் என் ஆரம்பிக்கப்படுகிறது ?

MR. SPEAKER : இக் கேள்வி கோயம்புத்தூரைப்பற்றிய கேள்வி அதனால் அதைப்பற்றிச் சொல்லப்பட்டது.

11th September 1958]

**THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I want to clarify the situation. The Government of India have started pilot** project schemes for concentrating a number of small scale industries in project areas. The Lower Bhavani pilot project scheme **has its headquarters in Erode, and therefore these industries are started in Erode.**

**SRI P. G. MANICKAM :** இந்த தொழிற்சாலையை நிறுவுவதின் மூலம் எத்தனை பேர்களுக்கு வேலை கிடைத்தன ? அவர்களின் வாழ்க்கை நிலை எவ்வாறு உயர்ந்திருக்கிறது என்பதுபற்றிய புள்ளி விவரங்கள் சேகரம் செய்யப்பட்டிருப்பின் அதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** எத்தனை பேர்களுக்கு அதிகமாக வேலை கிடைத்திருக்கிறது என்பதற்கு தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன். ஆனால், இவ்விதம் தொழிற்சாலைகள் அமைப்பதின் மூலம் வாழ்க்கைத்தரம் உயரும் என்பது சர்க்காரின் கருத்து. அதுவே அங்கத்தினர்களின் கருத்துமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

**SRIMATHI KOLANTHAIAMMAL :** சூலூரில் ஆட்டு ரோமத் தொழிற்சாலை ஒன்றை நிறுவ வேண்டுமென்பது சர்க்காரின் கவனத்திற்கும், அமைச்சர் அவர்களின் கவனத்திற்கும் கொண்டுவரப்பட்டதா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** அது மாத்திரமல்ல. இன்னும் எவ்வளவோ தொழிற்சாலைகள் அமைக்க வேண்டுமென்றுதான் பலவித " ரிக்வஸ்ட்ஸ் " வந்துகொண்டிருக்கின்றன.

**SRI M. C. MUTHUKUMARASWAMY :** இந்த சிறு தொழில்கள் ஈரோட்டில் இருக்க வேண்டுமென்று மத்திய சர்க்கார் விரும்புவதற்கு காரணம் என்னவென்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** " பைலட் ப்ராஜெக்ட் ஸ்கீம்ஸ் " என்று சொன்னால் ஒரு ப்ளாக் ஏரியாவில் ஒரு இடத்தைப் பொறுக்கி யெடுத்து அதில் அதிகமாக தொழிற்சாலைகள் நிறுவி அதனால் என்ன விளைவுகள் ஏற்படுகிறது, எந்தளவு வேலை அதிகரிக்கிறது, எப்படி அபிவிருத்திக்கு சாதகமாயிருக்கிறது போன்றவைகளை பரீட்சார்த்தமாக பார்க்கும் முறையில் இது அமைக்கப்பட்டிருக்கிறது.

• **SRI N. MARUDACHALAM :** கோயம்புத்தூரில் கூட்டுறவு தோல் பதனிடும் தொழிற்சாலை ஒன்றை ஏற்படுத்த அங்கிருந்து அரசாங்கத்திற்கு ஏதாவது தாக்கீது வந்திருக்கிறதா ? அதன் பேரில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** அங்கிருந்து என்று சொன்னால், எங்கிருந்து ? கோயம்புத்தூரிலிருந்து என்று சொன்னால் இதுபோல் பல " ரிக்வஸ்ட்ஸ் " வந்து கொண்டிருக்கிறது என்று சொன்னேன். மத்திய சர்க்காரிலிருந்து எந்த விதமான சாங்க்ஷனும் வரவில்லை.

**SRI A. GOVINDASAMY :** இங்கு இந்தத் தொழிற்சாலைகள் அமைவதற்கு. மத்திய சர்க்காரிலிருந்து கிடைத்த மான்யம் எவ்வளவு ? ராஜ்ய சர்க்காரின் மான்யம் எவ்வளவு ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** தனியாக கேள்வி போட்டால் கணக்கு விஷயங்கள் பற்றி சொல்கிறேன்.

[11th September 1958

*Slums*

*100-D *Q*.—SRI A. V. P. ASAITHAMBI : சனம் கைத்தொழிலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ஆயிரம்விளக்குத் தொகுதியில் உள்ள சேரிப் பகுதி பூராவையும் அபிவிருத்தி செய்யும் வேலை எந்த அளவில் உள்ளது ?

(ஆ) சேரி ஒழிப்புத் திட்டத்தின் கீழ் குடிசை வாழ்வோரை குடி பெயர்ப்பதை விட்டு விட்டு, சுற்றிலும் உள்ள நிலங்களை நியாய விலைக்கு ஆக்கிரமித்து, குடிசை வாழ்வோருக்கு வழங்க அரசாங்கத்திற்கு உத்தேசம் ஏதேனும் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Presumably the member refers to the improvement of the slums in the Mackay's Garden area in Thousand Lights. As part of the land in the above area is evacuee property, the Government of India, Ministry of Rehabilitation, have been addressed for their concurrence to acquire the lands for rehabilitating the existing slum dwellers. The Government of India's reply is awaited.

(*b*) Yes. The slum dwellers will be rehoused, as far as possible, in the existing slum area after development, and in a proper lay out under the Slum Clearance Scheme. If the existing slum area is not sufficient to rehouse all the slum dwellers, the surplus families will be accommodated in alternative areas as close to their original residence as possible.

SRI A. V. P. ASAITHAMBI : சென்னை ஆயிரம்விளக்குத் தொகுதியில், நுங்கம்பாக்கம் பகுதியில் காமராஜபுரம், புஷ்பநகரம் ஆகிய ஸ்லம் ஏரியாக்களை அபிவிருத்தி செய்ய 2,98,750 ரூபாய் சர்க்கார் ஏற்கனவே ஒதுக்கியிருக்கிறதே, அந்த வேலையை ஆரம்பிக்கப்பட்டுவிட்டதா, அல்லது எப்பொழுது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI R. VENKATARAMAN :Sir, this relates to a specific item. I can only say that at present the schemes are being taken up and lay-out are being considered.

SRI K. VINAYAKAM : Sir, whereas clearance of slums is a laudable object, there is a tendency on the part of the Government to remove slums and concentrate them in Kodambakkam area and create a big slum there. Will the Government think of the possibility of locating these slums in different parts in the outskirts of the City instead of concentrating all of them in Kodambakkam, which will result in untold misery to us?

THE HON. SRI R. VENKATARAMAN : When the surplus slum population is transferred to Kodambakkam, they will be rehabilitated in good areas and they will not live in slums. I think it is an improvement to Kodambakkam area rather than a creation of new slums there.

SRI K. B. S. MANI : இந்த சேரிகள் சீர்திருத்த முறையிலே அவர்களுக்கு கொடுக்கப்படுகிற மனைக்கட்டுகள் சர்க்காரிலிருந்து இலவசமாகக் கொடுக்கப்படுகிறதா ? அல்லது அவர்களிடத்தில் தொகை வசூலிக்கப்படுகிறதா ? அப்படி தொகை வசூலிக்கப்பட்டால் அவைகளை இன்ஸ்ட்டால்மென்ட் பேஸிஸில் கிட்டத்தட்ட 15 வருடத் தவணையில் அத் தொகையை வசூலிக்க அரசாங்கம் முன் வருமா ?

11th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தயிடங்களை எல்லாம், "டெவலெப்டு ப்ளாட்ஸ்" என்று சொல்லப்படுகிறது. இவைகள் வாடகைக்குத்தான் கொடுக்கப்படும். அவர்களுக்கு "அஸைன்மெண்ட்" செய்யப்பட மாட்டாது. ஆகவே "இன்ஸ்ட்டால்மெண்ட்"டில் வாங்க வேண்டிய பிரச்னையே எழவில்லை.

SRI P. U. SHANMUGAM : ஸார், மத்திய சர்க்காருக்கு எழுதியிருப்பதாக அமைச்சர் அவர்கள் பதிலளித்தார்கள். அப்படியானால் அந்த பதில் எப்போது வரும்? இவ்விதம் மத்திய சர்க்காருக்கு எழுத வேண்டிய அவசியம் என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : மத்திய சர்க்கார் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் ஒரு கோடி அறுபத்தி எட்டு லட்சம் ரூபாய் இதற்கு ஒதுக்கியிருக்கிறார்கள். ஆதலால் அவர்களுக்கு எழுத வேண்டிய அவசியம் இருக்கிறது. பதில் வருகிற விஷயமாக சாதாரணமாக ஒரு சர்க்காரிலிருந்து இன்னொரு சர்க்காருக்கு கடிதம் எழுதும் போது அதற்கு பதில் அனுப்புவதற்கு எவ்வளவு கால தாமதம் ஆகுமோ அவ்வளவு காலம் இதற்கும் ஆகும்.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, சேரி அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் 200 பேர் இருக்கக்கூடிய இடங்களில் 50 பேர்களுக்கு மாத்திரம் இடவசதி செய்து கொடுத்துவிட்டு பாக்கியுள்ள 150 பேர்களையும் ஊருக்கு வெளியே அனுப்ப வேண்டிய நிலை ஏற்படுகிறது. அதை தடுக்க கட்டப்படும் வீடுகளை இரண்டு அல்லது மூன்று மாடி உள்ள கட்டிடமாக கட்டி அதில் அவர்களை வசிக்க செய்யலாம். இந்த யோசனையை சர்க்கார் ஏற்றுக்கொள்ளுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, I thank the hon. Member for this question. இந்த இடங்களில் எல்லாம் சாதாரணமாக ஒரு வீட்டுக்கு 800 சதுர அடி வீதம் ஒதுக்க வேண்டும் என்று நிர்ணயித்திருப்பதால் பாதி அளவுக்கு இப்போது இருக்கிற இடத்தில் ஸ்லம் இம்ப்ரூவ்மெண்ட் செய்ய முடிகின்றது. இதில் அதிகமான பேர்களை அப்புறப்படுத்த வேண்டிய நிலைமை ஏன் ஏற்படுகிறது என்றால், சென்னை நகரத்தை பொறுத்த வரையில் பல ஸ்லம்களில் இன்று இருப்பவர்கள், மாடி வீடுகளில் இருக்கமாட்டோம் என்று சொல்லுகிறார்கள். கனம் அங்கத்தினர் அவர்கள் போன்றவர்கள் அவர்களிடத்தில் போய் மாடி வீடுகளில் வசிக்க வேண்டும் என்று பிரசாரம் செய்வார்களானால் அது சர்க்காருக்கு ரொம்ப உதவியாய் இருக்கும். உதாரணமாக அயோத்திகுப்பம் என்ற ஸ்லம் ஏரியாவிலுள்ளவர்கள் மாடி வீடுகளில் இருக்க மாட்டோம் என்று நேரடியாகவே சொல்லி விட்டார்கள்.

### *Harvey mills*

* 100-E *Q*.—SRI M. K. SOMASUNDARAM (on behalf of Sri M. S. Selvarajan) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any representation from the Vickramasingapuram Harvey Mills Employees' Co-operative Stores Staff Union regarding their ill-treatment at the hands of the authorities, has been received recently; and

(*b*) if so the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Yes, Sir.

The representation was examined by the Government and the grievances have been enquired into. It is reported that there is no grievance at present. In view of this, Government consider that no further action is necessary.

### *Iron*

* 100-F *Q.*—SRI V. K. KRISHNAMURTHY (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government are aware of iron deposits near Ellithorai village in Coonoor taluk in Nilgiris district;

(*b*) the nature and the extent of deposits therein;

(*c*) the probable products manufactured from the said deposits;

(*d*) whether any private individual has begun to dig out the said deposits;

(*e*) whether any licence has been issued to the individual; and

(*f*) whether any survey research has been conducted in the said area?

THE HON. SRI R. VENKATARAMAN. (*a*) The only information of the occurrence is that received from the hon. Member.

(*b*) & (*c*) No investigation has yet been made.

(*d*) & (*e*) Permission has been given to India Silicate Industries (Private), Limited, for mining iron ore in Yeddappalli village, Coonoor taluk.

(*f*) Systematic Geological mapping or mineral survey in the Nilgiris district has not yet been taken up.

### *Stamp duty*

* 100-G. *Q.*—SRI V. K. KRISHNAMURTHY (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to exempt sales of house-sites from stamp duty?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

### *State Industrial Investment Corporation*

* 100-H *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the amount allotted to State Investment Corporation for the year, 1956–57 and 1957–58;

(*b*) the amount that has been disbursed district-wise and industry-wise as loans during this period;

11th September 1958]

(*c*) whether it is a fact that the State Investment Corporation is not giving any loans to the industries due to the paucity of funds; and

(*d*) if so, the action taken by the Government to allot more funds to the State Investment Corporation?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Apparently the member means the Madras Industrial Investment **Corporation,** Limited, which has been set up under the Companies Act with private and Government Investments. Only short-term loans are being given to this Corporation as and when required, to tide over temporary paucity of funds. Provision was made in the budget for 1956–57 and 1957–58 to the extent of Rs. 60 lakhs and Rs. 40 lakhs respectively for the grant of short-term loans to the Madras Industrial Investment Corporation.

(*b*) A statement [a] is placed on the table of the House.

(*c*) Though the Corporation at its meeting held on 18th May 1957 decided not to consider any loan applications until its **fund** position improved, subsequently, with the easing of the position, the Corporation has begun to consider loan applications.

(*d*) The Government are assisting the Corporation to augments its funds by guaranteeing its bonds, fixed deposits and cash certificates.

SRI A. A. RASHEED : From the statement placed on the table of the House, I find that districts like Ramanathapuram and Coimbatore have been given a large amount of loan. I want to know why the district of North Arcot where we have the tanning industry has been given such step-motherly treatment.

THE HON. SRI R. VENKATARAMAN : There is a Board of Directors and the Board scrutinizes the applications and decides. The Government have no say in the matter.

SRI A. VEDARATHNAM : நம்முடைய ஸ்டேட் கார்ப்பரேஷனுக்குப் போதிய நிதி வசதி இல்லையென்றால் மத்திய கார்ப்பரேஷனிலிருந்து இதற்கு நிதி உதவி ஏதேனும் கிடைக்குமா ? அவ்விதமென்றால் ஏதாவது கடன் வாங்கிக் கொள்ளக்கூடாதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்குப் பதிலாக மக்களிடத்திலே கடன் வாங்கலாம் என்று ஒரு யோசனை இருக்கிறது. சுமார் ஒரு கோடி ரூபாய்க்கு கடன் பத்திரங்கள் வெளியிடலாம் என்றுள்ள யோசனை இருந்து கொண்டிருக்கிறது.

SRI P. U. SHANMUGAM : தலைவர் அவர்களே, போர்ட் ஆப் டயரக்டர்கள், இதில் யார் யாரெல்லாம் என்பதை அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த போர்டினுடைய சேர்மென் திரு. வெங்கிடசாமி நாயுடு அவர்கள். டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரிஸ் இதில் ஒரு மெம்பர். மற்றவர்களின் பெயர்கள் இப்போது என்னிடம் கையில் இல்லை என்று நினைக்கிறேன்.

---

[a] Printed as Appendix on pages 687–688 infra.

[11th September 1958

SRI A. A. RASHEED : Sir, in order to augment the resources of the Corporation, will the Government seek loans from the Life Insurance Corporation of India who have got lots of money which they want to invest?

THE HON. SRI R. VENKATARAMAN : These are all matters which are within the administrative discretion of the Board of Directors.

Now, let me answer the question put by the hon. Member Sri P. U. Shanmugam. The names of the Directors are—

Sri R. Venkataswamy Naidu—*Chairman.*
,, T. A. Varghese—*Government Director.*
,, T. K. Palaniappan—*Government Director.*
,, V. V. Shanmuga Nadar.
,, P. A. C. Ramasamy Raja.
,, M. S. Palaniappa Mudaliar.
,, M. A. Chidambaram Chettiar.
,, V. S. Thiagaraja Mudaliar.
,, N. Mahalingam.
,, A. M. M. Murugappa Chettiar.
,, D. C. Kothari.

*Industrial Training Institute*

* 100-I *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் கைத்தொழிலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, நாகப்பட்டினம் தாலூகாவில் கட்டப்பட்டுவரும் **Industrial training Institute** கட்டுவதற்கு அரசாங்கத்தார் ஒதுக்கியுள்ள தொகை எவ்வளவு ?

(ஆ) மேற்படி கட்டிடம் கட்டுவதற்கு எத்தனை தடவைகள் எந்தெந்த தேதிகளில் டெண்டர்கள் வரவழைக்கப்பட்டன ?

(இ) முதல் தடவை மிகக் குறைந்த டெண்டர் கொடுத்தவருக்கு ஏன் மேற்படி கட்டிடம் கட்டுவதற்கு அனுமதி கொடுக்கப்படவில்லை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Rs. 4,04,380.

(*b*) Two occasions on 1st May 1957 and 17th January 1958.

(*c*) The tenders received in the first tender call could not be accepted for the following reasons :—

(1) It was originally proposed to construct only the main buildings of the institute in the compound of Malayan Emigration Depot, Nagapattinam, but it was subsequently decided to construct the main buildings and workshops buildings in another site, several miles away from the site originally proposed. The tenders obtained on the first occasion could not hold good because of the difference in loads, etc., and as the lowest tenderer on the first occasion expressed his inability to undertake the work at his tendered rates in the new site.

(2) A decision on the tenders should have been given within two months. As the site subsequently chosen could not be obtained within this period, the tenders received on the first occasion could not be enforced.

11th September 1958]

**Sri A. GOVINDASAMY** : ஸார், முதலாவது தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டிடங் கட்டுவதற்கு டெண்டர் வரவழைக்கப்பட்டது. பின்னல் அது கட்டப்படாமல் இரண்டாவது தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டிடம் கட்டுவதற்கு டெண்டர்கள் வரவழைக்கப்பட்டதா அல்லது முதலாவது உள்ள டெண்டர்களை வைத்துக்கொண்டே முடிவு செய்யப்பட்டதா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: முதலில் டெண்டர் தந்தவர் இந்த வேலையை செய்ய முடியாது என்று சொல்லிவிட்டார். அதன் பின்னல் இரண்டாவது டெண்டர் வரவழைக்கப்பட்டது.

*State Transport Department, Madras.*

* 100-J *Q.*—Sri T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state the pay and allowances of the drivers and conductors of the Transport Department in Madras?

The Hon. Sri R. VENKATARAMAN : The particulars of pay and other allowances of drivers and conductors of the Madras Branch of the Madras State Transport Department, are as follows :—

| — | *Drivers.* | *Conductors.* |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| (i) Scale of pay .. | Rs. 40—2—60. | Rs. 30—2—50. |
| (ii) Dearness allowance. | Rs. 33 per mensem for a pay of Rs. 40 and Rs. 34 per mensem for pay from Rs. 41 to Rs. 60. | Rs. 31 per mensem upto a pay of Rs. 39, Rs. 33 per mensem for a pay of Rs. 40 and Rs 34 per mensem for a pay of Rs. 41 to Rs. 60. |
| (iii) House rent allowance. | Rs. 9 per mensem. | Rs. 7 per mensem up to a pay of Rs. 39 and Rs. 9 per mensem from Rs. 40 to Rs. 60. |
| (iv) Laundry allowance. | Rs. 1·50 per mensem. | Rs. 1·50 per mensem. |
| (v) Batta .. .. | Rs. 1·12 per diem. | Rs. 1·12 per diem. |

Sri K. VINAYAKAM : Sir, how do the pay, dearness allowance and other allowances compare with the pay, dearness allowance and other allowances paid to the drivers and conductors employed in the Kanyakumari district which we have now taken over under our administration?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, the initial pay of the Madras drivers and conductors compares favourably with the pay given in the Kanyakumari branch. That is so far as the starting salary is concerned. But, when they come to the end of their service, the pay scale of the Kanyakumari branch drivers and conductors is higher. To this extent, there will be some difference in their pay and allowances.

**Sri A. GOVINDASAMY** : ஸார், சர்க்கார் பஸ்களில் வேலை செய்யும் ட்ரைவர்கள், கண்டக்டர்கள் இவர்களுக்கு சம்பள உயர்வு வேண்டும், படி உயர்வு வேண்டும் என்று சர்க்காருக்கு அவர்களிடத்தில் இருந்து ஏதாவது கோரிக்கை வந்திருக்கிறதா ? அப்படியென்றுல் அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

[11th September 1958

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த மாதிரியுள்ள விஷயங்களுக்கு அவர்களிடமிருந்து சர்க்காருக்கு கோரிக்கை வராமல் இருக்கும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் நினைத்தார்களா என்னவென்று தெரியவில்லை. கோரிக்கை வந்திருக்கிறது. சர்க்கார் அதை பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது.

SRI S NAGARAJA MONIGAR : இப்போதுள்ள சம்பளம், படி இவைகளுக்கு போதிய கண்டக்டர்கள், ட்ரைவர்கள் கிடைக்கிறார்களா ? அப்படி கிடைக்காத சந்தர்ப்பங்கள் இதுவரையில் ஏற்பட்டிருக்கின்றனவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கிறது என்ற காரணத்திற்காகக் குறைவான சம்பளம் கொடுப்பது என்பது சரியல்ல.

SRI T. S. RAMASWAMY PILLAI : May I know the pay scales and dearness allowance given to the drivers and conductors in the Kanyakumari district, if the Government have the information in their possession?

THE HON. SRI R. VENKATARAMAN : Permanent drivers get a pay scale of Rs. 50—3—65—4—85 (E.B.) 5—110. Temporary drivers are given Rs. 40—2—50 (E.B.) 3—80. Permanent conductors are paid in the scale of Rs. 35—3—65 (E.B.) 3—80 and temporary conductors get Rs. 35—3—65.

SRI T. T. DANIEL : Is it a fact that many of the conductors, drivers, and checking inspectors in the Kanyakumari district are graduates and graduates in law?

THE HON. SRI R. VENKATARAMAN : That is so, Sir.

*Cycle, Match Factories*

* 108 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழிலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவில் சைக்கிள் தொழிற்சாலையும், தீக்குச்சித் தொழிற்சாலையும் ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ? அது இப்போது எந் நிலையில் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. It is proposed to start a cycle assembly unit in the Tanjore district. Sanction of financial assistance from the Government of India is awaited.

The establishment of a match factory on industrial co-operative basis in the Tanjore district has been sanctioned in February 1958. The Society was registered in March 1958 and preliminary arrangements are being made to start the factory.

SRI A. VEDARATHNAM : இந்தத் தொழிற் சாலைகளில் எவ்வளவு பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று எதிர்ப்பார்க்கப்படுகிறது ? இந்தத் தொழிற்சாலைகள் எங்கெங்கே ஏற்படுத்தப்படப்போகின்றன ? ஆரம்பிக்கப்படப்போகும் சைக்கிள் தொழிற்சாலையில் " அஸெம்பிளி " மட்டும் நடக்குமா, அல்லது சைக்கிள் உறுப்புகள் செய்வதும் மேற்கொள்ளப்பட்டு நடக்குமா ? இவைகள் எப்போது துவக்கப்படும் ?

11th September 1958]

**The Hon. Sri R. VENKATARAMAN** : சைக்கிள் தொழிற்சாலையைப் பொறுத்த அளவில், அஸெம்பிளி யூனிட் தான் வைக்கப்படும். அதாவது பல பாகங்களைக் கொண்டு வந்து சைக்கிளாகச் செய்யும் யூனிட் வைக்கப்படும். அதற்கு மத்திய சர்க்கார்டமிருந்து பொருளுதவி கேட்டிருக்கிறோம். அது கிடைத்தவுடன் ஆரம்பிக்கப்படும். அதிலே எவ்வளவு பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று இப்போது சொல்வதற்கில்லை. ஏனென்றால், இந்த ராஜ்யத்தில் இந்த மாதிரி 3 யூனிட்டுகள் ஆரம்பிக்கவிருக்கின்றன. ஒவ்வொன்றிலும் 6,000 சைக்கிள்கள் செய்யலாம் என்ற யோசனை இருக்கிறது. ஆகவே அதைச் செய்து பார்க்கும்போதுதான் எத்தனை பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று சொல்ல முடியும். தீப்பெட்டித் தொழிற்சாலையைப் பொறுத்த மட்டில், அதை பட்டுக்கோட்டையில் வைக்கப் போகிறார்கள். அதற்கான இடம் வாங்கப்பட்டிருக்கிறது. கட்டிடம் கட்டும் வேலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

**Sri M. C. MUTHUKUMARASWAMY** : ஸார், இந்த சைக்கிள் தொழிற்சாலைக்கு மத்திய சர்க்காரிடமிருந்து கோரிய மான்யத் தொகை எவ்வளவு என்று அறிவிக்கலாமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : ரூ. 5,63,000.

**Sri A. V. P. ASAITHAMBI** : தலைவர் அவர்களே, தற்போது நடைபெற்று வருகிற டி. ஐ. சைக்கிள் கம்பெனியாவது மக்களுடைய தேவைக்கேற்ப சப்ளை செய்ய முடியாத நிலையில் இருக்கிறது. அப்படி தேவைக்கேற்ப சப்ளை செய்ய முடியாததற்கு, போதிய அளவு இறக்குமதி கிடைக்க வில்லை என்று சொல்வது உண்மையா ? இந்த நிலைமையை சீர் செய்ய சர்க்கார் முயற்சிக்குமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : நம் நாட்டில் சைக்கிள்கள் தேவை அதிகரித்துக்கொண்டே போகின்றது. தற்போது டி. ஐ. சைக்கிள் கம்பெனி உற்பத்திசெய்வது போதவில்லை யென்பது உண்மை. அதற்குக் காரணம் இறக்குமதி அனுமதிக்காதது என்று சொல்வதற்கில்லை. அதற்குப் பல கராணங்கள் இருக்கின்றன. அவற்றில் இதுவும் ஒன்றாக இருக்கலாம்.

**Sri A. R. SUBBIAH MUDALIAR** : அந்த மூன்று யூனிட்டுகள் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கப்படவிருக்கின்றன ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : ஒன்று தஞ்சையில், ஒன்று வேலூரில், மற்றொன்றைப்பற்றி இப்போது எனக்குஞாபகம் இல்லை.

**Sri V. SANKARAN** : தஞ்சையைத் தேர்ந்தெடுத்ததின் காரணம் என்ன ? இந்தத் தொழிற்சாலையை அங்கு வைப்பதற்கான அனுகூலங்கள் இருக்கின்றன என்ற காரணத்திற்காகவா அந்த இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : சிறு தொழிற்சாலைகளை பரவலாக வைக்கப்படவேண்டுமென்ற கொள்கை அடிப்படையில் இவைகள் வைக்கப்படுகின்றன.

### *Iron ore*

* 115 *Q.*—**Sri M. JAGANNATHAN** : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any representation was received by the Government recently regarding the existence of iron ore deposits in Thalakundram village in the South Arcot district and Mausurabad in the North Arcot district;

(*b*) if so, whether any departmental officials have inspected those places; and

(*c*) if so, the results thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) In accordance with the Field Season Programme of the Geological Survey of India for 1957–58, an officer of the Geological Survey of India investigated the occurrence of iron ore in the area. According to him, the ore is of moderate to low grade and the reserves appear to be limited. The investigations conducted by the State Government also generally confirm this view.

* SRI M. JAGANNATHAN : What are the potentialities of these deposits of iron ore? If they are exploited, to what extent will they be of use to our State?

THE HON. SRI R. VENKATARAMAN : The information with the Government is that these are of low grade and that even the quantity of ore available is very limited.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், வட ஆற்காடு ஜில்லாவில் இரும்புக் கனிப் பொருள்கள் மட்டுமல்ல, கண்ணாடி, பீங்கான் சாமான்கள் செய்ய உபயோகப்படும் கனிப் பொருள்கள், சிமெண்ட் செய்ய உபயோகப்படும் கனிப் பொருள்கள், பென்ஸில் செய்வதற்கு வேண்டிய " லெட் " போன்ற கனிப் பொருள்கள், மைகா போன்ற கனிப் பொருள்கள், மற்றும் பலதரப்பட்ட கனிப் பொருள்கள் கிடைக்கின்றன என்பதை பிளானிங் போர்டிலே வைத்து, இதை சர்க்காருடைய கவனத்திற்கு கொண்டு வரவேண்டுமென்று சொல்லப்பட்டது. அது சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா ? அப்படியானால், உடனடியாகப் பரிசீலனை செய்வதற்கு சர்க்கார் தீவிர கவனம் செலுத்துமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் ஒரு ஜியாலாஜிகல் எக்ஸ்பெர்ட் ஆக இருந்து இதைச் சொல்லியிருந்தால் நான் வரவேற்றிருப்பேன். ஏதோ சிறு சிறு பண்டங்கள் சிற்சில இடங்களில் கிடைப்பதால் எல்லாம் கிடைக்கிறது என்று சொல்வது சரியல்ல. ஜியாலாஜிகல் சர்வே வட ஆற்காடு ஜில்லாவில் ஆரம்பித்து, ஆராய்ச்சிகள் நடத்தி ரிசல்ட் வந்தவுடன்தான் என்னென்ன பொருள்கள் கிடைக்கின்றன என்று சொல்ல முடியும்.

SRI S. NAGARAJA MONIGAR : Since the iron content in the ore largely available in Salem district is said to be the lowest, is a continuous search for good ore being made by way of surveys so that better quality ore may be found out?

THE HON. SRI R. VENKATARAMAN : This is being done. We are now investigating the possibilities in the Nilgiris district, but the fact that the iron ore in Salem is of low quality need not disturb the hon. Member because even in European countries this is used by adopting the low shaft furnace process.

SRI P. S. K. LAKSHMIPATHIRAJ : ஸார், ராமநாதபுரம் ஜில்லாவில், சிவகங்கைப் பகுதியிலே, பெயிண்டுகள் செய்வதற்கான தாதுப் பொருள்கள் கிடைக்கின்றன என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ?

MR. SPEAKER : இதைப்பற்றி தனிக் கேள்வி போடவேண்டும்.

11th September 1958]

Sri A. V. P. ASAITHAMBI : இந்தக் இரும்புக் கனி கிடைப்பது போல பற்பல இடங்களில் பல மூலப் பொருள்கள் இருப்பது ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றது. இவைகளைப் பயன் படுத்த முடியாமல் இருப்பது மத்திய சர்க்கார் தென்னகத்தைப் புறக் கணிக்கிறது என்ற காரணத்தினாலா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : சில இடங்களில் கனிப் பொருள்கள் கிடைக்கின்றன. இவைகளைப் பயன்படுத்த வேண்டுமென்றால், தனியார் துறையில் யாரும் முன்வரவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். சர்க்கார் துறையில் எல்லாவற்றையும் செய்ய முடியாது. அப்படியும் செய்யலாமென்று வரி போட்டால் எதிர் கட்சிக்காரர்கள் கூச்சலிடுகிறார்கள். இதற்கு என்ன செய்வது என்று புரியவில்லை.

*Paper manufacturing factory*

* 118 *Q.*—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state why the proposal to start a Newsprint factory has been given up for the present?

The Hon. Sri R. VENKATARAMAN : The raw materials required for a newsprint factory will not be available in sufficient quantities until 1965 assuming that the present programme of planting of blue gum and wattle proceed according to plan and there are no mishaps like insect pests and other incidental risks. It would, therefore, not be worthwhile to plan a factory now to go into production 8 or 10 years later. The matter will be kept in view and steps taken at the appropriate time.

Sri A. A. RASHEED : Is the Hon. Minister aware that there is a strong feeling in our State that South India is being neglected by the Union Government in the matter of location of big industries?

Mr. SPEAKER : The hon. Member may raise this question during the discussion on the budget and not at question time.

Sri S. B. ADITYAN : Have the Government investigated the possibilities of starting a newsprint factory utilising sugarcane bagasse which is available in plenty in this State?

The Hon. Sri R. VENKATARAMAN : I have discussed this matter with the Industrial Adviser to the Government of India, Dr. Nagaraja Rao, and I am informed that a newsprint factory can be established with raw materials like blue gum, wattle, etc.

Mr. SPEAKER : The next three questions—119, 120, and 125-B all refer to paper manufacture. The Hon. the Minister will answer them all and then I will give chance for supplementary questions being put.

*119 *Q.*—Sri P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) காகித உற்பத்திச் சாலைகள் சென்னை சர்க்காராலும், தனிப்பட்டவர்களாலும் எந்தெந்த இடங்களிலே நடத்தப்பட்டு வருகின்றன ?

(ஆ) பேப்பர் உற்பத்திக்கான கச்சாப் பொருள்கள் எந்தெந்த இடங்களில் கிடைக்கின்றன ?

(இ) நியூஸ் பிரிண்டு காகிதம் எந்தெந்த இடங்களிலிருக்கும் காகித உற்பத்திச் சாலைகளில் உற்பத்தி செய்யப்படுகிறது ?

(ஈ) கிளேஸ் பிரிண்டு காகிதம் எந்தெந்த காகித உற்பத்தி தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்யப்படுகிறது ?

[11th September 1958

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) There is no paper factory in Madras.

(*b*) The chief raw materials required for the manufacture of paper are bamboo, blue gum, wattle, and eta reed and they are available in this State in Bhavanisagar, Mettur and Papanasam areas.

(*c*) & (*d*) There is no paper factory in this State. These questions do not, therefore, arise so far as this State is concerned. There is no ready information regarding the production of paper in other States.

* 120 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to have a paper mill factory at Ambasamudram in Tirunelveli district?

THE HON. SRI R. VENKATARAMAN : According to the Industrial policy of the Government of India, paper industry has been left to be developed in the private sector.

The Government of India have already granted a licence in February 1957 for starting a paper mill with a daily production capacity of 30 tons at Vikramasingapuram, Ambasamudram taluk in Tirunelveli district. But as no effective steps to establish the factory have been taken, the question of cancelling the licence and giving it to some other party is under the consideration of the Government of India.

* 125-B *Q*.—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have examined the possibilities of paper manufacture from palmyra pulp;

(*b*) whether there is any paper mill engaged in making paper out of palmyra pulp in our State; and

(*c*) whether the Government have any proposals to set up such mills in areas where palmyra grows in large numbers?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) (*b*) & (*c*) No, Sir.

SRI P. G. MANICKAM : கரும்புச் சக்கையிலிருந்து காகிதங்கள் செய்யலாம் என்ற ஒரு யோசனை பத்திரிகை மூலமாக வெளியிடப் பட்டிருக்கிறது. இதைப் பரிசீலனை செய்ய சர்க்கார் முன்வருமா ?

MR. SPEAKER : இதைப்பற்றித்தான் கனம் மந்திரி அவர்கள் இப்பொழுது சொன்னார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I must make a difference between newsprint and ordinary paper. It is possible to make ordinary paper from bluegum. But the better raw material is bamboo which is available in plenty in our State. Why then go for substitutes, when nobody has come forward to establish a factory.

11th September 1958]

SRI K. SATTANATHA KARAYALAR : இந்தத் தனியார் துறையில் கொடுக்கப்பட்ட லைசென்சை அன்னூர் பயன்படுத்திக்கொள்ளாமல் இருப்பதற்கு காரணம் என்ன ? அதன்மீது நடவடிக்கை எடுக்க காலதாமதம் ஆவதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : சாதாரணமாக லைசென்சு வாங்கினவர்கள் தொழில் நடத்தவேண்டுமென்று சொன்னால் சர்க்காரிடம் அடிக்கடி வருகிறார்கள். என்னென்ன வேண்டுமென்பதை கேட்டு வாங்கிக்கொள்கிறார்கள். ஆனால் நடத்துவதற்கு சக்தியில்லாதவர்களோ, இஷ்டம் இல்லாதவர்களோ சர்க்காரைப் பார்ப்பதுமில்லை, கேட்பதுமில்லை. ஆகவே காரணம் தெரியவில்லை.

SRI K. RAMACHANDRAN : பனைமர பல்ப்பிலிருந்தும் ஓலைகளிலிருந்தும் பேப்பர் செய்யமுடியுமென்று சொல்லப்படுகிறது. அத்துடன் புதுக்கோட்டையில் பல்மைரா பல்ப்பிலிருந்து பேப்பர் செய்வதற்கு 6 லட்சம் ரூபாய் செலவில் இயந்திரங்கள் கொண்டுவரப்பட்டு, வேலை தொடங்காமல் இருக்கிறது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ? அப்படி என்றால் இந்த முறையை உபயோகித்து பேப்பர் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பல்மைரா பல்ப்பிலிருந்து பேப்பர் செய்ய முடியாது என்பது தான் எங்களுக்கு கிடைத்திருக்கும் தகவல். இப்பொழுது ஏதாவது ரிஸர்ச் செய்துகொண்டிருக்கலாம். அது சர்க்காருக்குத் தெரியாது.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : I wanted to ask about the Vikramasingapuram Paper Mill. Did the Government investigate why the party could not start the mill? We are in need of paper very badly. And that is really a good place and after the project work in the Manimuthar Project is over, there are a number of Government buildings avilable. Therefore that would be a very suitable place to start a paper mill.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I would like the hon. Member to take some interest in the matter and see that it comes up.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : தஞ்சை ஜில்லாவில் காகிதப்பட்டரை என்ற கிராமத்திலேதான் முதன் முதலாக இந்த தேசத்திலேயே காகிதம் உற்பத்தியான இடம் என்ற காரணத்தினால் அதற்கு அப்பெயர் வழங்கிவருகிறது. ஆகவே காகிதத் தொழிற்சாலையை அந்த இடத்தில் அமைப்பதற்கு சர்க்கார் முயற்சிக்குமா ? (சிரிப்பு.)

THE HON. SRI R. VENKATARAMAN : பண்டைக் காலத்தில் இருந்த முறைகள் ஒன்று மறந்துபோய்விட்டன அல்லது அழிந்து விட்டன. இப்பொழுது தெரிந்த விஞ்ஞான ரீதியிலே அங்கு பேப்பர் தொழிற்சாலை அமைப்பதற்கு வசதியில்லை.

SRI M. WILLIAM : Sir, in view of the copious supply of bamboos in the reserved forest area of Kanyakumari district will the Government take steps to start a paper mill in the Kanyakumari district?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I have already said that the paper industry is in the private sector and whoever takes interest in the matter will receive the best co-operation from the Government.

[11th September 1958

SRI R. SWAMINATHA MERKONDAR : வைக்கோலிலிருந்து பேப்பர் செய்வதாகச் சொல்லுகிறார்களே, அது மெய்தானா ? (சிரிப்பு).

THE HON. SRI R. VENKATARAMAN : பேப்பர் போர்டுகள் செய்யலாம்.

SRI N. R. THIAGARAJAN : மதுரை மேலமாசி வீதியில் "பாபநாசம் பேப்பர் மில்ஸ்" என்ற ஒரு போர்டு தொங்கிக்கொண்டிருக்கிறது. அப்படி ஒரு மில் நடந்து வருகிறதா, அரசாங்கத்தினிடம் அனுமதி பெற்றிருக்கிறார்களா ? அப்படி இல்லையென்றால் என் அந்த போர்டு தொங்கிக் கொண்டிருக்க வேண்டும் ? (சிரிப்பு.)

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த போர்டை எடுப்பதற்கு மத்திய சர்க்கார் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். (நீடித்த சிரிப்பு.)

SRI A. MARIAPPAN : மேட்டூரில் காகித உற்பத்திசாலையை ஏற்படுத்துவதற்கு யாராவது முன்வந்திருக்கிறார்களா ? அப்படியிருந்தால் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : மேட்டூர் கெமிகல்ஸ் அண்டு இண்டஸ்டிரிஸ் 50 டன் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலைக்கு லைசென்சு வாங்கியிருக்கிறார்கள். அவர்கள் இது வரையிலும் "foreign collaboration" கிடைக்காததினால் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. சமீபத்தில் அவர்கள் அமெரிக்காவில் இருக்கும் ஓரிரண்டு கம்பெனிகளிட மிருந்து "foreign collaboration" பெறுவதற்கு முயற்சி செய்து கொண் டிருக்கிறார்கள். அது முடிவடையவில்லை.

SRI V. SANKARAN : லைசென்சு கொடுக்கப்பட்டு அதை உபயோகப்படுத்தாமலிருக்கும் தனி நபர் யார் ? இனியாவது இனிஷியல் டிபாசிட் வாங்கிக்கொண்டு, லைசென்சுபடி நடக்கவேண்டும் என்ற நிபந்தனையுடன் லைசென்சு கொடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சட்டசபையில் அங்கத்தினர்களிடம் பெயரை எல்லாம் சொல்லிவிட்டால் கொஞ்சநஞ்சம் தொழில் நடத்தவேண்டும் என்று நினைப்பவர்களும்கூட முன்வரமாட்டார்கள்.

SRI T. KARIA GOUNDER : வட ஆற்காடு ஜில்லாவிலே சாத்தனூர் அணைக்கட்டு கட்டி முடிந்ததும் அங்கே அநேக கட்டிடங்கள் காலியாக இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? வட ஆற்காடு ஜில்லாவிலே ஜவ்வாது மலையிலும் இன்னும் அநேக இடங்களிலும் மூங்கில் கிடைப்பதனால், அங்கு பேப்பர் தொழிற்சாலையை அமைக்க சர்க்காருக்கு உத்தேசம் இருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்காருக்கு உத்தேசம் இல்லை. எந்தெந்த இடங்களில் வசதியிருக்கிறதோ, அங்கு தனியார் துறையிலுள்ளவர்கள் நடத்துவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : விக்கிரமசிங்கபுரத்தில் தனியாருக்கு கார்ப்பொரேஷன் பங்கு தொகை கொடுத்து உதவுவதற்கு சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்கள் எங்களை அணுகி எந்த விதமான உதவியும் கேட்காமல் இருக்கும்போது என்ன உதவி செய்ய முடியும் என்று எங்களுக்குத் தெரியவில்லை.

11th September 1958]

*Bharadwajeeswarar temple*

* 148 *Q.*—Sri K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the extent of landed property like house-sites and other agricultural lands that belong to the Devasthanam of Bharadwajeeswarar temple, Puliyur, Kodambakkam, Madras;

(b) the value of these properties;

(*c*) the annual rental income derived by the temple authorities from these properties;

(*d*) the extent of Government poramboke lands occupied by the tenants of the devasthanam; and

(*e*) the annual rent collected on these lands?

The Hon. Sri M. BHAKTAVATSALAM :

| | | | |
|---|---|---|---|
| (*a*) | 1. Houses | ... ... ... | 3 |
| | 2. House-sites | .. .. .. | 14 acres 78 cents. |
| | 3. Agricultural land | ... ... | 10 acres 80 cents |
| (*b*) | 1. Houses | ... ... ... | Rs. 9,500 |
| | 2. House-sites | ... ... | Rs. 55,500 |
| | 3. Agricultural land | .. ... | Rs. 68,200 |
| (*c*) | 1. Houses | ... ... ... | Rs. 66 |
| | 2. House-sites | ... ... ... | Rs. 5,134 |
| | 3. Agricultural land | ... ... | Rs. 315 and 80 measures of paddy. |

(*d*) There is a land to the extent of 15 acres classified as "eripulam" in the village accounts vested in the Government under section 3 (*b*) of the Madras Estates Abolition Act, 1948. This land and some other inam lands belonging to one Sri Vigneswarar Devasthanam are inter-linked and the limits of the inam lands and the land described as "eripulam" could not be determined as they are in an unsurveyed area.

(*e*) Rs. 3,840.

Sri K. VINAYAKAM : இந்தக் கோவில் பக்கத்திலிருக்கிற ஏரி நிலம் என்று சொல்லப்படுகிற இந்த அரசாங்கப் புறம்போக்கு நிலத்தில் குடியிருக்கும் மக்களிடமிருந்து இந்தக் கோவில் தர்மகர்த்தாக்கள், அந்த நிலம் கோவிலைச் சேர்ந்தது என்று தவறாகச் சொல்லி, அவர்களிடமிருந்து ரெண்ட் வசூல் செய்வது சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படியானால் அந்த நிலம் சர்க்கார் நிலமாக இருப்பதனால், அதை குடி மக்களுக்கு ஜாரி செய்ய சர்க்கார் முயற்சி எடுப்பார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : நான் பதிலளிக்கையில் தேவஸ்தானத்திற்கு சொந்தமானது, சொந்தமில்லாதது ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டிருக்கிறது என்று சொன்னேன். சர்வே செய்கிற வரையிலும் அதைப் பிரிக்க முடியாது. சர்வே செய்யப்பட்ட பிறகு தேவஸ்தானத்திற்கு எது சொந்த மில்லையோ அது தனியாகப் பிரிக்கப்படும். அதற்குப் பிறகு ஜாரி செய்யப்படும்.

[11th September 1958

* 150-E *Q.*— SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) why certain lands known as "Gangaram Thottam" in Puliyur, Kodambakam, Madras, belonging to Bharadwajeeswarar Devasthanam, Puliyur, are in possession of the Collector of Madras;

(*b*) whether the Commissioner of Religious Endowments has verified the records of the devasthanam or that of the Collector regarding the titles of this thottam; and

(*c*) whether it is a fact that this Gangaram thottam was given as inam under the title of "Thannir Pandal" by Gangaram to the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The lands are not in the possession of the Collector of Madras.

(*b*) Yes, Sir.

(*c*) There are no records to prove this.

* 150-F *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the extent of Gangaram thottam of Puliyur belonging to Bharadwajeeswarar temple, Kodambakkam, Madras;

(*b*) its present value;

(*c*) whether one M. R. Rajam Ayyar filed a suit to recover the same from the temple authorities;

(*d*) whether any compromise was effected between the temple authorities and M. R. Rajam Ayyar;

(*e*) if so, on what basis was such compromise agreed upon;

(*f*) whether the Commissioner of Religious Endowments permitted such a compromise; and

(*g*) whether the Government are in receipt of a complaint about this from M. R. V. B. Ramaswamy, Kodambakkam?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :

(*a*) 3 acres 50 cents.

(*b*) Rs. 40,000.

(*c*) No.

(*d*) *to* (*f*) Do not arise.

(*g*) Yes, by the Commissioner.

SRI K. VINAYAKAM : இந்தத் தண்ணீர் பந்தல் என்று சொல்லப்படுகிற இந்த கங்காராம் தோட்டம் இந்தக் கோவிலுக்கு தர்ம கர்த்தா ராமநாத பாண்டியனால் கொடுக்கப்பட்டது என்று, இப்பொழுது தேக்கனூர் எஸ்டேட் என்று சொல்லப்படுகிற அடிப்படையிலே கலெக்டரிடம் தஸ்தவேஜுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதை அரசாங்கம் ஆராய்ந்து பார்த்து கோவிலுக்கு நியாயத்தைச் செய்வார்களா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுவரையில் ஆராய்ந்து பார்த்ததில் ரிக்கார்டுகளிலிருந்து ஒன்றும் புலப்படவில்லை. சர்வே செய்தபிறகு நிலைமை தெரியவரும்.

11th September 1958]

SRI K. VINAYAKAM : ஓலை எடுகளாக இருந்த பழைய தஸ்தாவேஜுகள் கலெக்டரிடம் கொடுக்கப்பட்டு, அவைகள் சர்வகலாசாலையிலுள்ள பேராசிரியர்களைக்கொண்டு ரூ. 1,000 பீஸ் கொடுத்து தமிழிலே மொழி பெயர்க்கப்பட்டு, கலெக்டர் ஆபீஸில் இருக்கின்றன. சர்வே செய்யும்போது இந்த ரிகார்டுகளையும் ஆராய்ந்து பார்த்து உண்மையான சொந்தக்காரர்கள் யார் என்று பரிசீலனை செய்து, இந்த கங்காராம் தோட்டம் தண்ணீர் பந்தல், தனிப்பட்டவர்களுக்கு மாறியிருந்தால். அதைத் திரும்பவும் பெறுவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அற நிலைய பாதுகாப்பு இலாகாவிடம் இருக்கும் தகவலிலிருந்து ஒன்றும் புலப்படவில்லை என்று அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். சர்வே செய்யும்போது எல்லா நிலைமைகளும் பரிசீலனை செய்யப்பட்டு, வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

MR. SPEAKER : The Hon. the Leader of the House is not in Madras and therefore all the questions addressed to him and the Hon. the Chief Minister will be taken up after they come here.

*Boring equipment*

* 152 *Q*.—SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any boring equipment has been taken by the Agricultural Department from the Industries Department ; and

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) The Special Officer for Reorganization recommended that the work relating to the maintenance of bore-well sets and the general administration relating to it attended to by the District Engineering Branch of the Industries and Commerce Department may more appropriately be entrusted to the Engineering Branch of the Agricultural Department or to the Board of Revenue which has a special Engineering staff under it for improvement of Minor Irrigation works. The Government considered the recommendation of the Special Officer and decided that the work relating to the bore-well sets should be transferred to the Engineering branch of the Agricultural Department with effect from 1st April 1958.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Are the Government aware of the fact that even after the transfer, the position is not quite satisfactory?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Transfer has been made but the necessary staff has to be provided for and that is being looked into.

SRI R. SRINIVASA IYER : May I know how many power boring sets are owned by the Government and how many of them are useful and in service?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There are 29 power-drills. I believe all of them are in use.

[11th September 1958

*Water supply*

* 154 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கடந்த ஆறுமாதங்களில் தஞ்சை ஜில்லாவில் கிராமத் தண்ணீர் சப்ளை சம்பந்தமான விரிவான திட்டத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The amount spent in the Tanjore district under the Rural Water-supply Comprehensive Scheme during the period from November 1957 to April 1958 is Rs. 1,90,955.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இன்னும் பல இடங்களில் குடிப்பதற்கு தண்ணீர் வசதி இல்லை என்று புகார் இருப்பதன் காரணமாக, இந்த மான்யத் தொகையை கொஞ்சம் அதிகப்படுத்தி, வேலையை துரிதப் படுத்துவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா என்று அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த ராஜ்யம் மொத்தத் திற்கும் ரூ. 30 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதிலே இந்த ஜில்லா விற்கு ரூ. 2 லட்சம். அந்த ரூ. 2 லட்சத்தில் அநேகமாக முக்காலே அரைக் கால் பாகம் செலவழிந்துவிட்டது.

*Muniyappa Gounder Motor Service*

* 155 *Q.*—SRI N. MARUDACHALAM : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the issue of bonus for the year 1956–57 to the workers employed in the B. Muniyappa Gounder Motor Service is under conciliation before the Labour Officer, Coimbatore?

THE HON. SRI R. VENKATARAMAN : It is reported that there is no company by the name of B. Muniyappa Gounder Motor Service at Coimbatore.

SRI N. MARUDACHALAM : இந்த சமரஸம் எந்த நிலையில் இருக்கிறது ?

MR. SPEAKER : அப்படி ஒரு கம்பனியே இல்லை என்று மந்திரி அவர்கள் சொன்னாரே ?

*Houses for Harijans*

* 156 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of houses built for Harijans in the South Arcot district in 1957; and

(*b*) the amount spent on them?

THE HON. SRI P. KAKKAN : (*a*) 266.

(*b*) Rs. 74,511.

11th September 1958]

SRI M. JAGANNATHAN : திண்டிவனம் தாலுகாவில், உலக்கூர் பிர்க்காவில் கீழ்க்கரணி என்ற இடத்தை சமீபத்தில் அமைச்சர் அவர்கள் கூட பார்வையிட்டார்கள். இந்த இடத்தில் இன்னும் ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கப்படவில்லை. அதிகமாக காலதாமதம் ஆகிறது இன்னும் பல இடங்களிலும் இம்மாதிரி வீடுகள் கட்டிக்கொடுப்பதில் கால தாமதம் ஆகிறது. காலதாமதம் ஆகாமல் கூடிய சீக்கிரம் ஏழை ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : எந்தெந்த இடத்தில் வீடுகள் கட்டுவதற்காக கலெக்டர் சிபார்சு செய்கிறாரோ, அந்த இடங்களில் வீடுகள் கட்டிக் கொடுக்க ஏற்பாடு செய்யப்படுகிறது. வெகு துரிதமாகவே வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

SRI A. V. P. ASAITHAMBI : இதுவரையிலும் ஹரிஜனங்களுக்கு பல இடங்களில் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கும் வீடுகள் சிறிய காற்றிற்கும், மழைக்கும் கூட விழுந்துவிடக்கூடிய நிலைமையில் இருக்கிறது என்று ஏற்கனவே புகார் வந்திருக்கிறதா ? அப்படி, புகார் வந்திருக்கிறது என்று சொன்னால், அதற்காக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இனிமேல் கட்டப்படுகின்ற வீடுகளையாவது நல்ல முறையில் கட்டுவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இம்மாதிரி புகார் ஒன்றும் வரவில்லை. அங்கத்தினர் அவர்களின் அபிப்பிராயம் தான் அப்படி இருக்கிறது என்று நான் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. கட்டப்படும் வீடுகளெல்லாம் நன்றாக கட்டப்படுவதற்குத்தான் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஏதோ ஒரு சில இடங்களில் ஏதாவது குறை இருந்தால், பூராவும் அம்மாதிரி விழுந்துவிடுகிறது என்று சொல்லமுடியாது என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : கனம் ஆர். வெங்கடராமன் மேல் சபைக்கு போகவேண்டியிருப்பதால், அவர்கள் பதில் சொல்லவேண்டிய கேள்விகளை முதலில் எடுத்துக்கொள்ளுகிறேன்.

*Co-operative Building Societies*

*163 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கூட்டுறவுக் கட்டிடச் சங்கங்களின் கடன் மனுக்களை ஜில்லா டிபுடி ரிஜிஸ்ட்ரார்களே சாங்ஷன் செய்யும்படி பவர் கொடுக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

*Rural Housing Programme*

*169 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any communication has been received from the Ministry of Community Development, Government of India, regarding the selection of villages for the execution of rural housing programme in the State; and

(*b*) if so, the action taken thereon?

[11th September 1958

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) Thirty-five villages have been selected in the Community Development and National Extension Service areas in the Kanyakumari, North Arcot, Tirunelveli, Ramanathapuram, Tiruchirappalli, Tanjore and Coimbatore districts.

Selection of 70 more villages is under the consideration of the Government.

SRI M. JAGANNATHAN : May I know on what basis the selection of villages is made?

THE HON. SRI R. VENKATARAMAN : On the recommendation of Collectors.

*Slum clearance*

* 172 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have any scheme for—

(i) clearing the slum on the lake bund abutting Mount Road from the Sun Theatre to the Collector's Office at Saidapet; and

(ii) rehabilitating the dwellers therein elsewhere?

THE HON. SRI R. VENKATARAMAN : (i) and (ii) Apparantly the member refers to the Mambalam Tank Bund area where 1,800 families are living in huts. It is proposed to rehabilitate 600 families in the same area, and to shift and resettle the remaining families in the North Saidapet, Trustpuram and Puliyur Scheme areas of the City Improvement Trust.

SRI K. VINAYAKAM : இங்கு இப்பொழுது குடியிருப்பவர்களில் 600 குடும்பங்களுக்கு மட்டும் இங்கேயே இடம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இங்கு இருக்கும் 1,800 குடும்பங்களில் எந்த 600 குடும்பங்கள், இங்கு இடம் பெறவேண்டுமென்பது பற்றி அவர்களுக்குள்ளேயே சச்சரவுகள் இருக்கின்றன. இதை அரசாங்கம் எப்படி தீர்த்துவைக்கப் போகிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்கு 7, 8 "கண்டிஷன்கள்" போட்டிருக்கிறோம். இந்த "கண்டிஷன்களுக்குள்" யார் வருகிறார்களோ, அவர்களுக்கு அந்த இடத்தில் இடம் கொடுக்கப்படும். அந்த கண்டிஷன்கள் பின்வருமாறு :—

(*a*) The families who are prepared voluntarily to shift elsewhere may be eliminated.

(*b*) The families who are in habitual default of full competitive rent irrespective of their age of encroachment may be eliminated.

(*c*) The families who are living in the area for 7 years and more may be selected.

(*d*) The families who have their work-spot very near the Tank Bund may be selected.

(*e*) The families who have paid in full the full competitive rents or whose percentage of arrears is small, may be selected.

11th September 1958]

SRI K. B. S. MANI : சேரி ஒழிப்பு, சேரி ஒழிப்பு என்று பல முறை கேட்டுக்கொண்டிருந்தபோதிலும், பழைய சேரிகளை ஒழித்து விட்டு, புதிய சேரிகளை அரசாங்கம் தயார் செய்கிறது. ஹரிஜனங்களுக்கு மட்டும் தனிப்பட்ட சேரி என்று இல்லாமல் அவர்களுக்கு மற்றவர்களோடு சேர்ந்து வாழ்வதற்குள்ள வசதியை அரசாங்கம் செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சேரி ஒழிப்பு என்று சொல்லி, புதிய சேரிகள் உண்டாக்கப்படவில்லை. அப்படியிருந்தால் இத்தனை அங்கத்தினர்களும் கேள்வி கேட்கமாட்டார்கள். புதிய இடத்தில், ரோடு போட்டு, விளக்கு வசதி, தண்ணீர் வசதி போன்ற வசதிகளோடு ஹரிஜனங்களுக்கு வீட்டுவசதி அளிப்பதற்கு யோசனைகள், "பிரபோஸல்" போடப்படுகின்றன. அதன் காரணமாகத்தான் அதிக அங்கத்தினர்களும் இதைப் பற்றி கேட்கிறார்கள். ஜனங்களும் அதை விரும்பி கேட்கிறார்கள்.

SRI K. VINAYAKAM : இந்த 1,800 குடும்பங்களில், 600 குடும்பங்களுக்கு அங்கே இடம் கொடுத்துவிட்டு, மீதி 1,200 குடும்பங்களை திரும்பவும் கோடம்பாக்கத்திற்கு கொண்டுவர அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. அதைவிட, கிண்டி, சைதாப்பேட்டை, அடையார் போன்ற இடங்களில் வெட்டவெளி நிலங்கள் அதிகமாக இருப்பதனால், அங்கே அவர்களை மாற்றுவதற்கு அரசாங்கம் முற்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கோடம்பாக்கத்தில் நல்ல அழகான முறையிலே புதிதாக அமைக்கப்பட்டிருக்கிற இடமாக இருக்கும். அது சேரியாக இருக்காது என்று மீண்டும் கனம் அங்கத்தினர்களுக்கு உறுதி கூறுகிறேன்.

SRI M. JAGANNATHAN : May I point out to the Hon. Minister that it is not the provision of sanitary facilities that is referred to but the segregation of Harijans in separate colonies?

THE HON. SRI R. VENKATARAMAN : That is not being done. In the present slums, members belonging to several communities are living together and all of them are proposed to be rehabilitated in other places.

*Salt Commission*

* 174 *Q*.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any Salt Commission has been appointed by the Central Government to enquire into the grievances of salt licensees, salt pan workers and to improve the quality and quantity of salt produced in the State;

(*b*) whether any representation is given for this State in the Commission; and

(*c*) if not, what steps the Government have taken for the inclusion of a representative of this State?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Presumably the Member refers to the Committee set up by the Government of India to enquire into certain matters connected with salt industry. The terms of reference to the above Committee include matters relating to the grievances of salt licensees and salt pan workers.

[11th September 1958

(*b*) Sri A. Suryanarayana Rao, Honorary Secretary, Madras and Andhra State Salt Industries Association, Madras, is a member of the Committee. No separate representation has been given to this State

(*c*) No requests were received from the salt industry or trade of this State for separate representation on the Committee.

**Sri V. K. RAMASWAMY MUDALIAR**: Will the Government place on the table of the House the recommendations of the Committee and also let the hon. Members know whether there is any proposal to implement the recommendations of that Committee?

**The Hon. Sri R. VENKATARAMAN**: Sir, this is a Government of India Committee and it is the Government of India who are to publish the report.

**Sri T. T. DANIEL**: Sir, may I know from the hon. Minister whether the State Government has made any recommendations to the Committee suggesting ways and means of ameliorating the conditions of the salt licencees and also improving the lot of salt pan workers?

**The Hon. Sri R. VENKATARAMAN**: Sir, the usual procedure with regard to the Government of India Committee is, the Government of India would send a questionnaire to the State Government to offer their views and I presume that that procedure would have been adopted. But I have no definite information about it.

**Sri A. V. P. ASAITHAMBI**: காந்திஜி அவர்கள் கடல் தண்ணீர் அனைவருக்கும் பொது, உப்புக்கு வரி போடக்கூடாது என்று போராட்டம் நடத்தினார்களே, ஆகவே இந்த உப்பை யார் வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும் காய்ச்சலாம் என்று விட்டு, விட்டு, அந்த லைசென்சு முறையை சர்க்கார் ரத்து செய்யுமா ? இந்த உப்பின் விலை பழைய விலைக்கு வர எத்தனை காலம் ஆகும் ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: யார் வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும் உப்பைக் காய்ச்சலாம் என்று விட்டு விட்டால், மக்கள் சுகாதாரம், ஹெல்த், குறைந்துவிடும். ஏனென்றால் உப்பானது, ஒரு குறிப்பிட்ட அளவு சோடியம் க்ளோரைட் உள்ளதாக இருந்தால்தான் நல்ல உப்பாக இருக்க முடியும். அதற்காகத்தான் இந்த ரெகுலேஷன்கள் இருக்கின்றன. நாம் எல்லோரும், பழைய நிலைமைக்குப் போய்விட்டால், பழைய விலை வரும்.

**Sri A. VEDARATHNAM**: இந்தியாவின் தேவையில் பாதித் தேவைக்கான உற்பத்தி செய்கின்ற சென்னை ராஜ்யத்திலிருந்து அந்தக் கமிட்டியில் ஒரு பிரதிநிதியும் இல்லை. ஸ்ரீ சூரியநாராயண ராவ் ஆந்திராவைச் சேர்ந்தவர்கள். நம் ராஜ்ஜியத்தின் பிரதிநிதி அந்தக் கமிட்டியில் இல்லை என்பதை அரசாங்கம் ஏன் கவனிக்கவில்லை ? இனி யாவது கவனிக்குமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: உப்பு உற்பத்தியில் அக்கறை உள்ள கனம் அங்கத்தினர் போன்றவர்கள் இந்தக் கமிட்டி போடும்போதே இதைத் தெரிவித்திருந்தால், நிச்சயமாக மத்திய சர்க்காரிடம் சொல்லி ஒரு பிரதிநிதி வாங்கியிருக்க முடியும். ஒரு அங் கத்தினர் வாங்குவது பிரமாதம் இல்லை. அவர்கள் ஏன் தவறினார்கள் என்பது புரியவில்லை.

11th September 1958]

SRI V. K. RAMASWAMY MUDALIAR : Sir, I may say for the information of the Hon. Minister and the Members that the price of salt is much below the pre-war level and that there has been going on indiscriminate scrapping in all places without any control whatsoever by the authorities. In view of the fact that the consumption of this salt will be injurious to the health of the consumers, will the Government take up this question with the Government of India and see that something is done to improve the quality of salt?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I would like the hon. member to write to me so that I may forward his representation to the Government of India.

*Industrial School*

* 175 *Q.*—SRI M. K. MARIAPPAN (on behalf of SRI V. Arunachala Thevar) : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to start an Industrial School or a Polytechnic at Pudukottai town?

THE HON. SRI R. VENKATARAMAN : Proposals for starting an Indsutrial School in Pudukottai are under the consideration of the Government. There is no proposal at present for the opening of a Polytechnic in Pudukottai town.

*State Transport Advisory Committee*

* 157 *Q.*—SRI A. R. SUBBIAH MUDALIAR : Will the Hon. the Minister for Electricity be pleased to state the functions of the State Transport Advisory Committee?

THE HON. SRI V. RAMAIAH : The functions of the Committee are to advise Government on all important matters relating to motor transport.

*New Railway lines*

*** 159 Q.**—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1958–59-ல் எந்தெந்த புதிய ரயில்வே லைன்களை எடுத்து நடத்த மத்திய அரசாங்கம் சம்மதித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No new Railway line has been approved by the Government of India for construction in 1958-59 in this State.

SRI P. G. MANICKAM : ஸார், எத்தனை ரெயில்வே லைன்களுக்கு சர்வே செய்யப்பட்டன ; அவைகளில் எத்தனை இந்திய சர்க்காரால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த சர்க்கார் 13 ரெயில்வே லைன்களை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சிபார்சு செய்து, அவைகளில் 6 லைன்கள் மிக முக்கியமாகக் கருதி கவனிக்கப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறது. சர்வே செய்யப்பட்ட தகவல் இல்லை.

(சில அங்கத்தினர்கள் தங்கள் இடத்தில் நின்றார்கள்.)

[11th September 1958

MR SPEAKER : இன்னும் ஐந்து நிமிஷங்கள் தான் இருக்கின்றன. அதிகமான உப கேள்விகள் கேட்டால், எப்படி எல்லாக் கேள்விகளையும் முடிக்க முடியும்.

*Water Supply*

* 162 *Q.*—SRI T. SAMPATH : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any representation has been received recently from the Panchayat Board, Darasuram, Kumbakonam taluk, regarding the protected water-supply scheme for the panchayat area under the National Water Supply Scheme; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The President, Darasuram Panchayat made representations to the Assistant Engineer, National Water-Supply and Sanitation subdivision, Kumbakonam, for the provision of water-supply in the village.

(*b*) Plans and estimates for the provision of water-supply in the village are expected to be submitted by the Assistant Engineer to the Collector of Tanjore in August 1958.

SRI K. VINAYAKAM : On a point of information, Sir, to-day being a non-official day, the Hon. Speaker may be kind enough to extend the time for questions by ten or fifteen minutes.

MR. SPEAKER : Will the House give permission for it?

Hon. Members : 'No', 'No'.

*Irrigation*

* 164 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether there is any proposal to extend irrigation with Cauvery water (from Grant Anicut Canal) south of Vellar river in the Aranthangi taluk; and

(*b*) if so, to what extent?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Kanyakumari District Magistrate*

* 166 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there are complaint petitions against the District Magistrate, Kanyakumari district; and

(*b*) if so, the nature of the complaint and the steps taken by the Government on such complaints?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) The complaints generally related to certain temporary appointments made by the District Magistrates to the posts of Clerks, Copyists and Peons in the Criminal Courts in the District. Instructions have been issued by the Government for the replacement of the temporary hands by fully qualified persons, as soon as possible.

*Pettaikulam Tank*

* 168 Q.—SRI M. K. SOMASUNDARAM (on behalf of Sri M. S. Selvarajan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the extent of the ayacut under the tank (Pettaikulam) in Palliputhu in the Tiruchendur taluk;

(b) whether any representation has been received from the villages praying for making arrangements for the supply of water to the tank and suggesting ways and means therefor; and

(c) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) 260·57 acres.

(b) No, Sir.

(c) Does not arise.

*Agniyar Scheme*

* 170 Q.—SRI M. K. MARIAPPAN (on behalf of Sri V. Arunachala Thevar) : Will the Hon. the Minister for Home be pleased to state what action has been taken on the Agniyar scheme in Alangudi taluk, Pudukkottai area?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have sanctioned the detailed investigation of the scheme and the Chief Engineer for Irrigation has been asked to formulate an economic scheme.

*Tahsildars*

* 171 Q.—SRI V. K. KRISHNAMURTHI (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the basis on which the list of Tahsildars in the various districts is prepared by the Board of Revenue;

(b) whether any " communal ratio " was observed in drawing the list of Tahsildars of Tiruchirappalli district for 1958;

(c) whether there is any effective remedy for an aggrieved person; and

(d) the number of cases subsequently included in the list of Tahsildars for 1957 with respect to any district on seeking such remedy?

[11th September 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The Collectors of all districts send proposals for inclusion of names in the approved lists of Tahsildars and Deputy Tahsildars every year within a prescribed date to the Board of Revenue. The Board of Revenue examines the Collector's proposals and finalises them within one month from the date of receipt of the Collector's proposals. Then the approved lists are published in the *Fort St. George Gazette.* Promotion as Tahsildar from among Deputy Tahsildars is made on ground, of merit and ability of the candidates, seniority being considered only in cases where merit and ability are approximately equal.

(*b*) No, Sir. The rule of reservation of appointments for Scheduled Castes, Scheduled Tribes and Backward Classes is not applicable to appointments to the category of Tahsildars.

(*c*) Yes, Sir. An aggrieved person can appeal to Government within two months from the date of publication of the approved list in the *Fort St. George Gazette.*

(*d*) One person in each of the Districts of Chingleput, Madurai and Salem has been included in the approved list of Tahsildars for 1957 on appeal to Government.

*Agricultural Machinery Advisory Committee*

* 173 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Members of the Agricultural Machinery Advisory Committee are paid for their services?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is in the negative.

*Dock Workers' Strike*

* 175-A *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state the number of tear-gas shells fired by the police against the dock workers on 16th June 1958 in the City?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The police had to fire 62 tear-gas shells and 46 tear-gas grenades for dispersing a mob partly consisting of dock workers which had gathered in front of the Madras Harbour on the morning of 16th June 1958.

SRI A. A. RASHEED : Sir, is there any truth in the statement that if more tear gas shells had been used. the loss of life would have been prevented ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is not correct, Sir.

* 175-B *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons that died as a result of the police firing on 16th June 1958 in the Harbour Division of the City of Madras;

11th September 1958]

(*b*) whether any order has been passed to pay compensation to the bereaved families of these deceased persons;

(*c*) the number of persons that were injured as a result of the police firing and lathi charge on 16th June 1958 in the Harbour Division of the City of Madras; and

(*d*) whether necessary compensation has been paid to these injured persons?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*c*) Six persons lost their lives and twenty persons were injured in the police firing. One hundred and thirty-six persons were injured in the lathi charge.

(*b*) & (*d*) No, Sir.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்த துப்பாக்கியினுல் சுட்டதில் செத்தவர்கள் எவ்வளவு ? தடியடியால் எத்தனை பேர்கள் செத்தார்கள் ?

MR SPEAKER : One question at a time இதற்கு பதில் வரட்டும். அதன் பிறகு அடுத்த கேள்வி கேட்கலாம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தடியடியினுல் யாரும் சாகவில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : சட்ட பூர்வமான வேலை நிருத்தத்தை சர்க்கார் ஆதரித்து இருக்கவேண்டி இருக்க, தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தை உடைக்க எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சிலிருந்து ஆட்களைக் கொண்டு வந்தது சரியா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சட்டத்திற்கு விரோதமாக, கொள்கைக்கு விரோதமாக எதுவும் செய்யவில்லை.

SRI M. KALYANASUNDARAM : இந்த துப்பாக்கி பிரயோகம் சம்பந்தமாக விசாரணை நடத்திய முதல் பிரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட்டின் அறிக்கை சர்க்காருக்கு வந்துவிட்டதா ? அந்த அறிக்கை இந்த சபைமுன் வைக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த அறிக்கை சர்க்காரிடம் வந்துவிட்டது. ஆனுல் அதைப் பிரசுரிப்பதைப்பற்றி, சில கேசுகள் இருப்பதால், சப் ஜுடிஸ் ஆகிவிடுமா என்பது பரிசீலிக்கப்பட்டு வருகிறது. ஆட்சேபம் இல்லையென்றுல், ரகசியமாக அங்கத்தினர்களுக்கு மட்டும் அதைப் பார்க்க அனுமதிக்கலாமா என்பதும் யோசிக்கப்படும்.

(Sri S. Pakkirisami Pillai rose.)

MR. SPEAKER : It is now 10 o'clock. The question hour is over.

SRI S. PAKKIRISAMI PILLAI : சார், இந்தக் கேள்வியின் மீது ½ மணி நேரம் விவாதம் நடத்தத் தாங்கள் அனுமதிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : The hon. Member was also present yesterday at a discussion when the Hon. Minister said that the question was being examined. I did not tell the House what took place. The hon. Member is aware of it. Knowing that, he is not justified in asking for a half-hour debate. It is possible he may have a whole day's debate. It is not advisable to ask for a half-hour debate to-day, as he is aware of the circumstances.

[11th September 1958

**Sri A. GOVINDASAMY** : அந்த அறிக்கை எப்போது வரும் ?

**Mr. SPEAKER** : The hon. Member will get it in course of time. Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER *RE* THE MADRAS CITY IMPROVEMENT TRUST (AMENDMENT) BILL, 1958.

**Mr. SPEAKER** : I have to announce that the Madras City Improvement Trust (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 20 of 1958) has been passed by the Legislative Council on the 9th September 1958 without any amendment.

## III.—ADJOURNMENT MOTION *RE* COLLECTION OF WATER CESS IN THE LOWER BHAVANI AREA.

**Mr. SPEAKER** : I have received notice of an adjournment motion from the hon. Member Sri K. R. Nallasivam regarding illegal attachment of properties in the Lower Bhavani area towards arrears of water-cess and penal rates thereof. This matter is not a new one. It is not an urgent matter either. It is a matter for which there are legal remedies. Certain dues are collected from the ryots, and if the dues are collected illegally, there are other remedies for it. This House cannot be the forum for discussing this matter. Further, a non-official resolution on the subject is going to be discussed here within an hour. I do not therefore, give permission to this adjournment motion.

(Sri K. R. Nallasivam rose.)

**Mr. SPEAKER** : I have ruled the adjournment motion out of order.

**Sri K. R. NALLASIVAM** : I rise on a point of order, Sir.

அதாவது கீழ் பவானி சம்பந்தமாக நடந்துகொண்டிருக்கக்கூடிய விஷயங்களையோ, அங்கே வசூலிக்கப்படுகிற தண்டத் தீர்வை பற்றியோ நான் இந்தப் பிரேரணையைக் கொண்டுவரவில்லை. அங்கே சட்டத்திற்கு விரோதமான முறையில் தீர்வைகள் வசூலிக்கப்படுகின்றன என்பதைப் பற்றி . . .

**Mr. SPEAKER** : சட்டத்திற்கு விரோதமாக நடக்கிற காரியங்களுக்கு வேறு இடத்தில் பரிகாரம் தேடிக் கொள்ளலாம்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : சட்ட விரோதமாக நடக்கிற காரியங்கள் என்றால் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

**Mr. SPEAKER** : There is no discussion now. I have ruled the adjournment motion out of order.

## IV.—SERVICE OF SUMMONS ON A MEMBER THROUGH THE HON. SPEAKER.

**Mr. SPEAKER** : I have to bring to the notice of the Government a very important subject which may constitute a breach of privilege. The Secretary, Legislature Department, has handed over to me a summons sent to me by the Collector of Salem to be handed over to a particular Member in this House. This, I must tell the Government will constitute a very serious breach of privilege.

11th September 1958] [Mr. Speaker]

The service of a subpoenea to attend as a witness has been treated even in the Houses of Parliament as a breach of privilege, and the parties responsible have been committed to the Serjeant for contempt. I shall not go so far. In 1945 a summons was served on an Officer of the House of Commons within the precincts of the House, and the Speaker brought the matter to the notice of the House. The Leader of the House moved a motion that the matter be referred to the Privileges Committee. The Privileges Committee submitted its report and in that it had held that service of summons within the precincts was a breach of privilege.

On the 14th March 1955, the Speaker of the Madras Assembly referred *suo motu* to the Committee of Privileges the question of the construction that should be put on the expression 'precincts of the House ' as regards the Legislative Assembly. In referring the question the Speaker stated that, as certain instances had come to his notice where a Magistrate had, in one case, issued a bailable warrant against a Member of the Assembly when the Assembly was actually in session and another case a constable had tried to serve a summons on a Member within the Assembly buildings when the House was actually sitting, and as there was a chance of legal process being served within the precincts of the House when the House was actually sitting, which would certainly be a breach of privilege of the House, it was necessary to define the extent of the precincts.

Similarly in 1957, the Speaker of the Mysore Legislative Assembly stated that he had received a summons from a Munsif to be served on a Member and ruled that it would be a breach of privilege to serve summons within the precincts of the House, and requested the Leader of the House to issue instructions to the Magistrate not to send summons to the Speaker or to the Secretary to be served on Members when the House was sitting.

In 1953, the Government of India brought to the notice of the Government of Madras that the service of summons within the precincts is a breach of privilege, and a copy of the same was received in the Legislature Department. The Government of Madras issued an order in G.O. Ms. No. 1600, Home, dated 15th March 1953 that summons should not be served within the precincts of the House.

Considering all these it cannot be denied that to request the Speaker to serve a summons on a member when the House is in session would constitute a breach of privilege. Perhaps the officer concerned is not aware of this. So I shall not take action against him. But I would request the Government to see that such things do not recur and to impress upon the Collector or whoever is responsible not to ask the Secretary to the Legislature Department or the Speaker to serve a summons on a member when the House is in session. If any summons is to be served on a member, the concerned officers should make their own arrangements without resorting to the Speaker or the Secretary, Legislature Department.

SRI K. VINAYAKAM : I rise on a point of information, Sir.

MR. SPEAKER : There can be no point of information.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, the Government will look into this matter and issue instructions to the officers.

(Sri K. Vinayakam rose.)

MR. SPEAKER : There can be no comment on the Speaker's statement.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, even in the previous Assembly there were similar instances and the Hon. the Leader of the House assured the Speaker that he would issue definite instructions to the departments. But in spite of this, this has happened.

MR. SPEAKER : I am not prepared to enter into a discussion on the merits of the case. There may be lapses on the part of some officers. I will not go into this question, and there is no necessity for any point of information or debate.

SRI K. VINAYAKAM : Sir, a summons was served on me three days back at my residence. Now the House is in session. Is it right on the serving authority to send a summons to me?

MR. SPEAKER : The hon. Member will raise this question separately in my room. This is with regard to a notice issued to the Speaker to serve a summons on a particular Member in the House. I am not concerned if a summons is served on Sri Vinayakam in his house. He has got legal remedies.

## V.—NON-OFFICIAL BUSINESS.

### *A. BILL.*

### THE MADRAS ESTATES (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) (AMENDMENT) BILL, 1958.

SRI R. SRINIVASA IYER : Sir, I beg leave to introduce the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) (Amendment) Bill, 1958.

The motion was duly seconded.

MR. SPEAKER : The question is—

" That leave be granted for the introduction of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) (Amendment) Bill, 1958 ".

The motion was put and carried.

SRI R. SRINIVASA IYER, Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

## *B. RESOLUTIONS.*

### CEILING ON LAND HOLDINGS.

Sri V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"This House recommends to the Government to bring in legislation fixing a ceiling on land holdings and for the distribution of excess lands, which are in excess of the ceilings fixed, to the tenants and landless poor."

Sri K. SATTANATHA KARAYALAR : I second the resolution, Sir.

Mr. SPEAKER : Resolution moved—

"This House recommends to the Government to bring in legislation fixing a ceiling on land holdings and for the distribution of excess lands, which are in excess of the ceilings fixed, to the tenants and landless poor."

Sri V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, நிலவுடைமைக்கு வரம்பு ட்டவேண்டுமென்ற தீர்மானத்தை நான் இங்கே கொண்டுவந்திருக்கிற நேரத்தில், இன்றைய தினம்

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்
வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்."

என்று வீரமுழக்கம் செய்த புரட்சிக் கவி பாரதியாரின் புனிதமான நாள் ஆகும் என்பதை நினைவுறுத்தி, இந்தப் புனிதமான மகாகவியின் நினைவு நாளில் இந்தத் தீர்மானம் சபையின் விவாதத்திற்கு வந்திருப்பது மிகவும் பெருமைப்படக்கூடியதாகும் என்பதை அங்கத்தினர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். நிலவுடைமைக்கு வரம்பு கட்டும் என்னுடைய இந்தத் தீர்மானமானது, சென்ற ஆண்டு சர்க்காரால் இயற்றப்பட்ட, நிலவுடைமைக்கு ஒரு வரம்பு கட்டும் அம்சத்தைக் கொண்ட சட்டத்தைப் போன்றதல்ல. இப்போது சிலர் நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கும் வேறு சிலர் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கும் அதிபதிகளாக இருக்கிறார்கள். நில உடைமைக்கு வரம்பு கட்டி, அப்படிப்பட்ட நிலப் பிரபுக்களிடமிருந்து, அவ்வரம்பிற்கு அதிகமாக அவர்களிடம் இருக்கும் நிலங்களை வாங்கி உண்மையில் உழுது பாடுபடும் குத்தகைதாரர்கள், வாரம் தார்கள் போன்ற விவசாயிகளுக்கு அவைகளைப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்பது என்னுடைய தீர்மானத்தின் நோக்கம். ஒரு குடும்பத்திற்கு அதிகப்பட்சமாக இவ்வளவு நிலம்தான் இருக்க வேண்டுமென்று வரம்பு கட்டி, அவ்வரம்பிற்கு அதிகமான நிலங்களை வைத்துக்கொண்டிருப்பவர்களிடமிருந்து அதிகமாக அவர்களிடமுள்ள நிலங்களை வாங்கி அவைகளை சாகுபடியாளர்களுக்கும் நிலமில்லாத ஏழைகளுக்கும் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் தான் என்னுடைய தீர்மானம் அமைந்திருக்கிறது. என்றால் இன்று இங்கே கொண்டுவரப்படும் இந்தத் தீர்மானம் ஒரு புதிய தீர்மானம் அல்ல. இதே தீர்மானமானது, 1931–வது ஆண்டில் கராச்சியில் கூடிய காங்கிரஸ் மஹாசபையில் கொண்டுவரப்பட்டது. அன்று, மாபெரும் காங்கிரஸ் தலைவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து "நில உடைமைக்கு வரம்பு கட்ட வேண்டும்", "நிலச் சீர்திருத்த சட்டம் கொண்டுவர வேண்டும்" என்றெல்லாம் தீர்மானங்கள் போட்டுத் தான் காங்கிரஸிடம் நாட்டு மக்களுக்குப் பிரேமையை உண்டாக்கினார்கள். நாட்டு மக்களுக்கு காங்கிரஸிடம் பிரேமை உண்டானதால் நாம் வெள்ளையர்களின் ஆட்சியை எதிர்த்துப் போராடி அவர்களை நாட்டை விட்டு வெளியேற்றி சுதந்திரம் பெற முடிந்தது. சுதந்திரம் பெற்றோம். ஆனால், இதுவரையில், சுதந்திரம் பெற்று 11 ஆண்டுகள் முடிந்து 12–வது ஆண்டு வந்த பிறகும் கூட அப்படிப்பட்ட சட்டம் கொண்டுவரப்படவில்லை. இந்த நாட்டில் ஜனத்தொகையில் 80 சதவிகிதத்தினர் விவசாயிகள்; கிராமத் 10-10 a.m.

[Sri V. K. Kothandaraman] [11th September 1958

திலிருப்பவர்கள் விவசாயத்தையே நம்பி வாழ்கிருர்கள். என்னுடைய தீர்மானத்திலுள்ள கருத்து 1931—வது ஆண்டில் தெரிவிக்கப்பட்டதுடன் மட்டுமின்றி, அதற்குப் பிறகும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக, மிகப் பெரிய தியாகியாகவும், பழம்பெரு காங்கிரஸ் தலைவராகவும், மகாத்மாஜீக்கு வலது கரம் போன்று இருந்தவருமாகிய டாக்டர் குமரப்பா அவர்களின் தலைமையில் அமைக்கப்பட்ட கமிட்டியும், நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்றும், நில உடைமைக்கு வரம்பு கட்ட வேண்டும் என்றும் மிகத் தெட்டத் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறது. சுப்ரமணியம் கமிட்டியும், நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்றும், நில உடைமைக்கு வரம்பு கட்ட வேண்டும் என்றும் கூறியிருக்கிறது. சுப்ரமணியம் கமிட்டியில் நமது நிதி அமைச்சர் கனம் ஸ்ரீ சுப்ரமணியம் அவர்கள்கூட அங்கத்தினராக இருந்திருக்கிருர். இம்மாதிரியாக எத்தனையோ கமிட்டிகள் இதே யோசனையை தெரிவித்திருந்தாலும் இந்த யோசனை இது வரை நிறைவேற்றப்படவில்லை. இதுவரை சர்க்கார் இந்த விஷயத்தில் செய்திருக்கும் காரியங்கள் எல்லாம் அந்த யோசனைகளை நடைமுறைக்குக் கொண்டுவரவில்லை என்பதை நாம் பார்க்கிருேம். நாம் இந்த நிலைமையைப் பார்க்கும்போது, மக்கள் மத்தியில் ஏற்பட்டிருக்கும் விழிப்புணர்ச்சியை அடக்குவதற்காகவும் புரட்சி செய்யக்கூடிய மக்களை சாந்தப்படுத்துவதற்காகவும் தான், அரசாங்கத்தார் தாங்கள் சென்ற வருடம் இயற்றிய ஒரு சட்டத்தில் நில உடைமைக்கு ஒரு வரம்பை நிர்ணயித்திருக்கிருர்களே தவிர, அந்த நல்ல யோசனைகளை உண்மையிலேயே நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் அதைச் செய்யவில்லை என்று எங்களுக்குத் தோன்றுகிறது.

உழுபவனுக்குத் தான் நிலம் சொந்தம் என்று இந்தக் காலத்தில் சொல்லப்படுகிறது. நமது மதிப்பிற்குரிய முதல் அமைச்சர் ஸ்ரீ. காமராஜ் நாடார் "நிலத்தை உழுவது மாடு. அதனல், நிலத்தை மாட்டிற்குச் சொந்தமாக்க வேண்டுமா ?" என்று கேட்கிருர். உழுகிற மாட்டிற்கு நிலத்தைச் சொந்தமாக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. உழுது பயிரிட்டு உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு முதல் காரணஸ்தர்களாக இருக்கும் விவசாயிகளுக்குத் தான், மனிதர்களுக்குத் தான், விவசாயப் பெருங்குடி மக்களுக்குத் தான், நிலத்தைச் சொந்தமாக்க வேண்டுமென்று நான் சொல்கிறேனே தவிர, ஸ்ரீ. காமராஜ் நாடார் அவர்களுடைய அகராதிப்படி மாட்டுக்கு நிலத்தைச் சொந்தமாக்க வேண்டுமென்று சொல்லவில்லை என்றும் இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

(Sri R. Srinivasa Iyer in the Chair.)

நிலச்சீர்திருத்தச் சட்டம் இயற்றப்பட வேண்டும் என்ற கருத்தை சர்க்காரால் அமைக்கப்பட்ட கமிட்டிகள் தெரிவித்திருப்பது ஒரு புறமிருக்க, "அச் சட்டத்தைக் கொண்டுவருகிறேம்" என்று சர்க்காரே 1955–ம் ஆண்டில் ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். "நிலச் சீர்திருத்தச் சட்டத்தை நாங்கள் மூன்று கட்டங்கள் மூலமாக கொண்டு வருகிறேம். முதலாவதாக நில வெளியேற்றுத் தடுப்புச் சட்டத்தையும், இரண்டாவதாக நியாய வாரச் சட்டத்தையும், மூன்ருவதாக நிலவுடைமைக்கு வரம்பு கட்டும் சட்டத்தையும் இயற்றி, நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டுவருகிறேம்" என்று அப்போது சர்க்கார் கூறினர்கள். சர்க்கார், நில வெளியேற்றச் சட்டத்தையும், நியாய வாரச் சட்டத்தையும் கொண்டுவந்திருக்கிருர்கள். அந்தச் சட்டங்களால் நடைமுறையில் நல்ல பலன்கள் ஏற்பட்டிருக்கின்றனவா ? இந்தச் சட்டங்கள் வந்த பிறகு, நிலப் பிரபுகளுக்கும், விவசாயிகளுக்கும் தகராறுகள் ஏற்படுவதையும், அதனல் ஆயிரக்கணக்கான விவசாயிகள் நிலங்களிலிருந்து வெளியேற்றப்படுவதையும், ஆயிரக் கணக்கான விவசாயிகளின் பேரில் வழக்குகள் தொடரப்படுவதையும், நிலங்களிலிருந்து விவசாயிகள் வெளியேற்றப்படும்போது அவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்கப்படாத நிலையையும், நிலங்களிலிருந்து அவர்களை வெளியேற்றுவதற்கு நிலப்பிரபுக்களுக்கு போலீஸ் உதவி கொடுக்கப்படுவதையும் தான் நாம் காண்கிறேம். தஞ்சாவூர் ஜில்லாவிலும், திருச்சி ஜில்லாவிலும்

11th September 1958] [Sri V. K. Kothandaraman]

இன்றைக்கும் ஆயிரக் கணக்கான விவசாய வழக்குகள் இருக்கின்றன. விவசாயிகளுக்கு இந்தச் சட்டங்களினால் எந்த விதமான பலனும் கிடைக்க வில்லை. இந்தச் சட்டங்கள் பலனளிக்காமல் போனதற்கு காரணம், நில உடைமைக்கு வரம்பு கட்டும் சட்டத்தை முதலில் கொண்டுவராதது தான். நில உடைமைக்கு வரம்பு கட்டும் சட்டத்தை முதலில் கொண்டுவந்துவிட்டு, அதற்குப்பிறகு நில வெளியேற்றத் தடுப்புச் சட்டத்தையும், நியாய வாரச் சட்டத்தையும் கொண்டுவந்திருந்தால், நல்ல பலன் ஏற்பட்டிருக்கும். ஆனால், சர்க்கார் அவ்வாறு செய்யவில்லை. மாட்டுக்கு முன்னால் வண்டி இருக்க வேண்டுமா, அல்லது வண்டிக்கு முன்னால் மாடு இருக்க வேண்டுமா ? இந்த சர்க்காரின் நிலச் சீர்திருத்தச் சட்டங்களின் வரிசைக் கிரமமானது, மாட்டுக்கு முன்னால் வண்டி இருப்பதைப் போன்று உள்ளது. எனவே தான், அந்தச் சட்டங்கள் வந்த பிறகு, பெரிய குழப்பங்கள் ஏற்பட்டு வருவதையும், விவசாயிகளுக்கு பாதகங்கள் ஏற்படுவதையும் நாம் பார்க்கிறோம்.

மேலும், திட்டக் கமிஷன் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் என்ன சொல்லியிருக்கிறது ? இந்த நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க வேண்டுமானால், மக்கள் பட்டினியாலும் பசியாலும் அவதிப்படுவதைத் தடுக்க வேண்டுமானால், நாட்டில் தொழிற்சாலைகளை அதிகரித்து நாட்டில் தொழில் வளத்தை உண்டாக்க வேண்டுமானால், நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்றும், நில உடைமைக்கு வரம்பு கட்ட வேண்டும் என்றும் அது சொல்லியிருக்கிறது ? ஆனால், அந்த யோசனைகள் எல்லாம் இன்றைக்கு ஏட்டளவில்தான் இருக்கின்றன. அவை நடைமுறைக்குக் கொண்டுவரப்படவில்லை.

நில உடைமைக்கு வரம்பு கட்டப்படாததாலும், நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவரப்படாததாலும், மக்களின் வாங்கும் சக்தி குறைந்திருக்கிறது. அதன் காரணமாக, ஒரு பக்கத்தில் உணவு தானியங்களின் உற்பத்தி அதிகரிக்கப்பட்டிருந்தாலும், மற்றொரு பக்கத்தில் விலைவாசிகள் குறைந்திருப்பதால் உணவு தானியங்கள் போதுமான அளவிற்குக் கிடைக்க வில்லை. மக்களின் வாங்கும் சக்தி குறைந்திருப்பதால், ஏற்கெனவே நடந்துவந்த தொழிற்சாலைகள்கூட இப்போது மூடப்பட்டு வருவதைப் பார்க்கிறோம். தொழிற்சாலைகள் மூடப்படுவதால், தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் சச்சரவுகள் ஏற்படுகின்றன ; தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவரப்படாததால் இத்தகைய நிலைமை ஏற்பட்டிருப்பதை நாம் பார்க்கிறோம். நிலச் சீர்திருத்தத் திட்டத்தை இந்த சர்க்கார் அமலுக்குக் கொண்டுவராமலிருப்பதை நாங்கள் பார்க்கும்போது, இந்த சர்க்கார் நிலப் பிரபுக்களைச் சார்ந்த சர்க்கார் என்றும், " நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டத்தைக் கொண்டு வந்தால் அதற்கு பெரிய எதிர்ப்பு வருமோ, சர்க்காரைச் சார்ந்த அங்கத்தினர்களே எதிர்ப்பார்களோ " என்று சர்க்கார் அஞ்சுகிறார்கள் என்றும் எங்களுக்குத் தோன்றுகிறது. " இதுபோன்ற புனிதமான சட்டங்களை சர்க்கார் கொண்டுவரும்போது எவ்வளவு பெரிய எதிர்ப்பு வந்தாலும், அதை சமாளிப்பதில், நாட்டிலுள்ள பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் சர்க்காருக்கு பக்க பலமாக இருப்பார்கள். ஆகவே சர்க்கார் அஞ்ச வேண்டியதில்லை " என்று என் கட்சியின் சார்பில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஆகவே, மக்களை காப்பாற்றுவதற்காக, மக்களின் வாழ்க்கைத்தரம் 10-20 p.m.
உயருவதற்கு சாதகமாக இருக்கக் கூடிய இதுபோன்ற சட்டங்களை நாம் உடனடியாக கொண்டு வருவதின் மூலமாகத்தான் மக்களை காப்பாற்ற முடியுமே தவிர அதல்லாமல் உண்மையிலே எந்தக் காரணத்தை முன்னிட்டும் பொருளாதார அடிப்படையில் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியாது, வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக்க முடியாது. வேலையில்லாத் திண்டாட்டத்தை நாம் போக்குவதாக சொல்லிக் கொண்டிருக்கலாம். இன்று சர்க்காருக்கு சொந்தமாக இருக்கக்கூடிய சுமார்

[Sri V. K. Kothandaraman] [11th September 1958

30 லட்சம் தரிசு நிலங்களை பாடுபடும் ஏழை விவசாயிகளுக்கு கொடுக்க முடியாத ஒரு நிலையில் இருக்கிறது. இதைச் சொன்னால் நமது மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்கள் சொல்லலாம், 'சேலம் ஜில்லாவில் நாங்கள் கொடுத்திருக்கிறோம், கொடுத்து இரண்டு வருடங்களுக்கு மேலாகிறது, அப்படியிருந்தும் கூட இது வரையிலும் அவர்கள் விவசாயமே செய்யவில்லை' என்று. அவர்கள் அப்படி விவசாயம் செய்யவில்லை என்று சொன்னால் அதற்கு காரணம் என்ன? அவர்களின் இன்றைய நிலைமை என்ன என்பதைப்பற்றி நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். இன்று, நிலம் கொடுத்தால் மட்டிலும் போதாது. விவசாயிகளுக்கும், விவசாயம் செய்வதற்கான விவசாயக் கருவிகள், இன்னும் அவர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தால்தான் உணவு உற்பத்தியை அதிகப்படுத்த முடியும். அதோடு வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக்க முடியும். இப்படி நான் சொல்கின்ற நேரத்திலே, வெகு சீக்கிரம் அதற்கு வேண்டிய சட்டங்கள் கொண்டுவரப்படும், அப்படி கொண்டு வருவதற்காக வேண்டிய ஆலோசனைகள் செய்து கொண்டு இருக்கிறோம், அதற்கான திட்டங்கள் தீட்டிக் கொண்டிருக்கிறோம் என்று கூட அமைச்சர் அவர்கள் சொல்லலாம். ஆனால் அதை தீட்டிக் கொண்டிருக்கிறோம், கொண்டுவரப் போகிறோம் என்று சொல்லக்கூடிய நேரத்தில், நான் ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன், தேர்தலுக்கு ஆறு மாதத்திற்கு முன்னால் நாங்கள் அதை கண்டிப்பாக கொண்டு வந்து விடுவோம் அது வரையில் எங்களுக்கு அவகாசம் வேண்டுமென்றாவது சொல்லுங்கள், என்று நான் அமைச்சர் அவர்களை கேட்க ஆசைப்படுகிறேன். எப்பொழுதுமே, தேர்தலுக்கு ஒரு ஆறு மாதங்களுக்கும், தேர்தலில் வோட்டு பெற்று ஜெயிப்பதற்கு வேண்டி இதுபோன்ற முக்கியமான பிரச்னைகளைக் கொண்டு வருவது வழக்கம். ஆகவே அடுத்த தேர்தலுக்கு ஒரு ஆறு மாதங்களுக்கு முன்னாலாவது இதைக் கொண்டு வருவோம் என்றாவது தெரிவித்தால் மிகவும் நலமாயிருக்கும். இப் பிரச்னையை நாங்கள் மீண்டும், மீண்டும் இங்கு கிளப்பாமல் இருப்பதற்கு வசதியாக இருக்கும். நான் இதை எடுத்துக் கூறக்கூடிய நேரத்தில் பல கமிட்டிகள் அமைத்திருந்த போதிலும், 1955-ல் அதை ஏற்றுக் கொண்டு நிறைவேற்றுவதில்லை என்று சொன்னாலுங்கூட, சென்ற ஆண்டில் கௌஹத்தியில் நடந்த காங்கிரஸ் மஹா சபையிலே கூட காங்கிரஸ் தலைவர் தேபர்ஜி அவர்கள் என்ன சொன்னார்கள், இன்றைய தினம், மக்களுக்கு கொடுத்திருக்கும் வாக்குறுதிகளை நாம் நிறைவேற்றாதது சரியல்ல என்று. அப்படி நிறைவேற்றாதது மக்களுக்கு நாம் துரோகம் செய்வது போலாகும் என்றும் சொன்னார்கள். அப்படி, அவர் திட்டவட்டமாக சொல்லியிருக்கிறார்கள். ஆனால் மக்களுக்கு கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றாது, நீங்கள் மக்களுக்கு துரோகம் செய்து விட்டீர்கள் என்று நான் சொல்வதற்கு தயாராயில்லை, ஆனால் ஆளும் கட்சியைச் சேர்ந்த அக்கட்சியின் தலைவரே சொல்லியிருக்கிறார்கள். ஆகவே இவை எல்லாவற்றையும் நன்கு சீர்தூக்கிப் பார்த்து உடனடியாக இப்பிரச்னையைத் தீர்த்து வைப்பதில் நாம் அவசியம் கவனம் செலுத்தியாகவேண்டும். அகில இந்திய ரீதியில் நிலச் சீர்திருத்த சட்டங்களைக் கொண்டு வருவதற்காக நில உடமைக்கு வரம்பு கட்டுவதற்காக காங்கிரஸ் தலைவர் தேபர் அவர்களின் தலைமையின் கீழ் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது, அக் கமிட்டி விசாரணை செய்து கூடிய விரைவில் ஒரு முடிவு ஏற்படும், அதை உடனடியாக அமுலுக்கு கொண்டு வருவோம் என்று அமைச்சர் அவர்கள் சொல்லலாம். ஆனால் எத்தனையோ கமிட்டிகள் வந்திருக்கின்றன. அதே போன்று இந்த கமிட்டியின் நிலையும் ஏற்படும் என்று ஏன் சொல்லக் கூடாது என்பது மட்டுமல்ல, சமீபத்தில் திருச்சிராப்பள்ளியில் இருக்கக்கூடிய நிலைமையைப்பற்றி, கையேற் வாரம், மாட்டேற் வாரம் என்று சொல்லக்கூடிய விவசாயிகளுக்காக வேண்டி ஒரு மசோதா வந்தது. அது பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டு அது பொறுக்குக் கமிட்டிக்கு போனவுடன் அதற்கு ஏற்பட்ட விளைவு என்ன என்பதை நாம் பார்க்கிறோம். ஆகவே இதுபோன்ற பல கமிட்டிகளை அமைத்தாலும் தைரியமாக, அஞ்சாமல் துணிச்சலோடு மக்களின் நலனைக் கருதி இப்படிப்பட்ட ஒரு சட்டம் கொண்டு வருவதற்கு, இந்த மசோதாவை நிறைவேற்றுவதற்கு பெரிய அளவிற்கு சர்க்கார்

11th September 1958] [Sri V. K. Kothandaraman]

முன் வந்தாக வேண்டும் என்பதைத்தான் நான் இந்த இடத்தில் தாழ்மையோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்று சர்க்கார் அதை ஏற்றுக்கொள்ளக்கூடிய நிலையில் இருந்தாலுங்கூட, நில உடமைக்கு வரம்பு கட்டாத காரணத்தினுல், நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வராத காரணத்தினுல் இன்று மற்ற எல்லா ராஜ்யங்களிலும் இருக்கக்கூடியதை போன்ற உணவு நெருக்கடி அந்த அளவிற்கு இல்லாவிட்டாலுங்கூட சிறிய அளவிற்கு இங்கும் இருக்கத்தான் இருக்கிறது. அப்படி யிருந்தும்கூட அது தீவிரமாகப் போகும் நிலைக்கு, மோசமான ஒரு நிலைமைக்குப் போகும் நிலையில் நாம் அதைக் கொண்டுவரப் போகிறோம். வெள்ளம் வருவதற்கு முன் அணை கட்ட வேண்டுமென்று சொல்வார்கள். அதுபோல், இன்றைக்கு வெள்ளம் வருவதற்கான அறிகுறிகள் காணப்படும். இந் நேரத்தில் அது பற்றி நாம் அவசியம் சிந்தித்துப் பார்த்தாக வேண்டும். ஆகவே, நில உடைமைக்கு வரம்பு கட்டுவதின் மூலம், நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வருவதின் மூலம் சர்க்காருக்குச் சொந்தமான சுமார் 30 லட்சம் ஏக்கர் தரிசு நிலங்களை இன்று பாடுபடக் கூடிய ஏழை விவசாயிகளுக்கு கொடுப்பதின் மூலந்தான் இன்றைக்கு இருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியும். நம் நாட்டில் தொழில்கள் மேலும் மேலும் அபிவிருத்தி அடைவதற்கான வாய்ப்பும் வசதிகளும் இருக்கின்றன. பதுக் கல்காரர்கள் கொள்ளை லாபம் அடைவதை போக்குவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். அப்படி யென்றுல் தான் நாம் உணவுப் பஞ்சத்தைப் போக்க முடியும். நம் நாட்டு மக்களின் வாங்கும் சக்தியை, பொருளாதாரத்தை மேலும் மேலும் வளர்த்திக் கொண்டு போவதற்கான வாய்ப்பும் வசதியும் இதன் மூலந்தான் பெற முடியும். இந்தக் காரணத்தினுல்தான் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே திருவள்ளுவர் கூட கூறியிருக்கிறுர்கள், "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார், மற்று எல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர்" என்று. இது போன்றவைகளை எல்லோரும் பல மேடைகளிலும் பேசுகிறுர்களே தவிர காரியத்தில் ஒன்றும் செய்வதில்லை. ஆனுல் அதற்கு நேர் விரோதமாகத்தான் நடந்து கொண்டு வருகிறுர்கள். ஒளவையார் கூடச் சொல்லியிருக்கிறுர்கள்,

> "வான் உயர வரப்பு உயரும்,
> வரப்பு உயர நீர் உயரும்,
> நீர் உயர குடி உயரும்,
> குடி உயரக் கோன் உயரும்" என்று.

ஆகவே மக்களின் குறைகளை அரசாங்கம் உணர்ந்து அக்குறைகளைப் போக்க வேண்டும். நில உடைமைக்கு வரம்புக் கட்டக் கூடிய நிலச் சீர்திருத்தச் சட்டத்தை நாம் கொண்டு வருவோமேயானுல் இன்றைக்கு இருக்கச்சூடிய கட்சிக்கு பெரிய எதிர்ப்பு இருக்கும். அப்படி ஒரு பெரிய எதிர்ப்பு வருவதாக இருந்தாலுங்கூட எதிர் கட்சிகளில் இருக்கக்கூடியவர்கள் அதற்கு கட்டாயம் ஆதரவு அளிப்பார்கள். மஹாத்மா காந்தி அடிகளின் தலைமையின் கீழ் நிறைவேற்றியிருக்கச்கூடிய தீர்மானங்களை நடைமுறையில் கொண்டு வர வேண்டுமானுல், காந்தியின் பெயரை மட்டிலும் சொல்லிவிட்டால் போதாது. நேரு போன்ற தலைவர்களின் பெயர்களை மட்டிலும் சொல்லி விட்டால் போதாது. அவர்கள் நமக்காக விட்டுச் சென்ற காரியங்களை நடைமுறையில் நிறைவேற்றுவதற்காக வேண்டி பாடுபடுவதின் மூலந்தான் அவர்களுக்கு நாம் மரியாதை செய்ய முடியும். ஆனுல் அதற்கு நேர் விரோதமாக நடந்து கொண்டு இன்னும் கொஞ்சம் பொறுங்கள், பொறுங்கள் என்று சொல்லிக்கொண்டே போனுல், மக்களின் எதிர்ப்பு அதிகமாகத்தான் செய்யும். மக்களின் எதிர்ப்பு அதிகமாவது மட்டுமல்ல. அதனுல் பாதிக்கக்கூடிய மக்கள் பஞ்சத்தால் வாடி வதங்கி, மாண்டு மடியக்கூடிய அளவிற்கு நிலைமை ஏற்படும். ஒரு வீதியில் தீ ஏற்படுகிறது என்று சொன்னுல், கடைக் கோடியில் இருக்கக்கூடிய வீட்டில் தீ பிடிக்கிறது என்று இருந்தால் அதற்கு பக்கத்தில் இருக்கக்கூடிய வீட்டின் பேரிலும் தண்ணீர் பாய்ச்சி அது தீக்கு இரையாக்காமல் பார்த்துக் கொள்வார்கள். எதற்காக அந்த தீயை உடனடியாக அணைப்பதற்கு முயற்சிக்கிறோம் என்றுல், அந்த தீ அடுத்த வீட்டுக்கும் விழுந்துவிடக் கூடாது 10-30 a.m.

[Sri V. K. Kothandaraman] [11th September 1958

என்கிற எண்ணத்தோடுதான். ஆகவே இன்று பல ராஜ்யங்களிலும் பல ஆயிரக் கணக்கான மக்கள் உணவு கிடைக்காமல் மாண்டு கொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம். இந்த மாதிரியான காரணங்களினால், நமது மதிப்பிற்குரிய பிரதமர் நேருஜீ அவர்கள் கூட உணவுப் பிரச்னையை மிக முக்கியமான பிரச்னையாக கருத வேண்டும். ராணுவத்தை விட பிரதானமாக கவனித்து வர வேண்டும் என்று சொல்லியிருப்பதோடு மட்டுமல்ல அவரே உண்மையை ஒப்புக்கொண்டிருக்கிறார். இன்றைக்கு இருக்கின்ற உணவு நிலைமையைப்பற்றி இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே தெரிந்து கொண்டிருப்பேனானால் இதை தீர்ப்பதற்கு பலவிதத்தில் ஆக்க பூர்வமான திட்டங்களை போட்டிருக்கலாம் என்று அவரே கூறியிருக்கிறார். இவ்விதம் அவர் உண்மையை ஒப்புக்கொண்டிருப்பதை நாம் வரவேற்க வேண்டியது தான். ஆனால் நமது மதிப்பிற்குரிய இந்த சர்க்கார் அமைச்சர் இதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பது நமக்குத் தெரிந்த விஷயம்தான். இவர்கள் சொல்லுவது நாங்கள் உணவு உற்பத்தி செய்திருக்கிறோம், 1946-வது ஆண்டில் 26 லட்சம் டன் தான் உற்பத்தி செய்யப்பட்டது, 1956-ல் 46 லட்சம் டன் உற்பத்தி செய்திருக்கிறோம், இப்போது 16 அவுன்ஸ் வீதம் எல்லோருக்கும் கிடைப்பதற்கு வேண்டிய அளவு சரியாக நம்மிடம் உணவு இருக்கிறது என்பதை யெல்லாம் கணக்கு போட்டு சொல்லி யிருக்கிறார்கள். ஆனால் உண்மையில் இன்று நாட்டில் எத்தனை பேர்கள் கால் வயிறு, அரை வயிறு சாப்பிட்டு விட்டு, இவ்விதமும் கிடைக்காமல் இன்னும் எத்தனையோ பேர்கள் பட்டினியோடு இருந்து வருகிறார்கள். எத்தனையோ பேர்கள் உணவுப் பொருள்கள் கிடைக்காமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சர்க்கார் போட்டிருக்கும் கணக்குப்படி பார்த்தால் உணவுப்பொருள் மிச்சப்பட்டிருக்கவேண்டும். அப்படி மிச்சப்பட வேண்டிய நிலைமையில்லை என்றிருந்தாலும் கூட விலைவாசிகள் குறைந்தபாடில்லை. பதுக்கல்காரர்களை கண்டு பிடித்து அவர்கள் பேரில் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். இதையெல்லாம் சொல்லக்கூடிய நேரத்தில் இதற்கு எல்லாம் ஆதாரமாக இருக்கக்கூடியது, ஜீவநாடியாக இருக்கக்கூடியது நிலச்சீர் திருத்தச்சட்டம், நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டிய சட்டம், இவைகளை உடனடியாக கொண்டு வரவேண்டும் என்பதை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன். இதை அடுத்த ஆண்டிலே கொண்டு வருவதற்கு முயற்சி செய்யவேண்டும். அதல்லாமல் தேர்தல் காலத்தில் இந்த சட்டத்தைக் கொண்டு வந்தால், தேர்தல் காலத்தில் வோட்டு பிடிப்பதற்காக மட்டும் தான் இந்த சட்டம் கொண்டு வரப்படுகிறது என்று மக்கள் நினைப்பார்கள். இன்றைய தினம் நாட்டில் இருக்கக்கூடிய மக்கள் எதற்கெடுத்தாலும் தலை யாட்டக்கூடிய மக்களாக இல்லை என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆகவே அடுத்த ஆண்டிலேயே இந்த நில சீர் திருத்தச் சட்டத்தை கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற ஆண்டில் மதிப்பிற்குரிய அமைச்சர் மாணிக்கவேலர் அவர்கள் கொண்டு வரலாம் என்று சொன்ன சட்டம் மாதிரியல்ல நான் சொல்லுவது நில சீர்திருத்தச் சட்டம் என்றால், நூற்றுக்கணக்கான ஏக்கர்களை வைத்துக் கொண்டிருக்கும் பெரிய நில அதிபர்களாக இருக்கிறார்களே, அவர்களுக்கு குடும்பத்திற்கு எவ்வளவு நிலம் வேண்டுமோ அவ்வளவு நிலத்தை கொடுத்துவிட்டு மிச்ச நிலங்களை எடுத்து நிலமில்லாத பாடுபடக்கூடிய ஏழை விவசாயிகளுக்கு கொடுக்கவேண்டும் என்கிற ஒரு சட்டம் தான். அத்தகைய ஒரு சட்டத்தை கொண்டு வருவதற்கு இங்கே இருக்கக்கூடிய எல்லா கட்சிகளையும் சேர்ந்த தலைவர்களை, அதே போன்று இன்றைக்கு நாட்டில் இருக்கக்கூடிய விவசாய சங்க பிரதிநிதிகளையும் மற்ற மற்ற பிரதிநிதிகளையும் ஒன்றுபடுத்தி, அதன் மூலம் இதைப்பற்றி நன்றாக பரிசீலனை செய்து ஒரு ஏகோபித்த முடிவுக்கு வருவது நலமாக இருக்கும். அதல்லாமல் இதைப்பற்றி கேட்கின்ற நேரத்தில் நாங்கள் எல்லா கட்சி பிரதிநிதிகளையும் போட்டுக் கொண்டு தான் இருக்கின்றோம் என்று வேண்டுமானால் சொல்லலாம். சட்டசபையில் இருப்பதை மாத்திரம் வைத்துக்கொண்டு பார்க்காமல், ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு பிரதேசத்திலும் உள்ள பிரதிநிதிகள் இந்த கமிட்டியில் இருக்கவேண்டும். அம்மாதிரி போட்டால் இம்மாதிரியுள்ள ஒரு சட்டத்தை கொண்டு வருவதற்கு மிக உதவிகரமாக இருக்கும். அதுமட்டுமல்ல, உணவு பிரச்னை

11th September 1958] [Sri V. K. Kothandaraman]

என்பது ஒரு முக்கியமான பிரச்னை என்பதை உணர்ந்து, இம்மாதிரி சர்வ கட்சி தலைவர்களையும் சேர்த்து ஒரு கமிட்டி அமைத்து அடுத்த ஆண்டிலேயே ஒரு நில சீர்திருத்த சட்டத்தைக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

Sri K. R. NALLASIVAM : சபைத் தலைவர் அவர்களே, வெளியே இருக்கக்கூடியவர்களுக்கு இந்த நில சீர்திருத்த மசோதாவானது உண்மையாகவே வெகு ஆவலுடன் எதிர்பார்க்கக்கூடிய ஒரு விஷயமாக இருக்கிறது. ஆனால் உள்ளே இருக்கக்கூடிய சட்டசபை அங்கத்தினர்களுக்கு இது ஒரு புளித்துப்போன சமாச்சாரமாக இருந்து கொண்டிருக்கிறது. திருப்பித் திருப்பி பேசுவதை தவிர காரியத்தில் வேறு எதுவும் செய்யாமல் இருந்து கொண்டிருக்கின்ற நிலையில் இந்த நில சீர்திருத்த மசோதா வரவேண்டும் என்று இப்போதும் சொல்லிக்கொண்டிருக்கின்றோம். முதலாவதாக நியாய வார குத்தகை பாதுகாப்பு சட்டம் என்றும், நியாயவார சட்டம் என்றெல்லாம் சட்டங்கள் கொண்டு வரப்பட்டது. அதைப்போலவே இந்த நிலச்சீர்திருத்தச் சட்டமும் வரப்போகிறது என்றும், இதைப்பற்றி கவலைப் படாதீர்கள் என்றும் மந்திரிமார்கள் சொல்லிக்கொண்டேயிருந்தார்கள். குட்டையில் பாசிப்பிடித்து கிடப்பது போல் இந்த சட்டம் வெளியே வராமல் உள்ளேயே தயங்கிகொண்டு இருக்கிறது. இதில் நான் ஒன்றிரண்டு குறிப்பிட்ட விஷயங்களை மாத்திரம் கூற விரும்புகிறேன். ஒன்று, எல்லோரும் சமமாக வாழவேண்டும் என்றுள்ள உணர்ச்சி மக்கள் மனதில் ஆழமாக பதிந்து அதன் மூலமாக அவர்கள் எழுச்சியுற்று இருக்கிறார்கள், இரண்டாவது, உணவுப் பிரச்னை காரணமாக நாட்டில் பஞ்சம் வந்துகொண்டிருக்கிறது. நம் நாட்டில் சில இடங்களில் வயிறார சாப்பிடுவதற்கு சிலருக்கு வசதியிருக்கிறது என்றாலும் பல ராஜ்யங்களிலும் இப்பிரச்னை ஒரு பெரிய பிரச்னையாக வந்து அதன் காரணமாக மக்கள் கிளர்ச்சியும் புரட்சியும் செய்து வருகிறார்கள். இந்த நிலைமை ஏன் ஏற்படுகிறது. சில சமயங்களில் இயற்கை நமக்கு ஒத்துப்போகாமல் இருக்கலாம். ஆனால் இந்த பிரச்னையை நாம் நல்ல முறையில் கவனித்தாகவேண்டும். இந்த விஷயம் உடனடியாக கவனிக்கவேண்டிய பிரச்னை என்பதை எல்லோரும் உணர முடியும். இன்றைக்கு அதிகமாக உற்பத்தி செய்யக்கூடியவர்கள் யாரென்று பார்த்தால் அதிகமாக நிலம் வைத்திருக்கக்கூடியவர்கள் தான் அதிகமாக உற்பத்தி செய்கிறார்கள் என்று சொல்லமுடியாது. பரிசுகளை பெறுவதற்காக வேண்டுமானால் சில இடங்களில் மாத்திரம் அதிகமாக உற்பத்தி செய்து காட்டுவார்கள். இன்றைக்கு உண்மையில் அதிகமாக உற்பத்தி செய்யக்கூடியவர்கள் ஒன்றிரண்டு ஏக்கர்களை வைத்துக் கொண்டிருப்பவர்கள் தான். இதை நாம் அனுபவ பூர்வமாக பார்க்க முடியும். பெரிய நிலச்சுவான்தார்கள். அதாவது அதிகம் நிலம் வைத்திருப்பவர்கள் ஏக்கர் ஒன்றுக்கு 3,000 பவுண்ட் அல்லது 4,000 பவுண்ட் நெல் உற்பத்தியை தான் காண்பிக்கிறார்கள். ஆனால் ஒன்று அல்லது இரண்டு ஏக்கர் நிலம் வைத்திருப்பவர்கள் ஏக்கர் ஒன்றுக்கு 5,000 பவுண்ட், 6,000 பவுண்ட் நெல் உற்பத்தி செய்வதை காட்டுகிறார்கள். இந்த அடிப்படையில் பார்த்தால் நிலம் ஒரே ஆளிடம் அதிகமாக இருந்தால் உணவு பற்றாக்குறை தீர்ந்து விடும் என்று நம்ப முடியாது. சிறிய அளவில் நிலம் இருந்தால் தான் உணவு பற்றாக்குறையை நாம் சமாளிக்க முடியும் என்பதை நாம் நிச்சயமாக நம்பலாம். ஒரு விஷயத்தை மாத்திரம் நாம் நன்றாக தெரிந்து கொள்ளவேண்டும். அதாவது இன்றைக்கு நீர்ப்பாசன வசதி செய்யப்பட்ட பிரதேசங்களில் கூட, அதாவது அணைக்கட்டுப் பிரதேசங்களில் கூட 100-க்கு 40 வீதமுள்ள நிலங்கள் சாகுபடிக்கு இன்னும் கொண்டுவரப்படாமல் இருக்கிறது என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். கால்வாய்கள், மதகுகள் இவைகள் எல்லாம் இருந்தும் பல இடங்களில், அதாவது நீர் பாசன வசதி செய்யப்பட்ட இடங்களில் இன்னும் 40 சதவிகிதம் நிலங்கள் சாகுபடிக்கு கொண்டு வரப்படவில்லை. இதற்கு பல காரணங்கள் இருக்கலாம். ஒன்று ஒழுங்காக தண்ணீர் வருவதில்லை. இரண்டவதாக பார்க்கப்போனால் இவைகளில் அதிகமான நிலங்கள் பெரிய நிலச்சுவான்தார்கள் கையில் இருப்பது தான். அவர்கள் கையில் இருக்கின்ற நிலங்களில் ஓரளவுக்குத்தான் பயிர் செய்து கொண்டிருக்கிறார்கள். அதை குத்தகைக்கு விடுவதோ அல்லது சாகுபடி செய்வதோ கிடை

[Sri K. R. Nallasivam] [11th September 1958

யாது. இது முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம். இங்கு மாத்திர மல்ல, சகல பகுதிகளிலும் இவ்விதமாகவே தான் இருக்கிறது என்று சமீ பத்தில் வெளியான மத்திய சர்க்கார் குறிப்பு ஒன்றில் காணப்பட்டது. அணைக்கட்டுகளின் கீழ் உள்ள நிலங்களில் நூற்றுக்கு 40 வீதம் சாகுபடிக்கு கொண்டு வரப்படவில்லை என்று சொல்லப்பட்டிருந் தது. அதை வைத்துக்கொண்டுதான் நான் சொல்லுகிறேன். இன் றைக்கு கூட பாசன பிரதேசங்களில் நாம் போய் பார்ப்போமேயானால் இந்த உண்மையை கண்டு கொள்ளமுடியும். இன்னொன்று ஜப்பானிய விவசாய முறையைப்பற்றி நாம் பேசுகிறோம். இங்கு யாராவது ஜப்பானிய முறையில் விவசாயம் செய்யக்கூடியவர்கள் இருந்தால் அவர்களை கேட்கி றேன். எவ்வளவு பெரிய விவசாயாக இருந்தாலும் ஐந்து எக்கர் அல்லது பத்து எக்கர் இருந்தால்தான் ஜப்பானிய முறைப்படி விவசாயம் செய்தால் நல்ல பலன் கிடைக்க முடியும், அதல்லாமல் 50 எக்கர் அல்லது 100 எக்கர் என்று வைத்துக்கொண்டு ஜப்பானிய முறையில் விவசாயம் செய் தால் நல்ல பலனை காண முடியாது என்பதை அவர்களும் ஒப்புக்கொள் வார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே ஒரு குறிப்பிட்ட அளவுக்கு நிலத் தை எடுத்து வைத்துக்கொண்டு ஜப்பானிய முறையில் விவசாயம் செய்தால் தான் அதிகமாக உற்பத்தி செய்யமுடியும். எந்த இடத்திலிருந்து பார்த்தாலும், நிச்சயமாக இந்த நிலச் சீர்திருத்தம் வந்தே ஆகவேண்டும்.
10.40 a.m. நிலச் சீர்திருத்தம் வந்தால் தான் நாட்டில் சுபிட்சம் ஏற்பட முடியும், நாட்டில் சமத்துவம் ஏற்பட முடியும் என்று நமது ஆட்சியாளர்கள் நல்ல மனதோடு கொண்டு வந்தால் அவர்கள் பாராட்டப்படுவார்கள் என்று சொல்லிக்கொண்டு, என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri A. R. MARIMUTHU** : கனம் தலைவர் அவர்களே, இப்போது கொண்டுவரப்பட்டிருக்கும் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைக் கூற ஆசைப்படுகிறேன்.

இன்றைக்கு நாட்டிலே எங்கு பார்த்தாலும் நிலவுடமைக்கு வரம்பு கட்டவேண்டுமென்ற எண்ணம் பரவலாக எல்லோரிடத்திலும் இருக்கிறது. கடந்த காலமாக நிலவுடமைக்கு வரம்பு கட்டப் போகிறோம் என்று ஆட்சி யிலே இருக்கக்கூடிய கட்சியாரால் சொல்லப்பட்டு வருகிறது. அவர்கள் சொல்லிக்கொண்டு வருகிறார்களே தவிர, நிலவுடமைக்கு வரம்பு கட்டும் சட்டத்தை இன்னும் கொண்டுவந்தபாடில்லை. இதனால் தேசத்தில் என்ன விளைவு ஏற்படுகிறது என்று பார்க்கவேண்டும். எந்தக் காரியத்தையும் தேசீய அடிப்படையில், தேசத்தின் பொருளாதார நலத்திற்குக் குந்தகம் இல்லாமல், செய்யவேண்டிய கடமை இந்த தேசத்தில் இருக்கின்ற ஒவ் வொருவருக்கும், குறிப்பாக ஆட்சியில் இருப்பவர்களுக்கு, உண்டு. உண வுப் பொருள்கள் உற்பத்தியில் பற்றாக்குறை இருக்கிறது. அதனால் விலை வாசிகள் ஏறியிருக்கின்றன, உணவுப் பொருள்களை வாங்கிச் சாப்பிடுபவர் கள், விலையேற்றத்தினால் வாங்கிச் சாப்பிட முடியாமல் கஷ்டப்படுகிறார்கள், உணவுப் பற்றாக்குறையினால் மற்ற தொழில்களெல்லாம் பாதிக்கப்படு கின்றன என்று இந்தச் சபையில் நேற்று சொல்லப்பட்டது. அது அவ்வ ளவும் உண்மை. இன்றைக்கு உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவதற்கு இது அவசியம். ஆகவே உணவு உற்பத்தியில் கவனம் செலுத்தவேண்டியது நாட்டில் உள்ள எல்லோருடைய கடமை, அரசாங்கத்தினுடைய கடமையாகும்.

இன்றைக்கு பெருமளவு நிலம் வைத்திருக்கும் மிராசுதார்களுக்கு, அவர்களுடைய நிலத்தில் அக்கரை இல்லாமல் போகிறது. காரணம், நிச்சயமாக நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்டப் போகிறார்கள் என்பதால், அவர்கள் அக்கரை செலுத்தவில்லை. மேலும் மேலும் வரும் சிறு சிறு சட்டங்களாலும் அவர்களுக்கு அக்கரை இல்லாமல் போகிறது. அதை விட்டு, அந்த நிலத்தில் உழைத்துப் பாடுபடும் விவசாயிகளுக்கும் அதில் அக்கரை இல்லாமல் இருக்கிறது. ஏனென்றால், அவர்கள் இந்த நிலம் தான் நமக்குச் சொந்தமில்லையே என்று அவர்கள் அக்கரை கொள்ள வில்லை. இப்படி நிலச்சுவாந்தார்களுக்கும், அதில் உழைத்துப் பாடுபட்டு விவசாயம் செய்பவர்களுக்கும் அக்கரையில்லாமல் போனால் அந்த நிலத் தின் உற்பத்தி பாதிக்கப்படும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ள

11th September 1958] [Sri A. R. Marimuthu]

வேண்டும். ஆகவே, இன்றையதினம் சிறு சிறு சட்டங்களைச் செய்து விட்டு பெரிய மிராசுதார்களிடமுள்ள நிலங்களைப் பிரித்துக்கொடுக்காமல் அரசாங்கம் போய்க்கொண்டிருப்பதனாலே நாட்டில் உற்பத்தி பெருகுகிறதா அல்லது குறைகிறதா என்பதைப் புரிந்துகொள்ளவேண்டும். நிலவுடமைக்கு வரம்பு கட்டப் போகிறோம் என்று கூறிவிட்டார்கள். அதை உடனே செய்யாமல் காலம் தாழ்த்தினால் என்ன உபயோகம் ஏற்படப் போகிறது. அதனால் உற்பத்தி குறைகிறது என்பதுதான் என்னுடைய வாதம். நிச்சயமாக உற்பத்தி சரியாக இருக்கமுடியாது. இப்போது இன்னும் அதிக நிலம் பாய்ச்சலுக்கு வந்தாலும், நம்முடைய தேவைக்கு அதிகமாக உணவு உற்பத்தி செய்யவில்லை. இதற்குக் காரணமென்ன? நிலத்தில் அக்கரை அதிகம் செலுத்தப்படவில்லை என்ற காரணம் தான். நிலவுடமைக்கு வரம்பு கட்டப்போகிறார்கள் என்று மிராசுதார்கள் கவனம் செலுத்தாமல் இருக்கிறார்கள். நிலத்தில் வேலை செய்யும் விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவது போன்ற காரணங்களினால் கோர்ட்டுக்கு அலைகின்ற வேலை ஏற்பட்டு அதனால் நிலத்தில் உழைக்கின்ற நேரம் வீணாகி, அதனால் உழைப்பு சக்தியை பூரணமாகப் பயன்படுத்தும் நிலைமையில் இல்லாமல் இருக்கிறார்கள். ஆகையால் நிலவுடமைக்கு வரம்பு கட்ட வேண்டியது அவசியம் என்று இந்த சந்தர்ப்பத்திலே வற்புறுத்திக் கூறுகிறேன்.

இப்போது நிலத்திற்கு வரம்பு கட்டுவதிலே பெரிய நிலச்சுவாந்தார்கள் இதை எதிர்க்கவில்லை. ஏனென்றால் இதை இப்போது ஒரு பாரமாகவே அவர்கள் கருதுகிறார்கள். இதை வைத்துக்கொண்டிருப்பதன் மூலம், சம்பாதித்து சுகமாக இருக்கவேண்டும் என்ற எண்ணம் யாருக்கும் இப்போது இல்லை. ஆகையால் அவர்கள் பக்கத்திலிருந்து நிச்சயமாக எதிர்ப்பு இருக்க முடியாது. ஆகவே, அரசாங்கம் எந்த வித எதிர்ப்புமில்லாமல் இருக்கும்போது, உச்ச வரம்பு கட்டுவதில் ஏன் காலம் தாழ்த்தவேண்டும்? இப்படிக் காலம் தாழ்த்தினால் அவசியம் நம் நாட்டின் பொருளாதாரத்திற்குக் குந்தகம் வரும் என்று கூறுகிறேன்.

மேலும் இன்றைக்கு உச்ச வரம்பு கட்டிவிட்டால் தேசத்தில் நிச்சயம் அபிவிருத்தி ஏற்பட்டுவிடும் என்று எல்லோரும் எண்ணுகிறோம். நாம் நிச்சயம் உற்பத்தியைப் பெருக்கவேண்டும். நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டி, அதிகப்படியான நிலத்தை நிலமில்லாதவர்களுக்குக் கொடுத்து விட்டால் மட்டும் உற்பத்தியைப் பெருக்கிவிட முடியாது. தீவிர முயற்சியெடுத்துக்கொண்டு வேலை செய்தால்தான் உற்பத்தி ஏற்படும். அதற்கு மாறாக நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டி, நிலத்தைப் பிரித்துக் கொடுத்தால், உற்பத்தி பெருகுவதற்கு பதிலாக, உற்பத்தி குறைந்தால் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. நிச்சயமாக வரம்பு கட்டுவதன் மூலம் உற்பத்தி அதிகரிக்கக்கூடிய நிலைமை ஏற்படலாம். விவசாயிகளுக்கு எந்த அளவு உதவிகளை அரசாங்கம் செய்து கொடுக்கிறதோ அதைப் பொருத்தது உணவு உற்பத்தி அதிகரிப்பும். அரசாங்கம், விவசாயிகளுக்குச் சாகுபடி செய்வதற்கு என்ன அதிக பட்சம் செய்ய முடியுமோ அதைச் செய்தால் விளைச்சல் அதிகரிக்குமேயல்லாமல், ஒன்றும் செய்யாவிட்டால் உணவுப்பெருக்கத் திட்டம் மோசமான நிலையில் போகலாம். உச்ச வரம்பு கட்டுவதோடுகூட கூட்டுறவு முறையில் நிலத்தை சாகுபடிக்குக் கொண்டு வரவேண்டும். அத்தோடுகூட எத்தனை வசதிகள் வேண்டுமோ, அத்தனை வசதிகளையும் சர்க்கார் செய்துகொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். இப்போது நடை முறையில் எப்படி இருக்கிறது? விவசாய காலம் என்று வைத்துகொள்வோம். லோன் பாக்கியை இன்றைக்கு சாகுபடி காலத்தில் வசூலிக்கும்படி உத்திரவு போடுகிறார்கள். அப்போது அவர்கள் சென்ற ஆண்டு சாகுபடியினால் சேமித்து வைத்திருக்கக் கூடியதைக் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அந்தத் தொகையை வசூலித்து விட்டால் அந்த ஆண்டு சாகுபடியை காலம் தாழ்த்தி ஆரம்பிக்கிறான். "கூர் தப்பினால் குப்பையும் பயிராகாது" என்று சொல்வது போல, 45 நாட்களில் பயிர் செய்யவேண்டியதை, 55, 60, 70 நாட்கள் கழித்து—பணம் இல்லாததால் வேறு இடத்தில் கடன் வாங்கி சாகுபடி செய்யவேண்டியிருப்பதால்—பயிரிடுவதால் விளையக்கூடியது குறைந்து விடுகிறது என்பது என்னுடைய அனு

[Sri A. R. Marimuthu] [11th September 1958

பவத்தில் கண்ட உண்மை. இதை அரசாங்கம் கவனிக்கவேண்டும். ஆக இன்றைக்கு உற்பத்திப் பெருக்கத்திற்காக விவசாயிகளுக்கு ஊக்கம் கொடுக்கிறோம் என்று பேசிவிட்டு ஊக்கமில்லாதவாறு நடவடிக்கை எடுப்பதால் உற்பத்தி குறைகிறது.

என்னுடைய தொகுதியில் பட்டுக்கோட்டை, அரந்தாங்கிப் பகுதியில் சென்ற ஆண்டு கடன் வசூலிப்பதில் கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட்டது. அதனால் அவர்கள் மாடுகளை விற்றுப் பணத்தைக் கட்டினார்கள். விதைகளை விற்றுப் பணத்தைக் கட்டினார்கள். அதனால் என்ன நடந்தது ? காலம் தாழ்ந்து சாகுபடி நடந்தது. சர்க்காருடைய புள்ளி விவரப்படி குறையவில்லை என்றிருக்கலாம். ஏனென்றால் கிராமத்திலுள்ள கர்ணம் குறையவில்லை என்று எழுதியனுப்பியிருக்கலாம். உற்பத்தி குறைந்திருக்கிறதா, இல்லையா என்பது நிதர்சனமாக இந்த இடத்தில் இருப்பவர்கள் உணர்வார்கள். ஆகையால் அரசாங்கம் எத்தனை வகையில் விவசாயிகளுக்கு உதவ முடியுமோ, அத்தனை வகையில் உதவியளித்து விவசாயத்தைப் பெருக்கி, உற்பத்தியை அதிகரிக்க முயற்சி செய்யவேண்டும்.

ஆகவே, இந்த முறையிலே அரசாங்கம் கவனம் செலுத்தி காலம் தாழ்த்தாமல், நிலச்சுவாந்தர்களுக்கும் சரி, விவசாயிகளுக்கும் சரி, ஒரு நிச்சயமற்ற தன்மை இருப்பதைப் போக்கி, உற்பத்தியைப் பெருக்க, நில உடைமைக்கு வரம்பு கட்டி, அத்துடன் விவசாயிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் நாட்டிலே புறம்போக்கு நிலம் லட்சக்கணக்கான ஏக்கர்கள் இருக்கின்றன. அவைகளை உடனடியாக விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்கவேண்டும். எங்களுக்குப் பிரித்துக் கொடுத்தால் நாங்கள் உடனடியாக சாகுபடி செய்கிறோம் என்று சொல்கிறார்கள். அதற்கான மனுக்கள் கொடுத்திருக்கிறார்கள். அதற்கு அநேக இடையூறுகள் இருக்கின்றன. 1,000 ரூபாய் 500 ரூபாய் செலவழித்தால் தான் நிலம் கிடைக்கிறது. இப்படிப்பட்ட ஒரு நிலையில் இருக்கிறது நிர்வாகம். இந்த நிலையைப் போக்கி, உணவு உற்பத்திப் பெருக்கத்திற்கான ஒரு நிலையைக் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அரசாங்கம் காலம் தாழ்த்தாமல், அடுத்த தேர்தலில் இதை வைத்துக்கொண்டு ஓட்டு வாங்கிவிடலாம் என்று எண்ணமல்—ஓட்டுப்போடுபவர்கள் எப்படியும் போடுவார்கள், போடாதவர்கள் எப்படியும் போடமாட்டார்கள்—இந்த நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவதை உடனடியாக நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

10-50 a.m. **Sri C. MUTHIAH PILLAI** : கனம் தலைவர் அவர்களே, நில உரிமைச் சட்டம், நிலச் சீர்திருத்தம் என்பதுபற்றி அரசாங்கத்தின் கொள்கையும், அரசாங்கக் கட்சியின் கொள்கையுமாக, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி முதல் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி வரையிலே எது எதை எவ்வெப்போது செய்யவேண்டுமென்று ஒரு விஞ்ஞாபனம் கொடுத்தது எல்லோருக்கும் தெரியுமென்று நான் நினைக்கிறேன். நமது மாகாண ரெவென்யூ அமைச்சர் அவர்கள் சென்ற வருஷம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிய ஒரு பிரசுரத்தில் நிலச்சீர்திருத்த உடமை பற்றி ஆங்கிலத்தில் ஒரு அத்தியாயம் எழுதி, எது எதை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை அவர்கள் எடுத்துரைத்திருப்பதைப் பார்த்தபொழுது எனக்கு இருந்த சந்தேகம் விலகிவிட்டது. நிச்சயமாக இந்தப் பிரச்னை தீர்க்கப்படும் என்பதை உறுதியாகக் கூறமுடியும். அப்படியிருக்கும் பொழுது, நிலச்சீர்திருத்த சட்டத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்ட பிறகு இங்கு இருக்கிற நிலைமையை எடுத்துப் பேசுகின்றவர்களின் பேச்சு அதை எப்படி செய்யவேண்டும், எந்தப்பக்கத்தில் யாருக்கு நன்மை ஏற்படவேண்டும் என்ற முறையில் இருக்கும் என்று எதிர்பார்த்தேன். அதற்கு மாறாக அரசாங்கம் இதைச் செய்யாமலிருப்பது போலவும், இதைத் தள்ளிப்போட்டுக்கொண்டு வருவது போலவும் பேசினார்கள். கனம் ரெவன்யூ அமைச்சர் அவர்கள் என்னுடைய கேள்விக்குப் பதில் சொல்லும்போது, " இந்தச் சட்டம் அரசாங்கத்தின் பரிசீலனையிலிருக்கிறது, எவ்வாறு செய்யவேண்டுமென்பதைப்பற்றி யோசித்து வருகிறோம் " என்று சொன்னார்கள்.

11th September 1958] [Sri C. Muthiah Pillai]

உறுதியாக, ஆணித்தரமாகச் சொல்லவேண்டும் என்று கேட்டபொழுது, அவர்களும் " ஆணித்தரமாகச் சொல்லுகிறேன் " என்று சொன்னதை நான் இந்த சந்தர்ப்பத்தில் ஞாபகப்படுத்த விரும்பிகிறேன். இதிலே உள்ள சிக்கல்களை உணர்வார்கள் என்று நம்புகிறேன். தஞ்சை ஜில்லாவிலுள்ள மிராசுதார்கள் " எங்களைச் சிறிது சிறிதாகக் கொல்லாதீர்கள், உடனடியாகக் கொல்லுங்கள் " என்று அமைச்சர் அவர்களிடத்தில் சொல்லியிருப்பது எனக்குத் தெரியும். மேலும் அமைச்சர் அவர்கள் அதிகம் சாப்பிடவும், சட்டையும் போட்டு உல்லாசமாக பொழுது போக்க முடியாது என கூறியபோது அமைச்சர்களை மிரட்டி கடிதம் எழுதியிருக்கிறார்கள். எவ்வளவு தூரம் மிராசுதார்கள் ஆத்திரம் அடைந்திருக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்டவே இதை எல்லாம் சொல்லுகிறேன். அரசாங்கம் மிராசுதார்கள் பக்கத்தில் இருந்தால், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி மிராசுதார்களை கைக்கூலிகளாக வைத்துக்கொண்டு அரசாங்கம் நடத்தவேண்டுமென்று நினைத்திருந்தால், அவர்களுடைய மனப்பான்மை இப்படி இருக்க முடியாது என்று யாரும் சொல்லி நாம் தெரிந்துகொள்ளவேண்டிய நிலையில் நாம் இல்லை.

நிலைமை இப்படியிருக்கும்பொழுது, நிலச்சீர்திருத்த சட்டம் எப்படி அமையவேண்டும், எந்த அடிப்படையிலே இந்தப் பிரச்னையைக் கவனிக்க வேண்டும் என்பதைப் பற்றித்தான் நான் இப்பொழுது சொல்ல விரும்புகிறேன். முதலிலே, முக்கியமான யோசனையாக நிலச்சீர்திருத்தச் சட்டம் வந்தால் யாருக்கு எப்படி பங்கு கொடுக்கவேண்டுமென்பதற்கு அடிப்படையாக **Tenants deed** அதாவது அடைப்புச் சீட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதன்படி யாருக்கு எவ்வளவு கொடுக்கவேண்டுமென்று நிர்ணயிக்கவேண்டும். இன்றையதினம் உழவடை பாத்யதை கொடுத்திருக்கிறோம். உழவடை பாத்யதையை விவசாயிகளிடமிருந்து மிராசுதார்கள் வாங்குவதற்கு குழி ஒன்றுக்கு 1½ முதல் 2½ ரூபாய் வரை கொடுக்கிறார்கள். இவைகளை எல்லாம் தவிர்ப்பதற்கு தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும். விவசாயிகளுக்கு உரிமை கொடுத்தால் கூட சொத்தை எவ்வாறு பாதுகாக்கவேண்டும், இந்தச் சட்டமானது எந்த முறையில் அமல் செய்யப்பட வேண்டும் என்பதற்கு வேறு ஒரு சட்ட வரவேண்டும். கவர்னர் பெருமானின் உரையிலே அதிகபட்ச நிலம் வைத்துக்கொண்டிருப்பவர்கள் மேற்கொண்டு நிலம் வாங்கக்கூடாது என்பதற்கு சட்டம் கொண்டுவரப்போவதாக தெரிவிக்கப்பட்டது. எங்களுக்குக்கூட ஆச்சரியமாக மாக இருந்தது. அதிகபட்ச நிலத்தை பகிர்ந்து கொடுக்கவேண்டிய நேரத்திலே, நிலம் வைத்திருப்பவர்கள் மேலும் அதிகமாக நிலம் வாங்கக் கூடாது என்று சொல்லுகிறார்களே, இது அரசாங்கத்தில் என்ன யோசனையோடு கொண்டுவரப்படும் என்று விளக்கப்படும் என்று எதிர்பார்த்தோம். ஏன் அந்தச் சட்டத்தைக் கொண்டுவரவில்லை என்பதை அமைச்சர் அவர்கள் விளக்கிக் கூறவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நமது மகாணத்திலே இப்பொழுது மிராசுதார்கள் வேகமாகப் பாகப்பிரிவினை செய்துகொண்டு வருகிறார்கள். நாம் நிலச்சீர்திருத்த சட்டம் கொண்டுவருகிற வரையிலும் அவர்கள் பேசாமல் இருந்து கொண்டிருப்பார்கள் என்று சந்தேகப்படவேண்டியதில்லை. " புலி வருகிறது, புலி வருகிறது " என்று சொல்லிக் கொண்டதின் காரணமாக, இன்று பெரிய புலிகள் எல்லாம் சிறிய ஓநாய்களாக மாறிவிட்டன. பிறந்த குழந்தைகள், இனி பிறக்கப்போகும் குழந்தைகள் எல்லோருக்கும் பாகம் கொடுத்து பாகப் பிரிவினை செய்துகொண்டிருக்கிறார்கள். இன்னும் பட்டாவைக்கூட மாற்றி வைத்திருக்கிறார்கள். ஆகவே வரப்போகின்ற சட்டத்தில் யார் எந்த நிலையில் பாகப்பிரிவினை செய்திருந்தாலும், பட்டாவை மாற்றியிருந்தாலும், ஒரு குடும்பத்துக்கு இவ்வளவு ஏக்கர் என்பதை நிர்ணயித்து, அதற்கு மேலிருப்பதை ஒரு ஆண்டுக்கு முன்பாக பாகப்பிரிவினை செய்திருந்தால், அது செல்லாது என்ற முறையில் அனுபவமுள்ள அமைச்சர்கள் சட்டம் கொண்டு வரவேண்டும். இப்படிச் செய்தால்தான் பாகப்பிரிவினை செய்துகொண்ட மிராசுதார்கள் ஏமாறுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இப்படிச் செய்வதன் மூலம்தான் சட்டத்தின் அடிப்படை நோக்கம் கைகூடும். பாகப்பிரிவினையை அனுமதித்தால், நிலச் சீர்திருத்தச் சட்டத்தின் கீழ் எத்தனை பேர் வருகிறார்கள் என்று பார்த்தால் ஒரு

[Sri C. Muthiah Pillai] [11th September 1958

ஜில்லாவிற்கு ஒருவர் இருவர்கூட இல்லாத நிலையில்தான் இருக்கும். சட்டத்தினால் எவ்வித பலனும் இல்லாமல் போகும். இப்பொழுது 3-வது சட்டமாக பண்ணை சாகுபடி வரம்பும், நடுத்தரக் குத்தகைதாரர்கள் மாகாணம் பூராவும் இருக்கக்கூடாது என்கிற சட்டமும் வரவேண்டும். நேரிட சாகுபடியாளருக்கு நிலத்தைக் கொடுக்கவேண்டும். தர்ம பரிபாலன நிலத்தை எடுத்துக்கொண்டு பார்ப்போமேயானால், ஒவ்வொருவரும் 1,000 ஏக்கர் 2,000 ஏக்கர் என்று குத்தகைக்கு எடுத்துக்கொண்டு பண்ணையாட்கள் வைத்து சாகுபடி செய்கிறார்கள். ஆகவே நடுத்தர குத்தகைக்காரர்களுக்குக் கொடுக்கக் கூடாது என்று சட்டத்தை முதலிலே கொண்டு வரவேண்டும். அடுத்ததாக, நமது மாகாணத்திலே நமது விவசாய அமைச்சர் அவர்கள் ஒரு வருடத்திற்கு மேல் ஒருவருக்கும் குத்தகைக்கு விடக்கூடாது என்று உத்தரவு அனுப்பியிருப்பதைப் பாராட்டுகிறேன். கூட்டுறவு முறையை யார் ஒப்புக்கொள்கிறார்களோ அவர்கள் சாகுபடி செய்யலாம், பண்ணை நிலங்கள் இருக்கக்கூடாது, 5 ஏக்கருக்கு மேல் ஒருவரும் சாகுபடி செய்யக் கூடாது என்று மடாபதிபதிகளுக்கும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் உத்திரவு போட்டால் மிகவும் நலமாக இருக்கும். இதையெல்லாம் செய்தால் நாம் சுமுகமான நிலையில் 3-வது நில சீர்த்திருத்த சட்டத்தைக் கொண்டுவரலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இம்மாதிரிச் சட்டங்கள் எல்லாம் கொண்டுவரும்பொழுது, எந்தெந்த அடிப்படையிலே காம்பன்சேஷன் கொடுப்பது என்கிற பிரச்னை ஏற்படுகின்ற காரணத்தினாலே அரசாங்கம் இதைக் கொண்டுவரத் தயங்குகிறது என்று நினைக்கிறேன். இப்பொழுது அதிகபட்ச நிலம் வைத்திருக்கிற மிராசுதார்களுக்கு, இத்தனை ஏக்கர் நிலத்திற்குமேல் வைத்திருப்பவர்களுக்கு காம்பன்சேஷன் கொடுக்கத் தேவையில்லை என்றுமத்திய சர்க்காருக்கு எழுதி, அரசியல் சட்டத்தை மாற்றினால் ஒழிய நாம் சோஷலிஸ சமுதாய பாணியில் போகமுடியாது என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். கிராமங்களிலே நிலத்தைச் சுற்றிப் பார்க்கும் மிராசுதார்கள் குறைந்து விட்டார்கள். எல்லோரும் நகரங்களுக்கு வந்து கூட்டுறவு முறையில் நல்ல அழகான வீடுகளைக் கட்டிக்கொண்டு வசிக்கிறார்கள். நகரங்களிலே விவசாயிகளை எப்படி ஒழிப்பது என்பதற்காக, நகரத்திலுள்ள அதிகாரிகளை வைத்துக் கொண்டு திட்டம் போடுகிறார்கள். ஆகவே இம்மாதிரி நிலைமையை மாற்றுவதற்கு, எந்தக் கட்சியினரும் ஒரு தூண்டுகோலாக வைத்துக்கொண்டு, " நாங்கள் நிலச்சீர்த்திருத்தத்தைக் கொண்டு வந்தோம் " என்று பேசுவதற்கு இடம் கொடுக்காமல், அரசாங்கத்தின் முக்கியமானதொரு கொள்கையாகக் கருதி, என்னென்ன முன் நடவடிக்கைகள் செய்ய வேண்டுமோ அவற்றைச் செய்து, இந்த சட்டசபைக் காலத்திலேயே, அதாவது நாங்கள் மெம்பர்களாயிருக்கும் காலத்திலேயே, நமது அனுபவமுள்ள அமைச்சரவை இந்த நிலச் சீர்த்திருத்த சட்டத்தைக் கொண்டு வரவேண்டும், அப்படிக் கொண்டுவந்தால் கஷ்டப்படுகிற விவசாயிகளுக்கு நல்ல பயனை அளிக்கும், உற்பத்தியும் பெருகும் என்று சொல்லிக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. U. SHANMUGAM** : கனம் தலைவர் அவர்களே, நிலச் சீர்திருத்த சட்டத்தைக் குறித்து நண்பர் கோதண்டராமன் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கும் வகையில் நான் சார்ந்திருக்கிற திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் சில கருத்துக்களை தெரிவிக்க விரும்புகிறேன். எனக்கு முன்பு பேசிய கனம் முத்தைய்யா பிள்ளை அவர்கள் " நிலச் சீர்திருத்த சட்டம் வரவிருக்கிறது, வரவிருக்கிற நிலச் சட்டம் சர்க்கார் பரிசீலனையில் இருக்கிறது, சட்டத்தைக் கொண்டு வருவதற்கு சர்க்கார் கால தாமதம் செய்கிறார்கள் என்று அங்கத்தினர்கள் சொல்வது சரியல்ல, புலி வருகிறது " என்றெல்லாம் குறிப்பிட்டார்கள். புலி வருகிறது, புலி வருகிறது என்று சொல்லுகிறார்கள். எப்பொழுது புலி வருகிறது என்பதை எல்லா அங்கத்தினர்களும் ஆவலோடு எதிர் பார்த்துக்கொண்டு வருகிறோம். புலி வருகிறது என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள். வரப்போகிற புலி சீறும் புலியாக இருக்குமா அல்லது சினிமாவில் காட்டப்படும் வைக்கோல் புலியாக இருக்குமா அல்லது முதலாளிகளுக்கு சங்கடம் விளைவிக்காத சர்க்கஸ் புலியாக இருக்குமா

11th September 1958] [Sri P. U. Shanmugam]

என்று புரியவில்லை. வரும் புலி உழவர்களை காக்கின்ற புலியாக வரட்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். (குறுக்கீடு) பசுத்தோல் போர்த்திய புலி என்று குறிப்பிடுகிறார்கள். பசுத்தோல் போர்த்திய புலி வர வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நான் மற்றொன்று குறிப்பிடுவேன். காங்கிரஸ் சர்க்கார், காங்கிரஸ் கட்சி மட்டுமல்ல, மற்ற எல்லா அரசியல் கட்சிகளும் தேர்தலுக்கு முன்னால் விடுக்கும் தங்கள் பிரகடனத்தில் நிலச் சீர்திருத்தத்தைப்பற்றி குறிப்பிட்டிருந்தார்கள். நிலச் சீர்திருத்தத்தை தேர்தல் பிரகடனத்தில் சேர்த்திடாத அரசியல் கட்சியே கிடையாது என்று சொல்லலாம். குறிப்பாக, காங்கிரஸ் கட்சி, தேர்தலில் ஈடுபடுவதற்கு முன்னால் தங்கள் தேர்தல் பிரகடனத்தில் 'நிலச் சீர்திருத்தத்தைக் கொண்டு வருகிறோம், நிலச் சீர்திருத்தத்தைக் கொண்டு வருகிறோம்' என்று உறுதி கூறியிருந்தார்கள். அதில் மக்களும் நம்பிக்கை வைத்திருந்தார்கள். அப்படியிருந்தும் இன்னும்கூட நிலச் சீர்திருத்தம் ஏன் கொண்டுவரப்படவில்லை என்று குற்றம் சாட்டுகிறேன். காங்கிரஸ் கட்சி 'நிலச் சீர்திருத்தம் கொண்டு வருகிறோம், நிலச் சீர்திருத்தம் கொண்டு வருகிறோம்' என்று மிட்டாதார்களையும் மிராசுதார்களையும் மிரட்டியும், ஏழை உழவர்களை மயக்கியும் வந்திருக்கிறது என்ற பலமான குற்றச்சாட்டை சாட்டுகிறேன். நிலச் சீர்திருத்தம் வருகிறது என்று அவர்கள் சொல்லுவது உண்மையாகவே வேடிக்கையாக இருக்கிறது. நண்பர் கோதண்டராமன் கொண்டுவந்திருக்கும் இந்தத் தீர்மானத்தை இந்த மாமன்றம் நிறைவேற்றி அதன் மூலம் சர்க்காருக்கு நிலச் சீர்திருத்தத்தை உடனடியாகக் கொண்டு வரும்படி சிபார்சு செய்யவேண்டும். இதை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வருவார்கள் என்று யாராலும் சொல்ல முடியாது. ஆகவே, இது எப்பொழுது அமுலுக்குக் கொண்டுவரப்படும் என்பதை மந்திரி அவர்கள் எனக்கு பதில் அளிக்கும்பொழுது தயவு செய்து குறிப்பிட வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பொதுவாக, நிலப் பிரபுக்களின் ஆதிக்கம் அதிகரித்திருக்கிறது, அது ஒழிக்கப்பட வேண்டுமென்பதை எல்லா அரசியல் கட்சிகளும் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீநகரில் கூடிய மகாநாட்டிலும் சரி, சாதாரணமாக கிராமங்களில் கூடுகின்ற மகாநாட்டிலும் சரி, நிலச் சீர்திருத்தம் அவசியம் வரவேண்டும், நிலச் சீர்திருத்தம் அவசியம் வரவேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. அப்படியிருக்கும்பொழுது நிலச் சீர்திருத்தத்தைப்பற்றி இந்த நாள் வரையில் சட்டம் கொண்டு வராதது குறித்து உண்மையிலேயே என்னால் புரிந்துகொள்ளமுடியவில்லை. எனக்கு முன்பு பேசிய கனம் முத்தையா அவர்கள் அதிகப்படியாக நிலம் வாங்குவதை தடுப்பதற்கு ஒரு சட்டம் கொண்டு வரப்படும் என்று கவர்னர் அவர்கள் உரையில் குறிப்பிட்டிருந்ததைப்பற்றி சொன்னார்கள். அந்த உரையில் கவர்னர் அவர்கள் அம்மாதிரி சூசகமாக காட்டிய வழி என்ன ஆயிற்று ? அது நமக்கே புரியவில்லை. நமக்கே அது ஒரு புரியாத புதிராக இருக்கும்பொழுது, சாதாரண பாமர மக்கள் எப்படி புரிந்து கொள்ளமுடியும் ? பொதுவாக, இருக்கும் நிலத்தை ஏழை எளியவர்களுக்கு பகிர்ந்து கொடுக்கும் பிரச்னையில் பல சிக்கல்கள் இருப்பதாக அரசாங்கம் கூறக்கூடும். நிலத்திலே பல தரம் இருக்கிறது, குடும்பத்தின் எண்ணிக்கை இருக்கிறது, எந்த நிலத்தை யாருக்கு எப்படி பிரித்துக் கொடுப்பது என்ற சங்கடங்கள் இருப்பதாக சொல்லக்கூடும். சர்க்கார் இந்த சங்கடங்களை தவிர்ப்பதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ? நான் வேறு எந்த மேல் நாட்டையாவது உதாரணமாகக் காட்டி பேசினால், யாரும் என்னை தயவு செய்து தவறாக கருதமாட்டார்கள் என்று நினைக்கிறேன். சில ஆண்டுகளுக்கு முன்பு அல்ல, சில மாதங்களுக்கு முன்பு, குடியரசு நாடாகிய எகிப்து நாட்டுத் தலைவர் நாஸர் அவர்கள் அங்கு திடீரென்று நிலச் சீர்திருத்தத்தை கொண்டுவந்தார்கள். அங்கே இந்த சிக்கல்களெல்லாம் இல்லையா ? அவர்களுக்கு இந்த சிக்கல்களையும், சங்கடங்களையும் எப்படி தவிர்க்க முடிந்தது ? நிலச் சீர்திருத்தம் கொண்டு வருகிறோம், கொண்டு வருகிறோம் என்று சொல்லிக்கொண்டே இருப்பது வேடிக்கையாகத்தான் இருக்கிறது, விந்தையாக இருக்கிறது.

[Sri P. U. Shanmugam] [11th September 1958

சிக்கல்கள் இருக்கின்றன என்பதை காரணமாக காட்டிக்கொண்டே இருந்தால், எப்பொழுதுதான் இந்த சங்கடங்களை நீக்கப் போகிறீர்கள் என்பது எனக்குப் புரியவில்லை. இந்த சிக்கல்களை உடனடியாக தாண்டிவிட வேண்டும்.

மற்றொன்று நான் குறிப்பிட விரும்புகிறேன். நாட்டில் எங்கு பார்த்தாலும் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், நான் கருதுகிறேன், என்னைச் சார்ந்த திராவிட முன்னேற்றக் கழகம் கருதுகிறது, கிராமப் புறத்திலுள்ள ஏராளமான மக்கள் நகரங்களுக்கு குடிவந்து கொண்டிருப்பதுதான். ஏனென்றால் உழுபவர்களுக்கு நிலம் சொந்தம் கிடையாது. உழுகிறவர்கள் உரிமையோடு உழைப்பதற்கு வழி கிடையாது. நிலத்தைப் பிரித்துக் கொடுக்கிறோம், பிரித்துக் கொடுக்கிறோம் என்று சர்க்கார் சொல்லிக்கொண்டே இருப்பதால், எப்பொழுது பிரித்துக் கொடுக்கிறார்களோ என்று எதிர்பார்த்து, கடைசியில் ஏமாந்த ரீதியிலே வேறு வழியில்லாத காரணத்தினால், கிராமத்திலே உழவுத் தொழிலை விட்டு விட்டு, வேறு தொழிலில் ஈடுபடுவதற்கு நகர்ப்புறங்களுக்கு வந்துவிடும் நிலைமையைப் பார்க்கிறோம். இதனால் நகர்ப்புறங்களில் மக்கள் தொகை அதிகரிப்பதையும், கிராமப் புறங்களில் குறைந்து கொண்டு வருவதையும் நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். எனவே, நிலச் சீர்திருத்தத்தை உடனடியாகக் கொண்டுவர வேண்டும். உழவர்களின் உரிமை பறிபோய் விடுகிறது, உழவர்களின் தேவை கவனிக்கப்படுவது கிடையாது, உழவர்களின் அக்கரையும் குறைகிறது, நிலச் சீர்திருத்தம் கொண்டுவராத காரணத்தினால் என்பதை நான் மட்டும் அல்ல, காங்கிரஸ் கட்சி அத்தனை அங்கத்தினர்களும் ஒத்துக்கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன். உலகத்தில் பல நாடுகளிலும் நிலப் பிரபுக்களை ஒழித்துக்கொண்டு வரும்பொழுது, சுயராஜ்யம் பெற்று 11 ஆண்டு ஆன பிறகும் கூட, நிலச் சீர்திருத்தத்தை தள்ளிப்போடுவது சரியல்ல, முறையல்ல என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இறுதியாக நான் ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன். நிலச் சீர்திருத்த சட்டத்தை உடனடியாக சர்க்கார் கொண்டு வருவதற்கு முயற்சி செய்ய வேண்டும். தனி நபர் கொண்டு வந்திருக்கும் இந்தத் தீர்மானத்தை இந்த மாமன்றம் நிறைவேற்றி வைக்கும் வகையில், நிறைவேற்றும் என்று நினைக்கிறேன். சர்க்கார் இந்தத் தீர்மானத்தை ஏற்று நிலச் சீர்திருத்தச் சட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர முயற்சி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக ஆளும் கட்சியினருக்கு, சட்ட மன்றத் தலைவர் அவர்களே, தங்கள் மூலமாக நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நிலச் சீர்திருத்தம் வருகிறது, நிலச் சீர்திருத்தம் வருகிறது என்று ஊரை ஏய்க்காதீர். அதை உடனடியாகக் கொண்டு வாருங்கள். ஊரை ஏய்க்காதீர், உழவர்கள் வயிற்றெரிச்சலை கிளப்பாதீர். உறுதியாக அறுதியிட்டு கூறுங்கள் எப்பொழுது இந்த சட்டம் வருகிறது என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி போடுகின்ற சட்டம், ஒரு நாள் உதய சூரியன் உதிக்கின்ற நன்னாளில் அமுலுக்கு வரும் என்று நினைக்கிறேன். உதய சூரியனை எதிர்பார்க்கிறோம் மக்களின் சார்பாக, எதிர்பாருங்கள் என்று தெரிவித்துக் கொண்டு, என்னுடைய சிற்றுரையை முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

SRI P. G. KARUTHIRUMAN: கனம் தலைவர் அவர்களே, இப்பொழுது கொண்டுவரப் பட்டிருக்கும் உத்தியோகப் பற்றற்ற தீர்மானம் சம்பந்தமான விஷயங்களை ஆராயும்படியான சமயத்திலே, என்னவோ இது வரையில் ஒன்றும் நடக்காது போலவும், சர்க்காருக்கு, காங்கிரஸ் கட்சிக்கு ஒன்றும் தெரியாது போலவும், இவர்கள்தான் ஏதோ செய்வது போலவும் ஒரு நாடகம் நடப்பதைப் பார்த்து நான் வருத்தப்படுகிறேன். (குறுக்கீடு) என்னுடைய நிலைமையை பூராவும் சொல்லி விடுகிறேன். இவர்கள் சொல்லுகிறார்கள், பூமியை பிரித்துக் கொடுத்துவிட்டால் சீர்

திருத்தம் ஆகிவிடும் என்று பேசுகிறார்கள். இது எப்படி இருக்கிறது என்றால், உண்மையான பூவில்தான் வாசனை இருக்குமே தவிர, காகிதப் பூவில் வாசனை இருக்காது என்பதை அவர்கள் உணர வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்று பூஜ்யர் விநோபாஜி அவர்கள் பூதான யக்ஞத்தின் மூலம் அதிகமாக இருக்கும் நிலங்களை ஏற்றுக் கொண்டு நிலங்கள் இல்லாத ஏழை விவசாயிகளுக்கு அவைகளை பிரித்துக் கொடுப்பதை அவர்கள் அறிவார்களோ, இல்லையோ எனக்குத் தெரியாது. இன்று மிகப் புனிதமான நாள், பாரதியார் நினைவு நாள். விநோபாஜி யின் 74-வது பிறந்த நாள் கொண்டாடப் போகிறோம். இதை யெல்லாம் அவர்கள் மறந்துவிட்டார்கள். முதலில் அதெல்லாம் பூதானம் ஒன்றும் நடக்காது, அதில் நம்பிக்கையில்லை என்று கம்யூனிஸ்டு தோழர்கள் சொல்லி விட்டார்கள். பிறகு கொஞ்சம் நம்பிக்கை இருக்கிறது என்று தெரிவித்திருக்கிறார்கள். நான் ஒன்று கூற விரும்புகிறேன். திட்ட வட்ட மாக எத்தனை ஏகர் பூமி இருக்கிறது, ஜனத்தொகை எத்தனை இருக்கிறது, சராசரி என்ன, எப்படி பிரித்துக் கொடுக்கவேண்டுமென்ற கணக்குப் போட்டார்களா, என்றால் இல்லை. இந்தியா தேசம் பூராவும் உள்ள பூமியில் சராசரி இரண்டு ஏகரா கூட தலைக்கு கிடையாது. உலகம் பூராவும் சராசரியாக கணக்குப் போட்டால் 2·2 ஏகராதான் ஒருவருக்கு வருகிறது. சென்னை ராஜ்யத்தில் உழக்கூடிய பூமி தலைக்கு அரை ஏகர், ஐம்பது செண்டு கூட கிடையாது. காடு, மலை எல்லாம் சேர்ந்து மூன்று கோடி பேர்களுக்கும், மூன்று கோடி ஏகர் கூட கிடையாது. இதை யெல்லாம் கணக்கெடுத்துப் பார்த்து நிலைமை எப்படி இருக்கிறது என்பதை தெரிந்து கொள்ளவேண்டும். இந்தத் தீர்மானத்தை கொண்டு வந்த கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்தவர் அவர்களுடைய அரசியல் தேசத்திலே என்ன நடந்திருக்கிறது என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். பழைய சரித்திரத்தைக் கொஞ்சம் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட வேண்டுமென்று சொல்லுகிறார்கள். ரஷ்யாவில் ஸைபீரியா சேர்ந்திருப்பதால் தலைக்கு 12 ஏகரா இருக்கிறது. ரஷ்யா தேசத்தில் நில உடைமை பிரிக்கப்பட்டது, புரட்சி நடந்தது என்றால், அந்த நாட்டிலே மூத்த மகன்தான் எல்லா சொத்துக்கும் உரியவன். எல்லா சொத்துக்கும் உரியவன் அங்கே மூத்த மகனாயிருந்ததால், ஸார் காலத்தில் எல்லா சொத்துக்களும் ஒருவரிடமே போய் குவிந்து கொண்டிருந்தது. ஆனால் ஹிந்து மத சட்டத்தையோ அல்லது வாரிசுரிமையையோ பார்த்தோ மானால், ஆத்மீக வழியில் பொது உடைமை பிரிக்கப்படும். இந்த தேசத் தைப்போல உலகத்திலேயே வேறு எந்த தேசத்திலும் இம்மாதிரி கிடை யாது. பிறக்கப் போகும் குழந்தைகளுக்குக்கூட பிரித்து வைத்து விடு கிறார்கள் என்று குறிப்பிடப்பட்டது. எந்த சட்டத்தையும் ஏமாற்றுவதற் காக செய்யவில்லை. பரம்பரை பரம்பரையாக பொது உடைமை ஆத்மீக முறையிலே, நியாயமான முறையிலே இருப்பதுதான் இதற்குக் காரணம். ஐந்நூறு ஏகரா உள்ள ரயத்வாரி குடும்பத்தில், 3-வது தலைமுறை, 4-வது தலைமுறைக்கு ஐந்து ஏகரா கூட வராது. ரஷ்யா தேசத்தில் அப்படி யில்லை. மேல் நாட்டில் அப்படி யில்லை. சிலர் கையில் பல லக்ஷக் கணக்கான ஏக்கராக்கள் சொந்தமாக இருந்தன. ஆகவே அந்தப் பகுதியிலுள்ள மக்கள் புரட்சி செய்தனர், கிளர்ச்சி செய்தனர், தலைகள் வெட்டப்பட்டன, கொலைகள் செய்யப்பட்டன. இந்த மாதிரி இருந்த ரஷ்யா விலேயே உடனடியாக எதும் செய்ய முடியவில்லை . . . .

Sri V. K. KOTHANDARAMAN : இவர்கள் ரஷ்யா சென்று பார்த் திருக்கிறார்களா ?

CHAIRMAN (Sri R. SRINIVASA IYER) : Let not the hon. Member interrupt when another hon. Member is speaking.

Sri P. G. KARUTHIRUMAN : இந்த கம்யூனிஸ்ட்காரர்கள் நிலத்தைப் பிரித்துக் கொடுங்கள், பிரித்துக் கொடுங்கள் என்று கூறு கிறார்கள். ஒன்றை நினைவூட்ட விரும்புகிறேன். போன சட்ட சபையிலே நடந்தது என்ன ? காங்கிரஸ் கட்சி மோட்டார் வரி போட வேண்டும் என்று

[Sri P. G. Karuthiruman] 11th September 1958

சட்டம் கொண்டு வந்த நேரத்தில், தோழர்கள் "வெளி நடப்பு" நடத்தினார்களே அது எந்த அடிப்படையில்? போன சட்ட சபையில் அந்த வரியை அவர்கள் ஏன் எதிர்த்தார்கள்? அந்த எதிர்ப்பினால் அவர்கள் யாரை ஆதரித்தார்கள்? ஆகவே பணக்காரர்களை ஆதரித்தவர்கள் யார்? இவை யெல்லாம் போன சட்ட சபை ப்ரொஸீடிங்ஸில் இருக்கிறது. ஆகவே யார் பணக்கார முதலாளிகளை ஆதரித்தார்கள் என்பது விளங்கும். ஆனால் மக்களுக்கு நல்லதாக இருக்கக்கூடிய இந்த விஷயத்திலும் அவர்களே செய்தாலும் அதை நாங்கள் பின்பற்ற, அதன்படி நடக்க தயார். வள்ளுவர் சொன்னது போல,

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

அதாவது, எப்படி ஒரு ஊர் பொது கிணற்று ஜலத்தை எல்லோரும் உபயோகிக்கிறார்களோ அதே போல், செல்வந்தர்கள் செல்வம் எல்லோருக்கும் பயன்பட வேண்டும். இதுவே சோஷலிஸ சமுதாயம்; அது அன்பின் அடிப்படையில் ஏற்பட வேண்டும்.

ஒன்றும் செய்யவில்லை, ஒன்றும் செய்யவில்லை என்று சொல்கிறார்கள். சர்க்கார் இதுவரை செய்த சட்டங்களில் நிலச் சீர்திருத்தமே இல்லாமலா இருக்கிறது?

**Sri N. K. PALANISAMI**: ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார்.

**Sri P. G. KARUTHIRUMAN**: சரி, கேளப்பா.

**Sri N. K. PALANISAMI**: காங்கிரஸ் கட்சி அங்கத்தினராக இருந்து கொண்டு, காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமாக, கட்சிக் கட்டுப் பாட்டுக்கு விரோதமாக பேசலாமா?

**CHAIRMAN (Sri R. SRINIVASA IYER)**: It is not a point of order.

***Sri P. G. KARUTHIRUMAN**: அங்கத்தினர் அவர்கள் தான் செய்வதைப் பிறரும் செய்வதாக நினைக்கிறார்கள் போலும். கனவு காண்பவன் தன்னைப் பற்றியே கனவு காண்பான். அவர்களைப் போன்ற தத்துவம் எங்களுக்கு இல்லை. நான் ஏற்கெனவே இந்த சட்ட சபையில் என் சொத்து நிலை சொல்லி யுள்ளேன். "உங்களிடம் உள்ள சொத்து கூட என்னிடம் இல்லை" என்று சவால் செய்த போது ஒரு பதிலும் இல்லை.

அடுத்தபடியாக, நிலச் சீர்திருத்தத்தைப்பற்றி காந்திஜி சொன்னார்கள், காந்திஜி சொன்னார்கள் என்று சொன்னார்கள். காந்திஜி சொத்து இருப்பதைக் கூடாது என்று சொல்லவில்லை. சொத்து துஷ் பிரயோகம் செய்யப்படக்கூடாது என்றார்கள். மகாத்மா காந்தியவர்கள் சொன்னதைக் கவனிக்க வேண்டும். 'பூமியைத் திருத்தி நீ பாடுபட்டால், அது உன்னை கவனிக்கும். அதை நீ சரியாகக் கவனிக்காவிட்டால், அது உன்னைக் கவனிக்காது என்றார்கள். பூமியை நீ மறந்தால் அது உன்னை மறந்து விடும்' என்றார்கள். அதற்கு ஏற்ப சர்க்கார் உழவருக்கு 100-ல் 60 பங்கு என்ற நிலச் சீர்திருத்தத்தைச் செய்திருக்கிறார்கள். அது நிலச் சீர்திருத்த ஏணியில் ஒரு படியாக அமைந்திருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதிக வரும்படியில், அவர்களுக்கு அதிகம் கிடைக்கவேண்டும் என்று செய்திருப்பது, அந்தச் சட்டம், நிலச் சீர்திருத்த அடிப்படையில் இல்லையா என்று கேட்க விரும்புகிறேன். நிலச் சீர்திருத்தம் என்றால், பூமியைப் பட்டாக்கள் மூலம் பிரித்துக் கொடுப்பதால் மட்டும் ஏற்பட்டு விடாது. பிரித்துக் கொடுப்பதால், உற்பத்தியைப் பெருக்க முடியும் என்ற உத்தரவாதம் இருக்கவேண்டும்.

இன்னொரு நண்பர் சொன்னார்கள் ஜப்பான் முறையைப் பற்றி. அதற்கு இரண்டு ஏக்கர்கள்தான் செய்ய வேண்டும், 10, 15 ஏக்கர்களில் அது செய்ய முடியாது என்று சொன்னார்கள். அது எந்த விவசாய ஆராய்ச்சி

11th September 1958] [Sri P. G. Karuthiruman]

யில் இருந்து வந்தது என்று எனக்குத் தெரியாது. ஆனால், இந்த ஜப்பானிய முறை புதிய முறை என்று சொல்லிக் கொள்வது சரியில்லை. ஜப்பானிய முறை என்பது ஒன்றும் புதிதல்ல. அந்த முறை (**Intensive cultivation**), தீவிரமாக சாகுபடி செய்யும் முறைதான். சென்னை மாகாணத்தில் அந்த முறை 2,000 வருஷங்களாகவே இருந்து வந்திருக்கிறது. அது முக்கியமாக, நாற்றங்காலிலே நாற்றை விட்டு, பிறகு பிடுங்கி, வேறு நிலத்தில் கலக்க நடுவதுதான். வள்ளுவர் சொன்ன பிரகாரம்,

ஏரினும் நன்றாம் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு.

ஆகவே உழுவதைக் காட்டிலும், எருவிடுதல் மிக நல்லது. நீரினும், எரு மிக நல்லது. இவை யெல்லாம் கர்ண பரம்பரையாக வெகு காலமாக நம் மாகாணத்தில் வழக்கத்தில் இருப்பவை.

வட இந்தியாவில்—வடக்கு வாழ்கிறது, வடக்கு வாழ்கிறது என்று சொல்லுகிறார்களே—அந்த வடக்குப் பிராந்தியங்களில் நாற்று தனியாக விட்டு, நாற்று எடுத்துப் பயிர் செய்வதில்லை. ப்ராட்காஸ்ட் அதாவது விதை விதைத்து மழையை நம்பி யிருக்கிறார்கள்.

அகில இந்திய சராசரி நெல் விளைச்சல் 1,000 பவுண்ட் கூடக் கிடையாது. ஆனால் சென்னை மாகாணத்தில் 2,000 முதல் 2,500 பவுண்ட் வரை விளைச்சல் இருக்கிறது. நாற்றங்காலில் நாற்றுவிட்டு பெயர்த்துப் பயிர் செய்யும் வழக்கம் நம்மிடம் பலகாலங்களாக இருக்கிறது. அந்த முறையிலே நல்ல லாபம் கண்டிருக்கிறோம். ஜப்பானிய முறை அதை இன்னும் தீவிரப்படுத்துகிறது.

நண்பர் ஒருவர் சொன்னார்கள், கருத்திருமன் பெரிய நிலச் சொந்தக்காரர், அவரிடம் ஆயிரக் கணக்கான ஏக்கர்கள் இருக்கின்றன என்று. பல சந்தர்ப்பங்களிலே நான் சொல்லி யிருக்கிறேன், நான் ஒரு பெரிய பணக்காரன் அல்ல என்று. எனக்கு பூமி 25 ஏக்கர் நஞ்சைக்கு மேல் கிடையாது. இந்தப் பூமியில் 10, 15 வருஷங்களில் சராசரி ஏக்கருக்கு 35 முதல் 40 மூட்டை வரை விளைந்திருக்கிறது. 1947-ல் ப்ரொக்யூர்மெண்ட் காலத்தில் 3,700 மாண்ட் எங்கள் குடும்பத்தில் கொடுத்து இருக்கிறோம். அதற்கு வேண்டிய ரசீதும் என்னிடம் இருக்கிறது. உற்பத்தி பெருக்கத்திற்காகவோ, ப்ளாக் மார்க்கெட்டு பணம் சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தால் அல்ல, சாதாரணமாக நல்ல முறையால் விளைந்தது. அதற்கு வேண்டிய ஆதாரங்கள் என்னிடம் இருக்கிறது.

அடிக்கடி அங்கத்தினர்கள் சொல்லுகிறார்கள், கருத்திருமன் போன்ற பெருநிலச் சொந்தக்காரர்கள் நிலத்தைக் கொடுக்கவேண்டும் என்று. நியாயமான எந்த திட்டத்தின் கீழும் அல்லது நில வரம்பு சட்டம் வந்தவுடன் அதிக நிலத்தை முதலில் நான் எடுத்துக்கொடுக்கத் தயார். நான் மட்டுமல்ல, காங்கிரஸ் கட்சியில் இருக்கும் அத்தனை மெம்பர்களும் தயார். ஆனால் இந்த சந்தர்ப்பத்தில் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தோழர் கட்சியைச் சேர்ந்த ஒருவர் முன்பு செலக்ட் கமிட்டியில் 60:40 சட்டம் விவாதத்தில் இருக்கும்போது அதை எதிர்த்தது எனக்குத் தெரியும். அவர் நிறைய லாபம் கிடைக்கும் என்று எண்ணி நிறைய குத்தகைக்கு நிலம் எடுத்திருந்தார்கள். ஒரு வேலிக்கு மேல் குத்தகைக்கு வைத்திருப்பவர்களுக்கு இந்த சட்டம் செல்லாது என்றதும் அவர்கள் அதை எதிர்த்தார்கள். அது எனக்குத் தெரியும்.

SRI K. SATTANATHA KARAYALAR: Sir, the hon. Member is referring to a Member who is not in the House. He is also referring to the proceedings of a select committee.

CHAIRMAN (SRI R. SRINIVASA IYER): This is not a point of order. The reference is only to a speech already made in the Assembly. There is nothing wrong in it.

[11th September 1958

Sri P. G. KARUTHIRUMAN : ஆகையால் அவர்களுடைய கொள்கையை எடுத்துப் பார்த்தாலும் கூட சரியான முறையில் இதற்குத் திட்டம் வகுக்கவில்லை யென்று சொல்வேன். காங்கிரஸ்காரர்கள் மோசமானவர்கள், விவசாயிகளுடைய நல்வாழ்வில் அவர்களுக்கு அக்கரை இல்லை என்றெல்லாம் இந்தத் தீர்மானத்தைக் காரணமாகக் காட்டி அவர்கள் பேசலாமே யொழிய உண்மையில் அவர்களுடைய நோக்கம் இந்தச் சர்க்காருக்குச் சங்கடத்தை விளைவிப்பது ஒன்று தான். நாட்டில் எத்தனை பூமி இருக்கிறது ? யாருக்குப் பிரித்துக் கொடுப்பது ? இதைப்பற்றி யெல்லாம் சிந்திக்காமல் இந்தத் தீர்மானத்தை இன்றைய தினம் கொண்டு வந்திருப்பது அரசியல் விளம்பரத்திற்குத்தான் பயன்படும். இந்தச் சர்க்காருக்கு இன்னும் அதிகமான குழப்பத்தை உண்டாக்க வேண்டும், நெருக்கடியை உண்டாக்க வேண்டும் என்பதற்காகத் தான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இவர்கள் சொல்கிறபடியே பார்த்தாலும்கூட இன்றைக்கு பத்து எக்கருக்கு மேல் அதிகமாக உள்ள நிலங்களைப் பிரித்துக் கொடுப்பது என்றால் மிகவும் அதிகமான நிலம் கூடக் கிடைக்காது. ஆகவே இந்தத் தீர்மானம் விவசாயிகளிடத்தில் உள்ள நல்லெண்ணத்தின் பேரில் கொண்டுவரப்பட்டது அல்ல என்று நிச்சயமாகச் சொல்வேன்.

அடுத்தபடியாக திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் மிக அழகாக புலி வருகிறது புலி வருகிறது என்பதாக வெல்லாம் பேசினார்கள். உதய சூரியனைப்பற்றிச் சொன்னார்கள். சூரியன் காலை 6-மணிக்கு உதயமாகிறது. அது 6-மணிக்கு உதயமாகுமே தவிர நான்கு மணிக்கோ, மூன்று மணிக்கோ உதயமாகப் போவதில்லை. ஆனால் ஒரு சிலர் சொன்னார்களாம். " இந்தச் சூரியனை நாங்கள் உதயமாகப் பண்ணுகிறோம் பாருங்கள் " என்று சொல்லிக் கொண்டு இவர்கள் கூட்டமாக விடியற்காலை மூன்று மணிக்கே கடற்கரைக்குச் சென்று " சூரியனே உதயமாகு. சூரியனே உதயமாகு " என்று கத்திக் கொண்டிருந்தார்களாம். விடியற்காலை மூன்று மணியில் இருந்து இவர்கள் சத்தம் போட்டார்கள். சூரியன் காலை ஆறு மணிக்கு உதயமானான். " பாருங்கள். நாங்கள் சத்தம் போட்டு சூரியனை உதயமாகப் பண்ணி விட்டோம். நாங்கள் சத்தம் போடாவிட்டால் சூரியன் உதயமாகி யிருப்பானா ? " என்று சொன்னார்களாம். (சிரிப்பு.)

அப்படி இப்போது நிலவரம்புச் சட்டத்தைக் கொண்டுவர வேண்டுமென்று தீர்மானம் கொண்டு வந்து பேசுகிறார்கள். இந்தக் காங்கிரஸ் சர்க்கார் அதைக் கொண்டுவரத்தான் போகிறது. இவர்கள் நாளைக்குக் கொண்டுவரும்போது " பார்த்தீர்களா, நாங்கள் முயற்சி செய்து அவர்களைக் கொண்டு வரும்படி செய்தோம் " என்பதாக, கடற்கரையில் " சூரியனே வா சூரியனே வா " என்று கத்தி சூரியனை நாங்கள்தான் உதயமாகும் படியாகச் செய்தோம் என்று கூறிக்கொண்டவர்களைப்போல இவர்கள் கூறிக்கொள்ளப் போகிறார்கள் என்பதை கனம் சபாநாயகர் அவர்களே நான் தங்கள் மூலமாக இன்றைக்கே தெரிவிக்கிறேன். உண்மையில் இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில் நல்லதொரு நிலச் சீர்திருத்தச் சட்டத்தை செய்ய எந்த கட்சிக்காவது தகுதி உண்டென்றால் அது காங்கிரஸ் கட்சிக்குத்தான் இருக்கிறது. காங்கிரஸ் கட்சியினரால் தான் அதைச் செய்ய முடியும். ஒப்பற்ற இந்தியப் பிரதமர் நேருஜீயின் தலைமையில் இயங்கிக் கொண்டிருக்கும் காங்கிரஸ் ஆட்சியில் நமது முதல் அமைச்சர்
11-20 a.m. காமராஜர் அவர்களால்தான் செய்ய முடியும். அவ்வாறு செய்யப்படுகிற காலம் வரையிலும் நாம் பொறுத்திருக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இன்றைய தினம் கொண்டுவரப்பட்டிருக்கிற தீர்மானத்திற்கு அவசியமே கிடையாது என்பதை மிக மிக வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

* Sri S. M. ANNAMALAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் அவர்கள் கொண்டு வந்திருக்கக் கூடிய தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த ஒரு சில உறுப்பினர்கள் விவசாயிகளுக்கு தாங்கள் தாம் நன்மை செய்திருக்கிறோம் என்பதாகச் சவால் விட்டுப்

11th September 1958] [Sri S. M. Annamalai]

பேசினார்கள். ஆனால் ஒன்றைச் சொல்ல ஆசைப்படுகிறேன். "முப்பது பணம் கொடுத்து மூன்று குளம் வெட்டினேன் . . . இரண்டு குளம் பாழ்" ஒன்றில் தண்ணீரே இல்லை யென்று சொல்வார்கள். அப்படி காங்கிரஸ்காரர்கள் கொண்டு வந்த சட்டங்கள் எல்லாம் விவசாயிகளுக்கு எந்த விதமான பயனும் தரவில்லை. நியாயவாரச் சட்டம் கொண்டு வந்தார்கள்? விவசாயிகள் பயன் அடைந்தார்களா? இவர்கள் கொண்டு வந்துள்ள சட்டங்கள் எதனால் விவசாயிகள் பயன் அடைந்திருக்கிறார்கள்?

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, Sir. There are ever so many legislations brought forward for the benefit of the tenants by this very Hon. Government and their predecessors also. It is really affecting the dignity of the House to say that the hon. Member does not know of any legislation passed to help the tenants. I want the hon. Member to first educate himself on the legislations passed by this House and then speak.

CHAIRMAN (SRI R. SRINIVASA IYER) : This is not a point of order. The hon. Member is not transgressing the rules of speech in the Assembly.

* SRI S. M. ANNAMALAI : அவர்கள் கொண்டுவந்துள்ள சட்டங்கள் அத்தனையும் விவசாய சமூகத்திற்குப் பயன் அளிக்க வில்லை. இதை என் குறிப்பிடுகிறேன் என்றால் இந்த நாட்டில் விவசாயிகள் கரு வேப்பிலையைப் போலத்தான் பயன்படுத்துகிறார்கள் கறி, குழம்பு முதலிய வைகளைத் தயார் செய்யும்போது கருவேப்பிலையைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து பதார்த்தங்களோடு சேர்த்து ஆக்கிவிட்டு, உண்ணும்போது அவற்றை பொறுக்கி எடுத்து எறிந்துவிடுவதைப் போலத்தான் தேர்தல் நெருங்குகிறபோது "நாங்கள் உங்களுக்கு அதைச் செய்கிறோம், இதைச் செய்கிறோம்" என்று விவசாய சமூகத்திற்கு வாக்குறிதி அளிப்பதும், தேர்தல் முடிந்த பிற்பாடு—சட்டமன்றத்திற்குள்ளே நுழைந்த பிற்பாடு அவர்களை அடியோடு மறந்துவிடுவதுமாக இருக்கிறார்கள். விவசாய சமூ கத்தின் நன்மைக்காக எல்லாக் காரியங்களையும் செய்துவிட்டோம் என்பதாக, ஆளுங் கட்சியைச் சேர்ந்த கொரடா சொன்னார்கள். எல்லாவற்றையும் செய்துவிட்டோம் என்றாலும் என்ன பயன்?

SRI P. G. KARUTHIRUMAN : On a point of personal explanation, Sir. எல்லாவற்றையும் செய்துவிட்டோம் என்று நான் சொல்ல வில்லை. செய்து கொண்டு வருகிற கட்டத்தில் இருக்கிறோம். ஏணியில் இருக்கிறோம் என்றுதான் சொன்னேன்.

* SRI S. M. ANNAMALAI : இவர்கள் ஒன்றுமே செய்யவில்லை என்று என்னால் சொல்ல முடியும். குறிப்பாக இன்றைய தினம் உச்ச வரம்பு கட்டவேண்டும் என்பதற்கு அவர்கள் எதிராக இருக்கக் காரணங் கள் மூன்று சொல்கிறார்கள். ஒன்று, நிலத்தைப் பிரித்துக் கொடுத்து விட்டால் உணவு உற்பத்தி குறையும். இரண்டாவது நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால் விவசாயி சாகுபடி செலவிற்கு என்ன செய்வான்? மூன்றாவது நிலங்கள் குறைவு. சர்க்கார் கட்சி கொரடாவும் நிலம் குறைவு என்பதைச் சொன்னார்கள். ஒரு நகரில் ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக் கிறோம். அங்கேயுள்ள இரண்டு லட்சம் ஜனங்களுக்கும் வேலை கொடுக்க முடியும் என்கிற எண்ணத்திலா ஆரம்பிக்க முடியும். இருநூறு அல்லது ஆயிரம் அல்லது இரண்டாயிரம் பேர்களுக்கு வேலை கொடுக்கமுடியும் என்கிற நோக்கத்துடன் ஆரம்பிக்கலாமேயொழிய அத்தனை மக்களுக்கும் அந்தத் தொழிற்சாலையில் வேலை கொடுக்கமுடியும் என்கிற நோக்கத்தில் ஆரம்பிப்பது இல்லை. ஆகவே ஒருசில லட்சம் மக்களாவது பயன்படவேண்டும் என்கிற நோக்கத்தில்தான் நில உச்ச வரம்பு கட்டவேண்டும் என்று சொல்கிறோம். இதை நாங்கள் சொல்வது மட்டும் அல்ல. திட்ட கமிஷனே இதைத்தான் சொல்கிறது.

[Sri S. M. Annamalai] [11th September 1958

எந்த நாடும் சுதந்திரம் அடைந்தால் உடனே நிலச்சீர்திருத்தச் சட்டத்தைத்தான் கொண்டு வருவார்கள். ஆனால் இந்த நாட்டில் விளைவு என்னவென்றால் சுதந்திரம் அடைந்து 11 வருஷங்கள் ஆகியும் கூட நிலச்சீர் திருத்த விஷயத்தில் திட்டவட்டமான கொள்கை இந்தச் சர்க்காரிடத்தில் கிடையாது. உண்மையான கொள்கை அவர்களிடத்தில் இருந்தால் விவசாயி யார் என்பதை இன்னும் வரையரை செய்யாமல் இருப்பார்களா ? ஆயிரம், இரண்டாயிரம் எக்கர்கள் என்று வைத்துக் கொண்டு நிலவரப்பின் மேல் நடந்து செல்கிறவர்களேயும் விவசாயி என்கிறார்கள். நிலத்தில் நேரிடையாக உழுது பயிரிடுகிறவர்களேயும் விவசாயி என்கிறார்கள். இதனால் விளைவு என்ன ? உண்மையான எந்த விவசாயிகளுக்கு இந்த நாட்டில் பயன் உண்டாகிறது என்று கேட்கிறேன். விவசாய சமூகத்தினுடைய வோட்டுக்களைப் பெறவேண்டுமென்று நோக்கத்துடன் தேர்தல் காலங்களில் வேலை செய்கிறார்களே யொழிய உண்மையில் அவர்களுடைய நன்மைக்காக எந்தக் காரியத்தையும் செய்வதில்லை . இவ்வாறு நிலத்தைப் பிரித்துக் கொடுத்தால் உணவு உற்பத்தி குறையும் என்று சொல்கிறார்கள். நிலத்தின் உச்சவரம்பு நிர்ணயிப்பதால் எப்படி உற்பத்தி குறையும் என்று கேட்கிறேன். உதாரணத்திற்கு ஒன்று சொல்வேன். வாரத்திற்கு ஒருவனிடம் இரண்டு எக்கர் பூமி இருக்கிறது. சொந்த சாகுபடியில் இரண்டு எக்கர் பூமி இருக்கிறது. முன்னதன் விளைச்சலைப் பாருங்கள். பின்னதன் விளைச்சலைப் பாருங்கள். வாரத்திற்கு வைத்துக் கொண்டுள்ள நிலத்தில் எக்கருக்கு பத்து பதினொரு கலம் தான் விளையும். சொந்த சாகுபடியில் முப்பது, நாற்பது கலம் காட்டுவார்கள். காரணம் தமக்குச் சொந்தமில்லாத நிலம் என்னும் போது உற்பத்தியில் ஊக்கம் குன்றித்தான் இருக்கிறார்கள். ஆகவே இப்போது நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால் எல்லோரும் தங்களுடைய நிலம் என்கிற எண்ணத்தில் அதிக உற்சாகத்தோடு, ஊக்கத்தோடு தான் பயிரிடுவார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆகவே உற்பத்தி எந்தவகையிலும் பாதிக்காது. நிலத்தைச் பிரித்துக் கொடுத்தால் சாகுபடியாளர்கள் பணத்திற்கு என்ன செய்வார்கள் ? முதலாளிகளிடத்தில், மிராசுதார்களிடத்தில் தானே சாகுபடிச்
11-30 a.m. செலவுக்காக வருவார்கள் என்று கேட்கலாம். ஏழை எப்போதும் ஏழையாகவே இருக்க வேண்டுமா, முதலாளிகள் எப்போதும் முதலாளிகளாகவே இருக்க வேண்டுமா என்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்க விரும்புகிறேன். சர்க்கார் எதற்காக இருக்கிறது ? விவசாயிகளிடம் விவசாயம் செலவிற்குப் பணம் இல்லை என்றால், இந்த நாட்டை ஆளும் சர்க்கார் அவர்களுக்கு விவசாயச் செலவிற்காக ஏன் பணம் கொடுக்கக்கூடாது ? இந்த நாட்டை ஆளும் சர்க்காரிடம் உண்மையில் திட்டவட்டமான கொள்கை கிடையாது என்பதை எடுத்துக்காட்டுவதற்காகத் தான் நான் இவ்வாறு பேசுகிறேன். இந்த மந்திரி சபையினர் திட்டவட்டமான கொள்கையை நிர்ணயித்து விடுவார்களானால் இங்கேயிருக்கும் மந்திரிகள் அத்தனை பேரும் மந்திரிகளாகவே இருக்கமாட்டார்கள் ; உடனே மந்திரி சபை கவிழ்ந்துவிடும். திட்டவட்டமான கொள்கையை நிர்ணயிக்க அவர்களுக்கு தைரியம் இல்லை. திட்டவட்டமான கொள்கையும் அவர்களிடம் இல்லை. இந்த சர்க்கார் விவசாயிகள் சம்பந்தமாக திட்டவட்டமான கொள்கையை நிர்ணயித்தால், அதை எதிர்ப்பதற்கு, சிலர் இவர்கள் பின்னாலேயே இருக்கிறார்கள். ஆகையால் கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் கொடுத்திருக்கும் தீர்மானத்தை ஆதரிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI T. KARIA GOUNDER : கனம் தலைவர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோதண்டராமன் கொடுத்திருக்கும் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுவதா, அல்லது எதிர்த்துப் பேசுவதா, அல்லது நடுநிலைமை வகிப்பதா அல்லது அவரது தீர்மானத்தைக் கண்டு ஆச்சரியப்படுவதா என்று எனக்குத் தெரியவில்லை. ஏனென்றால், எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் இந்த சர்க்கார் கொள்கையற்றவர்கள் என்று சொல்லிவிட்டார். விவசாயிகள் சம்பந்தமாகப் பேசும் இன்றையதினம் தான் எதிர் கட்சியினர் சர்க்காரை எதிர்த்துப் இவ்வாறெல்லாம் பேசுகிறார்கள் என்று சொல்ல முடியாது. நேற்று ஜில்லா அபிவிருத்திக் கவுன்

11th September 1958] [Sri T. Karia Gounder]

சில்களைப் பற்றிப்பேசும்போது அவைகளில் கலெக்டர்களைத் தலைவர்களாக நியமிப்பதை அவர்கள் பலமாக எதிர்த்தார்கள். ஆகவே எதிர்க் கட்சிக் காரர்கள் எப்போதும் நிர்வாகத்தையும் சர்க்காரையும் எதிர்க்கிறார்கள். அவர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. இந்த சர்க்கார் கவிழ்ந்து போய் விடும் என்று ஒரு எதிர்க் கட்சி அங்கத்தினர் குறிப்பிட்டார். ஆனால் கட்சியில் நாங்கள் 151 பேர் இருக்கும்போது இந்த சர்க்கார் எப்படிக் கவிழும் என்று எனக்குத் தெரியவில்லை. இந்த சர்க்காருக்குக் கொள்கை இல்லாததால் இது கவிழ்ந்து போய்விடுமா அல்லது கொள்கை இருப்பதால் இது கவிழ்ந்து போய்விடுமா என்று எனக்குத் தெரியவில்லை. இந்த சந்தேகம் எனக்கு இருக்கிறது. நாங்கள் தேர்தல் காலத்தில் ஜனங்களிடம் சென்று "உங்களில் நிலமில்லாதவர்கள் எல்லோருக்கும், நாங்கள் பதவிக்கு வந்ததும், 1—1½ எக்கர் நிலம் கொடுக்கிறோம். எங்கள் சொத்தில் சரிபாதியை உங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கிறோம்," என்றெல்லாம் சொல்லவில்லை. பின்னர் நாங்கள் எப்படி ஜெயித்தோம்? நாங்கள் நல்ல காரியங்களைச் செய்திருக்கிறோம். இந்நாட்டில் ராஜாக்களை யெல்லாம் ரொம்ப சீக்கிரம் வீட்டுக்கு அனுப்பிவிட்டோம். இது உலகத்தில் எந்த நாட்டின் சரித்திரத்திலும் இதுவரை இல்லாத விஷயம். இந்தக் காரியத்தை நாங்கள் சாதித்திருக்கிறோம் என்பதை மறந்துவிட்டு எதிர்க் கட்சிக் காரர்கள் பேசுகிறார்கள். ராஜாக்களை யெல்லாம் சாதாரண மனிதர்களாக ஆக்கிவிட்டோம் என்பதை எதிர்க் கட்சியினர் மறக்கக்கூடாது. அடுத்தாற்போல், ஜமீன்தார்களையும் சாதாரண மனிதர்களாக ஆக்கிவிட்டோம். இப்போது ஜமீன்தார் என்ற பட்டமே யாருக்கும் இந்த நாட்டில் இல்லை. ஜமீந்தார் என்ற பட்டம் முகம்மதிய அரசாட்சியின்போது இந்த நாட்டில், அதிக நிலம் உடையவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஜமீந்தார் என்பது மொகலாய வார்த்தை. மொகலாயரின் ஆட்சி காலத்தில், வரி வசூல் செய்யப்படுவதற்காக சிலருக்கு நிலங்கள் கிராமம் கிராமமாகக் கொடுக்கப்பட்டன. அப்படி நிலம் கொடுக்கப்பட்டவர்கள் ஜமீந்தார்கள் என்று வழங்கப்பட்டார்கள். அந்தக் காலத்தில் நாட்டில் ஜனத்தொகை குறைவாக இருந்தது. இப்போது ஜனத் தொகை பெருகிவிட்டது. இந்த சபையில், விவசாயத்தைப் பற்றியும் மற்ற விஷயங்களைப் பற்றியும் எவ்வளவோ காரசாரமாகப் பேசப்படுகிறது. ஆனால் இப்போது நாட்டில் ஜனங்கள் வருஷத்திற்கு ஒரு பிள்ளை பெருவதைப்பற்றி ஒருவரும் பேசுவதில்லை. (சிரிப்பு). என் வீட்டிலேயே இப்போது 10 பிள்ளைகள் இருக்கிறார்கள். (சிரிப்பு). அவர்கள் என் பிள்ளைகள் இல்லை. அவர்கள் என் பேரப்பிள்ளைகள். என் பிள்ளைகளுக்குப் பிறந்தவர்கள். அவர்களுக்கு நில உடைமை உரிமை இல்லை.

"என்னடா இது, நம் பிள்ளைகள் காலத்தில் கௌண்டர் பட்டம் போய் விடுமோ!" என்று நான் நினைப்பதுண்டு. நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்டும் சட்டமும் கொண்டுவரப் படவிருக்கிறது.

• தஞ்சாவூர் ஜில்லாவை எடுத்துக்கொள்வோம். "60—40 வாரச் சட்டம்" வந்தபிறகு எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் தஞ்சாவூரிலிருந்து சட்ட சபைக்கு அங்கத்தினர்களாக வந்திருக்கிறார்கள். உழுபவர்களுக்கு 60 வாரமும் நில முதலாளிகளுக்கு 40 வாரமும் கிடைக்க வேண்டுமென்று சட்டமியற்றினோம். அதை, எதிர்க் கட்சியிலிருந்து பேசிய கனம் அங்கத்தினர்கள் மறந்துவிட்டார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டப்படாததால் தான் உணவு தானிய உற்பத்தி அதிகரிக்கவில்லை என்று கூறப்படுகிறது. அது தவறு. இயற்கை சில சமயங்களில் ஏமாற்றுவதால் விளைச்சல் பாதிக்கப்படுகிறது. எங்கள் ஜில்லாவில் மழை இல்லாததால் இந்த வருஷம் கடலைக்காய்ப் பயிர் காய்ந்துப் போய்விட்டது. ஆண்டவன் நம்மைச் சோதனை செய்கிறார். நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டி, நிலச்சுவாந்தார்களிடம் அதிகமாக இருக்கும் நிலங்களை நிலமில்லாத விவசாயிகளுக்குப் பகிர்ந்து கொடுத்தால் ½ எக்கர் நிலம் கூடக் கொடுக்க முடியாது. இதையெல்லாம் எதிர்க்

[Sri T. Karia Gounder] [11th September 1958

கட்சிக்காரர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சேலம் ஜில்லாவில் ஆத்தூர் தாலூகாவில் 30,000 எக்கர் நிலங்கள் இருக்கிறன. அவைகளை உழுது அங்கே பயிரிடுவதற்கு ஆள் இல்லை. எல்லோரும் நகரத்திற்கு வந்துவிடு கிறார்கள். கிராமத்தில் எவ்வாறு விவசாயம் நடக்கும்? சென்னை நகரில் ஜனத்தொகை 3—5 லட்சம் என்று நான் படித்திருக்கிறேன். இப்போது சென்னை நகரின் ஜனத்தொகை 17 லட்சமாக இருக்கிற தென்றால் அதற்கு விவசாயிகளாகிய நாங்கள் காரணஸ்தர்களில்லை. ஆண்டவன் சோதனை செய்கிறார். மழை பெய்தால் அதிகமாகப் பெய்கிறது. அப்படியில்லா விட்டால், மழை பெய்வதே இல்லை. நாட்டில் குடும்பக் கட்டுப்பாடு இல் லாததால், ஒரு கோடி ஜனத்தொகை கொண்டதாக இருந்த பிரதேசத்தில் ஜனத்தொகை இப்போது 3 கோடியாக உயர்ந்திருக்கிறது. விவசாய வரு மான வரி மசோதாக் கமிட்டிக்கு இந்த ராஜ்யத்தில் 57-லட்சம் சொச்சம் பட்டாதார்கள் இருக்கிறார்கள் என்ற விவரம் கிடைத்தது. அவர் களுடைய நில உடமைக்கு எவ்வளவு உச்ச வரம்பு நிர்ணயிக்க வேண்டும் என்பதையெல்லாம் கவனித்து, அரசாங்கத்தார் சட்டமியற்றப் போகிறார்கள். சமீபத்தில் தேர்தலும் நடக்கப் போவதில்லை. ஆகவே ஆளும் கட்சியின ருக்கு விரோதமாக யாரும் பிரசாரம் செய்ய வேண்டிய அவசியமும் இல்லை. நிதானமாக நல்ல முறையில் சட்டமியற்றலாம். வினோபாஜி எவ்வளவோ சாதித்திருக்கிறார். அவர் கால்நடையாக நாடு முழுவதும் பிரயாணம் செய்து லட்சக்கணக்கான எக்கர் நிலங்களை பூமிதானமாகப் பெற்றிருக்கிறார். அந்த நிலங்கள் நிலமில்லாத ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடுக்கப் படுகின்றன. இதெல்லாம் நடக்கும்போது, எதிர்க் கட்சியினர் நாக்கில் நரம்பில் லாமல் சர்க்காரைக் குறை கூறுகிறார்கள். சபையின் சென்ற கூட்டத்தில் கூட "நாக்கில் நரம்பில்லாமல் பேசுகிறார்கள்" என்று நான் சொன்னேன். அப்போது கனம் சபாநாயகர் "அது 'அவுட் ஆப் ஆர்டர்'" என்று சொன்னார்.

**Sri A. GOVINDASAMY** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் உங்களைப்பற்றிக் குறிப்பிடுகிறார்.

**Mr. SPEAKER** : அவர் என்னைப்பற்றிப் பேசவில்லையே! அவர் வேறு யாரைப்பற்றியோ குறிப்பிடுகிறார். (ஸ்ரீ கரிய கௌண்டரிடம்) என் னைப் பற்றியா குறிப்பிட்டீர்கள்?

11-40 a.m. **Sri T. KARIA GOUNDER** : உங்களைப் பற்றிச் சொல்லவில்லை.

அதேபோல் தஞ்சாவூர் மிராசுதார்களைப் பற்றி சொல்கிறார்கள். அங் குள்ள மிராசுதார்கள் இப்பொழுது குறைந்து போய்விட்டார்கள். ராம லிங்கம் அவர்கள் என் பக்கத்தில் தான் உட்கார்ந்து இருக்கிறார்கள். அவர் களுக்கு இதுபற்றி நன்கு தெரியும். இப்பொழுது நிலமுள்ளவர்களின் நிலங்கள் அவர்களின் பேரன், பேத்திகளுக்கு மாறி விட்டது. உச்ச வரம்பு எவ்வளவு இருக்கவேண்டுமென்று சொல்லாமல் சும்மா சர்க்கா ரைப்பற்றி குறை சொல்லிக்கொண்டே இருப்பதில் யாதொரு பிரயோஜனமு மில்லை. மக்கள் நாணயமாக இருக்க பாடுபடவேண்டும். மக்கள் நாணய மாக நடந்து கொள்வதாக இருந்தால் பட்டப் பகலில் நகரிலேயே ரெயிலில் கொள்ளை அடிப்பார்களா? மக்களுக்கு நாணயம் கெட்டுப் போய்விட்டது. மக்களிடம் அன்பு குறைந்து விட்டது. நீங்கள் எங்களோடு சேர்ந்து கொண்டு மக்களுக்காக, மக்களின் நலனுக்காக வேலை செய்ய முன் வந் தால், இந்த அரசாங்கமும் வேண்டியதில்லை, ஏன் இந்த சட்டசபை கூட வேண்டியதில்லை. எல்லாவற்றையும் மிகவும் சுமுகமாக சமாளிக்கலாம். ரஷ்யாவைப்பற்றியும், அமெரிக்காவைப்பற்றியும் நாம் ஏன் குறிப்பிட வேண்டும். ரஷ்யாவில் அதிகம் குழந்தைகள் பெற்றவர்களுக்கு அரசாங் கம் சன்மானம் அளிக்கிறது. அதேபோன்று இங்கு அதற்காகச் சன்மானம் அளிக்க முடியுமா? குழந்தைகள் குறைவாகப் பெறுகிறவர்களுக்கு சன்மானம் இங்கு அளிக்கப்படவேண்டும். என்னிடம் இப்பொழுதுள்ள நிலம், என் அப்பன் சம்பாதித்த நிலமாகும். நான் சம்பாதித்ததல்ல. எல்லோருக்குமே கொஞ்சம் கொஞ்சம் நிலம் இருக்கிறது. கழிந்த 11

ஆண்டுகளில் நாம் அடைந்திருக்கக்கூடிய முன்னேற்றத்தை நாம் சற்று சிந்தித்து பார்க்கவேண்டும். உலக சரித்திர ஆராய்ச்சியாளரும், உலக அறிவாளிகளுமே சொல்கிறார்கள், நம் நாடு உயர்ந்த ஒரு நிலையை அடைந்து விட்டது என்று. அதை மறந்து விட்டு எதிர்கட்சியினர் வேண்டுமானால் சொல்லலாம், இந்த சர்க்கார் நாணயமற்ற சர்க்கார் என்றும், நாம் ஒன்றுமே இதுவரையில் செய்ததில்லை என்றும். நிதியமைச்சர் அவர்கள் சென்ற வரவு செலவு திட்டத்தின் போது அவர்களது உரையில் குறிப்பிட்டிருப்பதை எல்லோரும் ஞாபகப்படுத்திப் பார்க்கவேண்டும். சமீபத்தில் நில வரம்புச் சட்டம் கொண்டு வரப்போகிறோம். விவசாய வருமான வரிச் சட்டம் கொண்டு வரப்போகிறோம் என்றும். அதனால் நிலப் பிரச்னையில் நாம் ஒரு முடிவு காணமுடியும் என்று சொன்னதை நான் இங்கு எடுத்துக் கூறிக்கொண்டு, கோதண்டராமன் அவர்கள் இத் தீர்மானத்தை வற்புறுத்தாமல், அதை வாபஸ் வாங்கிக்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டு எனது சிறிய உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : இன்னும் 20 பேர்கள் பேச வேண்டுமென்று சொல்கிறார்கள். இந்தத் தீர்மானம் இன்றைக்கே முடிக்கப்படவேண்டும். ஆகவே நான் சொல்வது, சாதாரண மசோதா என்றால் 10 நிமிடங்கள்தான் பேசலாம் என்று சொல்லலாம். அதுபோல் இதற்கு ஒரு நிபந்தனை போட முடியாது. இன்றைக்கே இத்தீர்மானத்தை வோட்டுக்குப் போடவேண்டுமென்ற அபிப்பிராயம் இருந்தால் மெம்பர்கள் பேசும் நேரத்தை குறைத்துக் கொள்ளவேண்டும். இவ்வளவு நேரம்தான் பேசலாம், அதற்கு மேல் கூடாது என்று என்னால் சொல்ல முடியாது. இல்லையென்றால், யாராவது எழுந்து நின்று பிரசினையை இப்போது வோட்டுக்கு விடவேண்டும் என்று சொன்னால் சபாநாயகர் தனது அபிப்பிராயத்தைச் சொல்லி இதை வோட்டுக்கு விடலாம் என்று சொல்லலாம்.

**Sri N. K. PALANISAMI** : இதுபற்றி பேச இன்னும் இரண்டு சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. ஆகவே இதை சீக்கிரம் முடிக்கலாம்.

**Mr. SPEAKER** : நீங்கள் பேசியாகி விட்டதா ?

(ஸ்ரீ சுப்பையா முதலியார் பேசுமாறு அழைக்கப்பட்டார்.)

* **Sri R. CHIDAMBARA BHARATHI** : இதைப் பற்றிமுன் பேசியவர்கள் சாவகாசமாக பேசியிருக்கிறார்கள். நேரத்தை நிர்ணயம் செய்வது, இதுபற்றி எல்லோரும் பேசுவதற்கு சம சந்தர்ப்பம் கொடுப்பதற்கு விரோதமாயிருக்கும். மற்றும் சந்தர்ப்பங்கள் இருக்கின்றன இது பற்றி பேச என்று சொன்னார்கள். இதற்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை. இங்கு பேசிய சில விஷயங்கள் நாட்டிற்கு விரோதமாக இருக்கின்றபடியால் எல்லோருக்கும் பேசுவதற்கு சம சந்தர்ப்பம் அளிக்க வேண்டும்.

* **Sri A. R. SUBBIAH MUDALIAR** : கனம் சபாநாயகர் அவர்களே, கோதண்டராமன் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்தத் தீர்மானத்தை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். நானும் ஓரளவு நிலம் வைத்திருக்கிறவன்தான். நிலத்தின் அருமை தெரிந்தவன்தான். தமிழ் நாட்டில் ஒரு பழமொழி உண்டு, "மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை" என்று. மண்ணாசை என்பது சகலருக்கும் உள்ள ஆசைதான். ஆனால் நிலம் உள்ள என் போன்றவர்கள் மனப்பூர்வமாக நில வரம்பை ஆதரிக்கத் தயாராயிருக்கிறோம். ஆனால் கட்சி மனப்பான்மை வைத்து இந்த தீர்மானத்தைக் கொண்டு வருவது வருந்தத் தக்கதாகும். எங்கள் கட்சியானது மக்களின் நன்மையைக் கருதி, நல்ல முறையில் நாடு முன்னேறுவதற்கு பல திட்டங்களை வகுத்துக் கொண்டுதான் இருக்கின்றன. நிலத்தின் அருமை தெரியாதவர்கள், நிலத்தில் பாடுபடக்கூடிய ஆற்றல் இல்லாதவர்கள், நிலத்தில் பழக்கம் இல்லாதவர்கள், கிராம வாழ்க்கையே என்னவென்று தெரியாமல் நகரங்களில் இருந்து தலைவர்களாக

[Sri A. R. Subbiah Mudaliar] [11th September 1958

இருப்பவர்கள், எப்படி விவசாயம் செய்வது என்பதே தெரியாதவர்கள் நில வரம்பை உடனடியாக நிர்ணயிக்கவேண்டுமென்று சொல்வது என் போன்றவர்களுக்கு புரியாத ஒன்ருக இருக்கிறது. நிலவரம்பு வேண்டியதுதான். ஆனல் அதைப் படிப்படியாக கொண்டு வர வேண்டும் என்பதுதான் எங்கள் கட்சியின் கோட்பாடும், லட்சியமுமாகும். அனுபவப்பட்டவர்களுக்குத்தான் நிலத்தின் அருமை தெரியும் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். உதாரணமாக, கரும்பை எடுத்துக் கொள்வோம். கரும்பை வெட்டியவுடன் அது சர்க்கரையாகாது. கரும்பை வெட்டி ஆலையில் வைத்து பிழிந்து அதைக் கொண்டு வந்து கொப்பரையில் ஊத்துவார்கள். அதன் பக்குவம் தெரிந்தவன்தான் இப்பொழுது அது சர்க்கரைக்குப் பொருத்தமானது என்று தெரிந்து உடனடியாக அதற்கு ஒரு மருந்து நிறம் கொடுக்க தூவி, அதை எடுத்து அச்சுக்குப் போடுவான். நம்மைப் போன்று பக்குவம் தெரியாதவர்கள் கரும்புச் சாறை கொப்பறையில் ஊற்றினவுடன் சர்க்கரையாகிவிடும் என்று நினைப்போம். அது தவறு. அது போல்தான் இருக்கிறது எதிர்க்கட்சிக்காரர்கள் பேசுவதெல்லாம். அரிசியை கடையிலிருந்து வாங்கிக் கொடுத்துவிட்டால் உடனே அது சோருகாது. பெண்களுக்குத் தெரியும், அரிசி வெந்து எப்பொழுது பக்குவமாகிறது என்று. அதேபோல் ஆளக்கூடியவர்களுக்குத்தான் இந்தச் சீர்திருத்தம் எப்பொழுது கொண்டுவரலாம் என்று தெரியும். இந்த சர்க்கார் ஒன்றுமே செய்யவில்லை, எதையாவது பேசிக்கொண்டே போகிருர்கள் என்றெல்லாம் சொல்வது மனதிற்கு வருத்தத்தைத்தான் கொடுக்கிறது. நிலச் சீர்திருத்தம் பற்றி, "ஸ்ரீ மான் கமிட்டி" ஒன்று, பண்டித நேரு, பந்த், மொரார்ஜி தேசாய் இவர்கள் கொண்ட கமிட்டி ஒரு தீர்மானம் செய்திருக்கிறது. அவை ஒவ்வொன்ருக நடத்திக் கொண்டு வருகிருர்கள். **Abolition of Intermediaries**", நடத்தப்பட்டு விட்டது. அதாவது, ஜமீந்தார்கள், மஹாராஜாக்கள் போன்றவர்கள் ஒழிக்கப்பட்டு விட்டார்கள். பின்னர்,

'Regulating the landlord-tenant relationship by fixing Fair Rent and conferring security of tenure.'

அதையும் நடத்தி விட்டோம். நிர்வாகத்தில் சில ஊழல்கள் இருக்கலாம். அவைகளை நிவர்த்தி செய்ய அடிக்கடி சட்டங்கள் வந்து கொண்டிருக்கின்றன. பிற்பாடு, "டெவெலெப்மெண்டு ஆப் கோவாப்பரேட்டிவ் பார்மிங்." அதற்குக் கூட வழி செய்யப்பட்டிருக்கிறது.

'Distribution and fixing ceiling upon fixture acquisition.'

இதுபற்றிஇப்பொழுது சில சட்டங்கள் செய்ய இருக்கிருேம். அதன் நடைமுறை கஷ்டங்கள், அதன் அனுபவங்கள் தெரிந்த பிறகு எந்த விதம் செய்ய வேண்டுமென்பது பற்றி ஒரு முடிவு எடுத்து அதைச் செய்ய காங்கிரஸ் கட்சி தயாராகயிருக்கிறது. அதை விட்டு விட்டு உடனடியாக கொண்டு வர வேண்டும் என்று சொல்வது சரியல்ல. எதிர் கட்சி நண்பர்கள் மேடைகளில் பேசுவதைக் கேட்டிருக்கிறேன். அவர்கள் நிலத்தை உழுது பார்த்திருப்பார்களா என்பதே சந்தேகம். சூரியன் உதித்து விட்டது, சூரியன் உதித்து விட்டது என்று சொல்லுகிற கதை ஞாபகத்தில் வருகிறது. உடனடியாக அச்சட்டங்கள் வந்தால் வரக்கூடிய கஷ்டங்களைத் தெரியாமல் பேசுகிருர்கள். அச்சட்டங்களை நாங்கள் உடனடியாகக் கொண்டு வரத்
11-50 a.m. தயார். ஆனல் சட்டரீதியாக அதற்கு காம்பன்சேஷன் கொடுக்க வேண்டும். அப்படி காம்பன்சேஷன் கொடுக்கக்கூடிய அளவில் நமது நிதி வசதி சரியாகயில்லை. பல வருஷங்களுக்கு முன் ஒரு வகுப்பார்க்கு உத்யோகம் கொடுக்கக்கூடாது என்று அவர்கள் ஒதுக்கப்பட்டார்கள். அதனல் நன்மை அடைந்தார்கள். அம்மாதிரி இப்பொழுது சில கட்சிகள் நிலத்தை விட்டு போக வேண்டும் என்று சொல்லுகிருர்கள். அதிக நிலம் உள்ளவர்கள் வெளியே போவதில் ஆட்சேபனை ஒன்றும் இல்லை. அவ்விதம் வெளியே போகும் போது காம்பன்சேஷன் கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அந்த அடிப்படையில் பார்க்கும்போது சர்க்காருக்கு மேலும் அதிகப்படியான சிக்கல் வந்துவிடுமோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. ஆகவே ஒரேயடியாக கொண்டுவந்தால், அதனல் பல வித தீமைகள் தான் ஏற்படும். ஆகவே சர்க்கார் இதை படிப்படியாக செய்து கொண்டே போகிறது. இன்னும் சில தினங்களில் "அக்ரிகல்சரல் இன்கம் டாக்ஸ் பில்"

11th September 1958] [Sri A. R. Subbiah Mudaliar]

வரப்போகிறது. இது ஒரு நல்ல திட்டம். இதைக் காங்கிரஸ் கட்சி தான் கொண்டு வருகிறது. நல்ல வேலை செய்யக்கூடியவர்கள், நல்ல பாடுபட கூடியவர்கள் நம் நாட்டில் அதிகம் பேர்கள் இருக்கிறார்கள். இவர்கள் மூல மாக அரசாங்கத்திற்கு நல்ல வருவாய் கிடைக்கும். இதை நான் பூரண மாக ஆதரிக்கின்றேன். ஆனால் சில திட்டங்கள் கொண்டுவருவதற்கு பக்கு வமாய் நமது நிலைமை இருக்கவேண்டும். அதல்லாமல் திடீரென்று கொண்டு வந்தால் உணவு உற்பத்திக்கு தடை தான் ஏற்படும் என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். உணவு விஷயத்தில் நாம் அடிக்கடி கஷ்டப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறோம் என்று பண்டித நேரு சொல்லியிருக்கிறார்கள். இதை நாம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். திடீரென்று எல்லாம் வந்துவிடாது. எதிர்க்கட்சிக்காரர்கள் ஒன்றையும் எதிர் பார்க்காமல் பல திட்டங்களை சொல்லுகிறார்கள். இவை களை எல்லாம் கொண்டு வருவதற்கு, அதற்கென்று ஒரு நேரம் வரும், அந்த சமயத்தில் தான் இதை கொண்டு வரவேண்டும். இல்லாவிட்டால் நாம் மேலும் முன்னேறுவதற்கு தடை ஏற்படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இதைப்பற்றியெல்லாம் ஸ்ரீ திரு பி. பி. ஐ. வைத்திய நாதன் அவர்கள் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார்கள். இந்த புஸ்த கத்தை படித்து இருந்தால் எதிர்கட்சி அங்கத்தினர்கள் இவ்விதம் பேச மாட்டார்கள். இதையெல்லாம் பார்க்காமல் ஏதோ உச்சவரம்பு நிர்ண யித்துவிட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். இதனால் என்னவெல் லாம் பலன் உண்டாகும் என்பதை நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். திரு. வைத்தியநாதன் எழுதியிருக்கிற புஸ்தகம் சர்க்காருக்கு ஒரு வழி காட்டியாக இருக்கிறது. இன்னும் உணவு நிலையைப்பற்றி திரு. சந்தா னம் போன்றவர்கள் "கல்கி" பத்திரிகையில் எழுதி வருகிறார்கள். சுப்ரீம் கோர்ட் சீப்-ஜஸ்டீஸ் இதைப்பற்றி எழுதியிருக்கிறார்கள். இப்போது இருக்கிற நிலைமை என்ன? மேலும் என்ன செய்யவேண்டும், என் னென்ன மாதிரியாக செய்யவேண்டும் என்பதை சொல்லியிருக்கிறார்கள். இந்த நாட்டில் முதலில் "செக்யூரட்டி ஆப் லைப்" ஏற்பட வேண்டும். அதன் பின்னால் தான் இந்த உச்ச வரம்பு முதலியவை ஏற்படவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் நாம் கவனிக்காமல் நாங்கள் உச்ச வரம்பு சட்டத்தைக்கொண்டு வந்து விட்டோம் என்று சொல்லலாம், என்ற காரணத்தை தவிர இதனால் ஏற்படக்கூடிய லாபங் கள் என்ன? அதற்குள்ள வாய்ப்பு என்ன என்பதைப்பற்றி தெரியாத வர்கள் இதைப்பற்றி பேசிக்கொண்டு இருக்கிறார்கள். இங்கு நமக்கு வைக் சப்பட்டிருக்கின்ற புத்தகங்களை எல்லாம் படித்து பார்த்தாலே போதும். அதன் பிரகாரம் நாம் பின்பற்றினால் நமக்கு பல நன்மைகள் ஏற்படும். அடுத்தபடியாக கிராமத்தில் இருக்கக்கூடியவர்கள் அதிகமாக நகரத் திற்கு வந்து விடுகிறார்கள் என்று சொல்லப்பட்டது. சில தலைவர்கள் மில் லில் நல்ல சம்பளம் கொடுக்கப்படுகிறது என்று பிரசாரம் செய்கிறார்கள். இதை கேட்டவுடன் நகரத்திற்கு போய்விடலாம் என்று கிராமத்தில் இருக் கிறவர்களுக்கு தோன்றுகிறது. நகரில் வந்தால் நாள் தவறாமல் சினி மாவுக்கு போகலாம், மில் டாக்டர் சர்டிபை செய்துவிட்டால் ஆஸ்பத்திரியில் போய் சுகமாக சிகிச்சை பெற்றுக்கொள்ளலாம். இதையெல்லாம் பார்த்து விட்டுத்தான் நகரத்திற்கு வந்துவிடுகிறார்கள் கிராமத்திலிருக்கக்கூடியவர் கள். இதை மாற்றுவதற்கு கிராமத்திற்கு வந்து "ஸோஷியல் ஆக்டி விட்டீஸ்"-ல் பலர் வந்து ஈடுபட வேண்டும். அவ்விதம் யாரும் வருவ தில்லை. பொருளாதார நிலைமையின் காரணமாகவும் இந்த கஷ்டம் ஏற் படுகிறது. இதனால் கிராமத்தில் இருந்து வேலை செய்வதற்கே உற்சாகம் இல்லாத நிலைமை ஏற்பட்டுவிடுகிறது.

(Sri V. Subbiah in the Chair.)

இதன் காரணமாக சம்பளங்கள் ஜாஸ்தியாக கொடுக்கவேண்டியதாக யிருக்கிறது. டவுனுக்கு போய்விட்டால் அதிக சம்பளம் என்று நினைத்துவிடு கிறார்கள். இதனால் கிராமத்திலுள்ள முன்னேற்றமான காரியங்களுக்கு தடை ஏற்படுகிறது. சில கட்சிகள் கிராம மக்கள் மத்தியில் வந்து தவறான வழிகளை சொல்லி பாடுபடக்கூடிய ஜனங்களுடைய மனதைக் கெடுத்து விடுகிறார்கள். இதனால் அவர்கள் உற்சாகத்தோடு வழக்கமாக செய்து கொண்டிருக்கும்

[Sri A. R. Subbiah Mudaliar] [11th September 1958

விவசாயமும் தடைபடுகிறது. என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இது போக "கோவாப்ரட்டீவ் பார்மிங்" மூலமாக பல விதமான நன்மைகள் எதிர்பார்க்கிறார்கள். ஆகவே இதையெல்லாம் ஆலோசனை செய்து பார்க்கும்போது உச்ச வரம்பு சட்டத்தைக் கொண்டு வருவதற்கு இது சரியான காலம் அல்ல இதைப் படிப்படியாகத்தான் கொண்டு வரவேண்டும் என்பதை தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன.

12 noon. SRI R. KRISHNASAMI NAIDU: தலைவர் அவர்களே, நில அளவுக்கு வரம்பு கட்டவேண்டும் என்கிற தீர்மானத்தைப்பற்றி நான் சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். இந்த தீர்மானத்தை ஆதரிக்கும் வகையிலும், எதிர்க்கும் வகையிலும் பல நண்பர்கள் பேசினார்கள். ஒரு நண்பர் சொன்னார், சமூகத்தில் விவசாயிகளை கருவேப்பிலையை போன்று சிலர் உபயோகித்துக் கொள்கிறார்கள் என்று சொன்னார்கள். இந்த "கருவேப்பிலையை" உபயோகித்துக்கொள்ளாதவர்கள் யார் என்பதை என்னால் நினைக்கமுடியவில்லை. நான் ஸ்ரீவில்லிபுத்தூர் தொகுதியைச் சேர்ந்தவன். அந்த தொகுதியில் இருக்கும் வத்திராயிருப்பு என்கிற பகுதி மிகவும் வளமுள்ள பகுதி. அந்த பகுதியில் எல்லா அரசியல் கட்சிகளுக்கும் இடமுண்டு. காரணம் அந்த பகுதி கொஞ்சம் வளப்பமுள்ள பகுதியாக இருப்பது தான். அங்கு சில சமயத்தில் சில பேச்சுகளை கேட்கலாம், நிலம் உழுபவனுக்கே சொந்தம் என்று ஒரு ஆள் முதல் நாள் சொல்லி விட்டு போவார், அடுத்த நாள் கூட்டத்தில் ஒருவர் "நேற்று ஒருவர் உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்று சொல்லி விட்டு போனாராம், அவர் என்ன நிலம் மாத்திரம் சொந்தம் என்று சொல்லுகிறார், நிலம் மாத்திரமல்ல, அவருடைய நிலம், வீடு, நகை நட்டுகள் இவைகள் எல்லாமே உழுபனுக்குத்தான் சொந்தம்" என்று சொல்லுவார். இவ்விதம் பேசிக்கொண்டிருப்பதை நன்றாக கேட்கலாம். ஆகவே இந்த மாதிரியாக பேசக்கூடிய பேச்சுக்களை கேட்டுக் கேட்டு காது புளித்துப் போய்விட்டது. அதே முறையில் தான் சட்டமன்றத்திலும் சிலர் உணர்ச்சி வசப்பட்டு பேசிக் கொண்டிருக்கிறார்கள். இதன் பேரில் பேசிய திரு. கருத்திருமன் அவர்கள் பேசிய போது தன்னைப்பற்றி பேசிக்கொண்டார். நானும் என்னைப்பற்றி ஓரளவுக்கு சொல்லிக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன். அதில் ஒரு தவறும் இல்லை, என்று கருதுகிறேன். நான் இதைப்பற்றி சொல்லும்போது நான் உணர்ச்சி வசப்பட்டு பேசுகிறேன் என்று யாரும் கருத வேண்டாம், இவ்வாறெல்லாம் பேசப்படுகிறதே விவசாயிகளைப்பற்றி என்று நினைத்து வருத்தப்பட்டுத்தான் இதை நான் சொல்லுகிறேன். எனக்கு எட்டு குழந்தைகள் இருக்கிறார்கள். நான்கு ஆண்கள், நான்கு பெண்கள். மொத்தத்தில் எனக்கு 23 ஏக்கர்கள் இருக்கின்றன. இதில் தண்ணீர் பாயக்கூடிய நிலமாக இருப்பதில் நான்கு ஏக்கர் நிலம் பூதானமாக கொடுத்திருக்கிறேன். இது தவிர மதுரையில் கண்டமனூர் வருஷநாடு என்ற இடத்தில் சுமார் 50 ஏக்கர் நிலத்தை வாங்கினேன். மலைகளுக்கிடையிலுள்ள அதை சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு பண வசதிகள் வேண்டும். அதை இன்னும் சரியானபடி சாகுபடிக்கு கொண்டு வரவில்லை. அரசாங்கத்தினுடைய உதவி பெற்று யாராவது அதை சாகுபடிக்கு கொண்டு வருவதற்கு முன் வந்தால் அந்த 50 ஏக்கர் நிலத்தையும் சாகுபடிக்கு கொடுத்துவிடுவதற்கு நான் தயாராய் இருக்கிறேன். கிராமத்திலிருந்து நகரத்திற்குச் செல்லுகிறார்கள் என்று அங்கலாய்க்கிறார்கள். நகரத்தில் இருக்கும் சூழ்நிலை அவர்களைக் கவருகிறது என்பதை மறந்துவிடக்கூடாது. நகரத்தில் சினிமாக் காட்சிகளைக் காணலாம்; மற்றும் வேறு விதமான காட்சிகளைக் காணலாம்; சில மணி நேரம் மட்டும் வேலை செய்து விட்டு ஊர் சுற்றலாம். இந்த மாதிரியான ஒரு எண்ணம் அதிகமாகப் பரவி வருகிறது கிராம மக்களிடம். கிராமத்திலே மக்கள் நஞ்சை நிலம், புஞ்சை நிலம் எல்லாம் வைத்திருக்கிறார்கள். அவர்களிடம் போதிய நிலம் இருக்கிறது. அவர்களிடையிலே இந்த மாதிரியான எண்ணம் பரவி வருவதால், ஆசிரியர் பதவிக்கு வருபவர்கள் எண்ணிக்கை நூற்றுக் கணக்கில் பெருகி வருகிறது. எனக்குத் தெரிந்த குடும்பத்தைச் சேர்ந்த பலர் ஹையர் கிரேட்

11th September 1958] [Sri R. Krishnasami Naidu]

ஆசிரியர் பதவிக்காக என்னிடம் வந்தார்கள். நான், உங்களுடைய முன்னோர்களெல்லாம் இத்தனை எக்கர் நஞ்சை நிலம், இத்தனை எக்கர் புஞ்சை நிலம் வைத்திருக்கிறார்களே, அந்த நிலங்களை மேற்பார்த்துக் கொள்ள யார் இருக்கிறார்கள் என்று கேட்டால் அந்த சமயத்திலே அவர் நாங்கள் படித்து முன்னேறுவதில் உங்களுக்கு இஷ்டமில்லையா என்று திருப்பிக் கேட்கிறார்கள். அவருடைய கருத்து என்ன ? ஏதோ ஆசிரியராக இருந்தால், ஒரு சில மணி நேரம் வேலை பார்த்து விட்டு எங்கே வேண்டுமானாலும் போய் வரலாம், ஊர் சுற்றலாம், என்ற எண்ணம் ஏற்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது. கிராமங்களுக்கு அருகிலுள்ள நகரங்களில் சில தொழிற்சாலைகள், மில்கள் ஏற்பட்டிருப்பதால், கிராமங்களிலுள்ள மக்கள் அந்த மில்களில் வேலைக்குச் சென்று அங்கு சில மணி நேரம் வேலை செய்து விட்டு சினிமாக் காட்சிகள் பார்க்கலாம், காதுக்கினிய பாட்டுக்களை கேட்கலாம் என்று அவர்கள் கிராமங்களை விட்டு நகரத்தின் நாகரீகத்தை நோக்கிப் போகின்றதை என்னவென்று சொல்வது. இது ஒரு அழிவு காலத்திற்குத்தான் என்பது கிராமத்தில் இருப்பவர்களுக்கு இன்னும் படவில்லை. சிறிது காலம் சென்றால் நாகரீக காலம் நம்மை அழிவுக்கு இழுத்துச் செல்கிறது என்று உணரும் காலம் வரும். அந்த எண்ணம் காரணமாகத்தான் கிராம மக்கள் நகரப் புறங்களுக்கு வந்துகொண்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஏதோ நிலம் இல்லாததன் காரணமாக கிராம மக்கள் நகரத்திற்கு வருவதாகச் சொல்கிறார்கள். அது முற்றிலும் மாறுபட்ட உண்மை. என்னுடைய தாலூகாவில் நிலம் குறைவு. அங்கு 2,90,000 எக்கர் நிலம் இருக்கிறது. மலை, ஆறு, காடு இவைகளையெல்லாம் சேர்த்து 3,20,000 ஜனத் தொகை இருக்கிறது. தானியங்கள் விளையக்கூடிய நிலம் 92,000 எக்கர். பல தாலூக்காக்களிலும் இதே நிலைமைதான். ராமநாதபுரம் ஜில்லாவில் எல்லா தாலூக்காக்களிலும் இதை விட அதிகமான நிலம் இருக்கிறது. தலைக்கு 30 சென்ட், 32 சென்ட் சாகுபடி செய்யக்கூடிய நிலம் இல்லை. ராமநாதபுரம் ஜில்லாவிலேயே எங்கள் தாலூகாதான் வளம் பொருந்திய பகுதி. அப்படிப்பட்ட தாலூகாவின் நிலைமை 2,90,000 எக்கரில் 1,40,000 எக்கர் நிலம் கைப்பற்றில் உள்ள நிலம். ஆறு, ரோடு, காடு முதலிய பகுதிகளைத் தவிர, பல்லாயிரக்கணக்கான நிலங்கள் இப்பொழுதும் சாகுபடிக்கு தகுதியாக்கப்படாத நிலங்களாக இருக்கின்றன. இதே நிலை எல்லா இடங்களுக்கும் பொருந்தும். 92,000 எக்கர் நிலம் இருக்கிறது. எக்கர் ஒன்றுக்கு குருணி, பதக்கு, மதராஸ் படிக்கு குருணி என்றால் 4 படி, பதக்கு என்றால் 8 படி—சாமை விளையக்கூடிய நிலங்கள் எல்லாம் சேர்ந்து 92,000 எக்கர். இவைகள் தானியங்கள் விளையக்கூடிய நிலங்கள். வியாபாரப் பொருள்கள் விளையக்கூடிய நிலங்களும் இருக்கின்றன. ஆனால் அந்தப் பகுதியிலே இப்போது விளைச்சலில் இருக்கக்கூடிய நிலம் குறைவாக இருக்கும் என்று சொல்கிறேன். ஒவ்வொரு ரெவின்யூ கிராமத்திலும் பல கிணறுகள் தூர்ந்து போயிருக்கின்றன. ஒரு குடும்பத்திற்கு 3 எக்கர் இருக்கும். அவர்களுக்கு சாகுபடி செய்வதில் அக்கரை இல்லாமல், பக்கத்தில் உள்ள மீனாட்சி மில்லில், மற்ற வெளியிடங்களில் வேலை செய்வதனால், குடும்பத்திற்குச் சொந்தமான நிலங்கள் பாடுபடுவதற்கு ஆட்கள் இல்லாமல் விளைச்சலில்லாமல், பயன்படுத்தப்படாமல் இருந்து கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன ? இத்தனைக்கும் அங்கு இருக்கக்கூடிய நிலம் குறைவு. நிலத்தில் உழுது பாடுபட்டு விவசாயம் செய்வதைவிட, ஒரு சில மணி நேரம் மில்லில் வேலை செய்துவிட்டு, சந்தோஷமாக இருக்கலாம் என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டிருப்பதுதான் காரணம்.

சில வருஷங்களுக்கு முன்பு புதிய கிணறுகள் வெட்ட எங்கள் பகுதியிலே 250 ரூபாய் மானியம் கொடுத்தார்கள். அதனால் சில வருஷங்களுக்குள் 1,600 கிணறுகள் வெட்டப்பட்டிருக்கின்றன. அந்தக் காலத்திலே கூட பல குடும்பத்தினர் லகுவான வேலையை நாடினார்களே தவிர, விவசாயத்தில் ஈடுபடவேண்டும், அதற்காக கிணறு வெட்ட வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு ஏற்படவில்லை. உடல் உழைப்பு கௌரவக் குறைவு என்ற தப்பான எண்ணத்தை வைத்துக்கொண்டோ என்னவோ, விவசாயத் துறையில் இறங்கி வேலை செய்வதில் அலுத்த விட்ட மாதிரி ஒரு எண்ணம்

சமீபத்திலே வந்திருக்கிறது. அதற்கு ஓரளவுக்கு நாமெல்லாம் காரணம் என்று சொல்ல வேண்டுமோ என்னவோ. அப்படிப்பட்ட ஒரு மனப்பான்மை கிராமங்களில் பரவும் நிலை ஏற்பட்டிருக்கிறது. எங்கள் பகுதிகளில் விவசாயத் துறையில் நல்ல சம்பளம் கிடைக்கிறது. நிலமற்றவர்களுக்கும் நல்ல சம்பளம் கிடைக்கிறது. மற்ற பகுதிகளிலும் இதே மாதிரி வருஷம் முழுவதிலும் வேலை கிடைக்கிறதென்பதில் சந்தேகமில்லை. இப்படி நாம் சட்ட சபையிலே நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்ற தீர்மானத்தைக் கொண்டு வந்து பேசுவதிலே, இதை யார் ஆதரிக்கிறார்கள், யார் ஆதரிக்கவில்லை என்று தங்கள் தங்கள் கட்சியை வலுப்படுத்திக் கொள்ளும் எண்ணத்தோடு பேசி, பொது மக்களுடைய அபிப்பிராயத்தைத் தங்களுக்குச் சாதகமாகச் சொல்லி நாம் கூட கருவேப்பிலையாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறோம். இப்படிப் பேசி ஒருவரை ஒருவர் ஏமாற்றப் பார்க்கலாம். உண்மையிலே பார்த்தால், கடைசியிலே நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம். இதை எல்லோரும் ஒரு பொதுப் பிரச்னையாகக் கருதவேண்டும். தற்போதுள்ள உண்மை நிலையை உணரவேண்டும். நாம் இங்கு பேசும்போது நிலைமை நாம் பேசுவது போன்று இருக்கிறதா என்பதை உணர்ந்து பேசவேண்டும். அங்குள்ள நிலைமை வேறாக இருக்கும் போது, விவாதத்திற்காக வரும்போது தங்களுக்குச் சாதகமாக இப்படிப்பட்ட ஒரு பேச்சைப் பேசுவது சரிதானா என்று நான் கேட்கிறேன். நான் சொல்வது சட்டசபையிலே ஒரு வகையில் ஒழுங்காக இராது. ஒரு வகையிலே இங்கிதமாகவும் இராது. அவர்கள் தெரியாமல்தான் பேசுகிறார்களா, அல்லது தெரிந்துதான் பேசுகிறார்களா என்று தெரியவில்லை. விவசாயத்திற்கு சர்க்கார் ஊக்கம் அளிக்க வேண்டும், உணவு உற்பத்தி செய்வதிலே விவசாயிகளுக்கு ஊக்கம் அளிக்க சர்க்கார் தவறி விட்டது, என்றெல்லாம் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். அவர்கள், இவ்வாறு பேசுபவர்கள், பெரிதும் குறை கூறுபவர்களாகப் பேசும் முறையிலே பேசுகிறார்களே தவிர உண்மை நிலையைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் பேசுகிறார்கள். எந்தக் காலத்தில் உதவி செய்யவேண்டும், அரசாங்கம் எந்தக் காலத்தில் உதவி செய்திருக்கிறது என்பதைப் பற்றித் தெரிந்து கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. விவசாயத்தைப் பற்றி ஒரு கேள்வித் தாளைப் போட்டு பரீட்சை வைத்தால், இங்கே பிரமாதமாகப் பேசக் கூடியவர்கள் கூடத் தவறி விடுவார்கள் என்று நினைக்கிறேன். ஒன்றுக்கொன்று சம்மந்தப்படாத முறையிலே பேசுகிறார்கள். இந்த விவசாயப் பிரச்னையிலே அரசாங்கம் ஒன்றும் செய்ய வில்லை என்று பலரால் எடுத்துக் காட்டப்படுகிறது. சென்ற சில வருஷங்களாக நிலப் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில் ஒரு சரியான முடிவுக்கு வருமுன் எப்படிப்பட்ட சூழ்நிலையை உண்டாக்கவேண்டுமென்று யோசித்து படிப்படியாக சிலசில சட்டங்களை செய்து கொண்டு வருகிறோம். பக்குவபட்ட மனப்பான்மை நிலச் சொந்தக்காரர்களிடமும் மட்டுமல்லாமல், நிலத்தில் வேலை செய்பவர்களிடத்திலும், மற்றவர்களிடத்திலும் ஏற்படுத்த, மாறுதல் ஏற்படுத்தத் தக்க சூழ்நிலையை அரசாங்கம் உண்டுபண்ணி வந்திருக்கிறது. காங்கிரஸ்தான் செய்தது என்று நான் பெருமை பட்டுக் கொள்ளவில்லை. எல்லோரும் சேர்ந்துதான் செய்திருக்கிறோம். நிலச் சீர்திருத்த விஷயத்தில் சில படிகள் முன்னேறியிருக்கிறோம் என்பதில் சந்தேகம் இல்லை. அதைக் குறித்து அவர்கள் பேசவேயில்லை. ஒரு தரப்பினர் நிலச் சீர்திருத்தம் கொண்டுவராவிட்டால் மந்திரி சபையே கவிழ்ந்து விடும் என்று சொல்கிறார்கள். இவர்கள் மனதில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரியவில்லை. ஒருவேளை இந்த நிலச் சீர்திருத்தத்தைக் கொண்டு வந்தால், இந்த மந்திரி சபை கவிழ்ந்து விடும் என்று அவர்கள் அப்படி நினைத்து, கொண்டுவரவில்லை, கொண்டு வரவில்லை என்று சொல்கிறார்கள் போல் இருக்கிறது. நிலச் சீர்திருத்தம் வரத்தான் போகிறது. அதனால் மந்திரி சபை கவிழ்ந்து போனாலும் போகட்டும் என்று சொல்லிக்கொள்ளத் தயார். சீர்திருத்தம் கொண்டுவருவதற்கான ஒரு சூழ்நிலையை உண்டுபண்ண நாம் பேச வேண்டுமே தவிர, ஒருவரையொருவர், நாங்கள் தான் பெரியவர்கள், நாங்கள் தான் பெரியவர்கள், நீங்கள் செய்வது சரியல்ல, நாங்கள் செய்வதுதான் சரி என்றெல்லாம் இவ்வாறு பேசவேண்டாம் என்று நினைக்கிறேன். முக்கியமாக இந்த

11th September 1958] [Sri R. Krishnasami Naidu]

நிலவுமைக்கு வரம்பு கட்டும் விஷயத்திலே முன்னைவிட இப்போது நிலச் சொந்தக்காரர்களின் மனது கூட இதற்கு அனுகூலமாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

**(Mr. Speaker in the Chair.)**

கூடியசீக்கிரத்திலே விவசாய வருமான வரி மசோதா வரவிருக்கிறது. எதிர் காலத்தில் நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுவதற்கான மசோதவைக் கொண்டுவரும் பொழுது அதற்குச் சாதகமான சூழ்நிலையை இந்தச் சட்டம் உண்டுபண்ணும் என்று கூட நம்புகிறோம். அவ்வாறு எல்லாம் இணக்கமாக, பொறுக்குக் கமிட்டியில் எல்லாக் கட்சியினரும் மனம் விட்டுப் பேசியிருக்கிறோம். ஆனால் அங்கே பேசிய பேச்சுகளுக்கும், இங்கே உணர்ச்சி வசப்பட்டு பேசப்படும் பேச்சுகளுக்கும் சம்பந்தமில்லாமல் இருக்கிறது. ஆகவே, நில உடமை சம்பந்தமாக இம்மாதிரி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தீர்மானத்தைக் கொண்டு வந்து, அந்த சந்தர்ப்பத்திலே நாம் பலவிதமான கருத்துக்களைப் பேசி நல்ல சூழ்நிலையை கெடுத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். யார் என்ன பேசினார்கள், எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் இந்தத் தீர்மான ரூபமாக வரும்போது என்ன கருத்தைச் சொன்னார்கள் என்பதைத் துறுவி ஆராயாமல், விவசாய வருமான வரி போன்ற நிலச் சீர்திருத்தத்திற்கு ஆக்கம் அளித்துவரக்கூடிய சட்டங்கள் நிறைவேறியதற்குப் பின்னர், அதற்கு வழிவகை காண தீர்மானம் கொண்டுவந்தால் நிலைமை சாதகமாக இருக்கும். நமக்குள்ளே ஒருவருக்கொருவர் சோதித்துக் கொண்டிருக்க வேண்டாம். இந்த சட்டசபையிலுள்ள எல்லா அரசியல் கட்சியினருக்கும் நிலப் பிரச்னை சம்பந்தமாக இந்த நாட்டிலே ஒரு நல்ல முடிவு ஏற்பட வேண்டுமென்பதிலே அக்கரை யிருக்குமென்பதில் சந்தேகமில்லை. பல் வேறு நாடுகளிலே என்ன நடக்கிறது என்பதையும் நாம் தெரிந்துகொண்டிருக்கிறோம். இன்று உலகத்திற்கே எடுத்துக்காட்டாக இருக்கிற ஜப்பான் நாட்டிலே, நிலப் பிரச்னை சம்பந்தமாக, அந்த நாட்டின் நிலைமைக்கு ஒத்த விதத்தில் ஒரு நிரந்தரமான சட்டத்தை வகுப்பதற்காக, அங்கேயுள்ள சட்டசபையில் 13 முறைகள் சட்டத்தை மாற்றி மாற்றி அமைத்திருப்பதாக அறிகிறோம். அமெரிக்காவிலே 150 ஏக்கருக்குக் கீழே பண்ணைகளே இல்லை என்று சொல்லுகிறார்கள். ரஷியாவைப் பற்றி சொன்னார்கள். அங்கே ஜனத்தொகை எவ்வளவு இருக்கிறது? சைபீரியாவின் பரப்பு என்ன? அங்கேயுள்ள நிலம் எவ்வளவு, இந்தியாவிலுள்ள நிலம் எவ்வளவு, இந்தியாவின் ஜனத்தொகை என்ன என்பதை எல்லாம் நாம் நினைவில் கொள்ள வேண்டும். இங்கே இருக்கிற நிலைமையை ஒப்பிட்டுப் பார்த்து இங்கே முடியுமா, முடியாதா என்பதை மனதில் வைத்துக் கொண்டு பேச வேண்டும். எல்லாத் தகவல்களும் நம்மிடத்தில் இருக்கின்றன. ஒருவரை ஒருவர் மறைத்து ஏமாற்றிவிட முடியாது. ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் வைத்துக்கொண்டிருப்பவர்கள் ஒரு சில ஜில்லாக்களில் ஒரு சிலரே இருப்பார்கள். நிலத்திற்கு வரம்பு கட்டவேண்டாமென்று நான் சொல்லவில்லை. வரம்பு கட்டவேண்டும். இப்பொழுது அதற்கு சாதகமான சூழ்நிலை வந்துகொண்டிருக்கிறது. கட்சி அடிப்படையிலே உணர்ச்சி வசப்பட்டுப் பேசாமல், பொதுப்படையாக இப்படிப்பட்ட தீர்மானங்களை வற்புறுத்த வேண்டும். ஆகவே நல்லதொரு சூழ்நிலையை உண்டாக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு, ஒரே ஒரு கண்ணியை மட்டும் சொல்லி முடித்துக்கொள்கிறேன். யாரோ "பராபரமே" என்று சொன்னார்கள். இதை எல்லாம் பராபரத்தினிடத்தில் தான் ஒப்புவிக்க வேண்டும். 12-10 p.m.

"வாய்ப்பந்தல் போட்டு வருந்திக் கண்ணீர் வடித்து
எய்த்தால் நெல்லுற்பத்தி எழுமோ பராபரமே
கஷ்டத்தைச் சொல்லி கண் விழிகளைச் சுருட்டி
இஷ்டம்போல் பேசுவதால் ஏண்ணும் பராபரமே
நிலத்தைப் பகிர்ந்தளித்தல் நீதி முறை என்றாலும்
நிலமளவை எண்ணுங்கால் நேருவதாமோ பராபரமே
உண்மை நிலையை உணர்ந்து உழைப்போர்க்கு
நன்மை செய்தலொன்றே நல்மாம் பராபரமே!

(சிரிப்பு)

[Sri R. Krishnasami Naidu] [11th September 1958

இந்தப் பிரச்னைக்கு ஒரு நல்ல தீர்வு காண்பதற்கு ஆண்டவன் ஒரு சரியான சந்தர்ப்பத்தை உண்டுபண்ணிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**Sri M. JAGANNATHAN** : கனம் அங்கத்தினர் எதிலிருந்தோ ஒரு பாட்டைப் படித்தார்கள். அது அவர் எழுதிய புத்தகமோ என்னமோ தெரியவில்லை. இது சட்டசபை ஒழுங்கிற்கு புறம்பானதா இல்லையா என்று அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : கனம் அங்கத்தினரே எழுதிய கவிதையைப் படிக்கலாம். வேறு ஒருவர் எழுதியதைப் படித்தால்தான் அதை சபைக்கு தெரிவிக்க வேண்டும்.

**Sri R. KRISHNASAMI NAIDU** : கனம் அங்கத்தினர் முந்திய சபையிலும் இருந்திருக்கிறார் என்று நினைக்கிறேன். இன்னொருவர் எழுதியதைப் படிக்கும் வழக்கம் என்னிடம் கிடையாது. சந்தர்ப்பம் கொடுத்தால் இதுமாதிரி கண்ணிகளை சில நிமிஷங்களில் ஒப்புவிக்கத் தயாராயிருக்கிறேன்.

**Mr. SPEAKER** : அது "out of order" ஆகப் போய் விடும். (சிரிப்பு).

**Sri R. KRISHNASAMI NAIDU** : நில உடமைக்கு வரம்பு கட்டுவதற்கான சந்தர்ப்பம் வரும். சுமுகமான நிலையில் அதற்குத் தீர்வு காணவேண்டும். ஒரு சுமுகமற்ற சூழ் நிலையை உண்டாக்கவேண்டாமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. K LAKSHMIPATHIRAJ** : கனம் சபாநாயகர் அவர்களே, நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்று கொண்டுவந்திருக்கிற இந்தத் தீர்மானத்தின் மீது சில வார்த்தைகள் பேசவிரும்புகிறேன். இப்பொழுது எக்கச்சக்கமான நிலைமை என்னைப் போன்ற விவசாயிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுது எதிர்கட்சியினால் கொண்டு வரப்பட்டிருக்கிற தீர்மானத்தை எதிர்த்தால் வெளியே சென்று, விவசாயிகள் மத்தியிலே வேலை செய்கின்ற ராஜு போன்றவர்கள் கூட இந்தத் தீர்மானத்தை எதிர்த்துப் பேசுகிறார்கள் என்ற பேச்சினை கேட்க முடியும். பல்லாயிரக்கணக்கனவர்கள் மத்தியிலே இந்த நிலைமையை மாற்றி திருத்தியமைத்து தங்கள் கட்சிக்கு பயன்படுத்திக் கொள்ளமுடியும். இந்த நிலையில் தெரிவது எல்லாம் ஒன்றே ஒன்றுதான். இந்த நில உடமையைப்பற்றி பேசுகின்ற நேரத்தில் எதிர்கட்சியிலுள்ளவர்கள் இந்தப் பிரச்னையை எந்தக் கோணத்திலிருந்து பார்க்கிறார்கள் என்று தெரியவில்லை. காங்கிரஸ் கட்சியிலும்கூட பல நிலச்சுவான்தார்கள் இருக்கிறார்கள் என்று தெரியும். இன்று சட்டசபையிலே கொண்டு வரப் பட்டிருக்கிற இந்தத் தீர்மானம் இன்னும் சரியான முறையிலே கொண்டுவரப்பட்டிருக்கவேண்டும். இந்தத் தீர்மானத்தின் மீது பேசிய போக்கைப் பார்க்கிறபொழுது, நானும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவன், ஆகவே இதற்குப் பதில் கூறவேண்டும் என்ற முறையில் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன்.

ஒரு சிலர் ஏதோ புரட்சின் சின்னம் போன்ற சில கருத்துக்களை சொன்னார்கள். ஏதோ தாங்கள்தான் உழைப்பவர்களுக்கு மத்தியிலே இருந்து, உழைப்பவர்களை மேலே உயர்த்தும் முயற்சியிலே ஈடுபடுவது போலவும், மற்றவர்கள் உழைக்கிறவர்களை ஏமாற்றுவது போலவும் பேசினார்கள். ஒரு அங்கத்தினர் "எய்க்கிறீர்கள்" என்று கூடச் சொன்னார்.

11th September 1958] [Sri P. S. K. Lakshmipathiraj]

அதற்கு நான் மிகவும் வருந்துகிறேன். காங்கிரஸ் கட்சிக்கு யாரையும் ஏய்த்து, ஏமாற்றி, வோட்டு வாங்கவேண்டிய அவசியம் இல்லை. அதிலே எல்லாவிதமானவர்களும் இருக்கிறார்கள். முதலாளிகள் இருக்கிறார்கள், விவசாயிகள் இருக்கிறார்கள், நிலச்சுவான்தார்கள் இருக்கிறார்கள், வியாபாரிகள் இருக்கிறார்கள். இன்னும் தொழில் செய்பவர்கள், தொழிலாளிகள் எல்லோரும் இருக்கிறார்கள். ஆனால் திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்த ஒரு அங்கத்தினர் "ஏய்க்காதீர்கள்" என்று சொன்ன பொழுது, எல்லோருடைய மனதிற்கும் சங்கடமாகத்தான் இருந்தது. 12-20 p.m. ஏய்ப்பதுயார் என்று நான் கேட்க விரும்புகிறேன். நில உடமைக்கு வரம்பு கட்ட வேண்டும் என்ற தீர்மானத்தின் மீது பேசும்பொழுது இவர்கள் ஒழுங்காகப்பேசலாம். பத்து ஏக்கர் அல்லது 20 ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருக்கக்கூடாது என்று சொல்லி மிராசுதாரர்கள் மீது சாடியிருந்தால் நான் அதைப் பாராட்டியிருப்பேன். அவர் புலியை உதாரணமாகக் காட்டி சில கருத்துக்களை சொன்னார். சர்க்கஸ் புலி, வைக்கோல் புலி, என்றெல்லாம் பேசினார்கள். அவர் சாடியதில் மிராசுதாரர்களையல்ல. இங்கேயுள்ள காங்கிரஸ் ஆட்சியாளர்களைத்தான். உழவர்களுக்காக காங்கிரஸ் ஒன்றும் சேவை செய்யவில்லையே என்று சொன்னார். தேர்தல் காலத்தில் நாமெல்லாம் பார்த்துக்கொண்டுதான் இருந்தோம். ஏழை உழவர்களின் சார்பிலே இருந்துகொண்டு, அவர்களுக்குப் பரிந்து யார் பேசினார்கள் என்று நமக்குத் தெரியும். அவர்களா பேசினார்கள்? உதாரணமாக என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டு சொல்ல முடியும். நான் ஒரு சாதாரணமான நிலம் இல்லாதவன். எனக்கு முன் பேசியவர் 25, 30 ஏக்கர் இருக்கிறது என்று சொன்னார்கள். நிலம் இல்லாத என்னை எதிர்க்க நூற்றுக்கணக்கான ஏகராக்கள் சொந்தமான ஒரு பெரிய மிராசுதாரை தன் கட்சி அங்கத்தினராக திராவிட முன்னேற்றக் கழகத்தார் நிறுத்தினார்கள். அவர்கள் தான் கூறுகிறார்கள். 'யாரையோ ஏய்க்கிறார்கள்' என்று. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த கனம் அண்ணாதுரை அவர்கள் முதல் ஆசைத்தம்பி இறுதியாக எல்லோரும் வந்திருந்த மகாநாட்டில் நன்றியும் கூறியது ஏழை உழைப்பாளிக்கு அல்ல. தொழிலாளிக்கு அல்ல, கட்சியிலே வேலை செய்த ஊழியருக்கு அல்ல, ஆயக்குடி ஜமீன்தாருக்கு, பல்லாயிரக்கணக்கான ஏகரா சொந்தமுள்ளவருக்கு, மெய்க்காரப்பட்டி எஸ்டேட் ஜமீன்தாருக்கு, ஆயிரக்கணக்கான ரூபாய் வைத்திருப்பவருக்கு, ஆயிரக் கணக்கான ஏகரா வைத்திருக்கும் மிராசுதாருக்கு திராவிட முன்னேற்றக் கழக மகாநாட்டிலே பாராட்டி நன்றி உரை கூறினார்கள் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். காங்கிரஸில் என்போன்ற பல நூற்றுக்கணக்கான ஊழியர்கள் இருக்கின்றார்கள். விவசாயிகள் மத்தியிலே நாங்கள் வேலை செய்துக்கொண்டிருக்கிறோம். எங்களுக்கும் பலவித நிர்ப்பந்தங்கள் இருக்கின்றன. வெளியிலே மிராசுதாரர்கள் நிர்ப்பந்தம், காங்கிரஸில் உயர்பீடத்தில் அங்கம் வகிக்கும் மிராசுதாரர்களின் குறுக்கீடுகள், பல சங்கடங்கள் எங்களுக்கு இருக்கின்றன. இன்று ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். காங்கிரஸிலே ஊழியம் செய்பவர்கள் சாதாரணமாக ஏழைகள். கம்யூனிஸ்டு கட்சியிலே பணக்காரர்கள் இருக்கிறார்கள், அவர்கள் கையிலே ஏராளமாக பணம் இருக்கிறது என்பதை அவர்கள் ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். ஏதோ விவசாயிகளுக்கு பெரிய உதவி செய்துவிட்டதாக பிரசாரம் செய்துகொள்ளுவதற்காக இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்களே தவிர, வேறு ஒன்றுமில்லை. காங்கிரஸ் கட்சி இதை நல்ல முறையில் ஒழுங்காக, ஆஸ்பதமாக உருவாக்கி பிறகு தான் இம்மாதிரி தீர்மானம் கொண்டுவர வேண்டுமென்று மெஜாரிடியினால் தள்ளிவைத்தால், அதை ஒரு பிரசாரமாக அவர்கள் பயன்படுத்திக்கொள்ளுவார்கள்.

நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டுவது அவசியம் என்பதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த கனம் கிருஷ்ணசுவாமி நாயுடு அவர்கள் நிலப் பிரிவினைக்காக சாத்தியக்கூறுகளை நன்கு ஆராய்ந்து, பிற்பாடு இந்த சட்டத்தைக் கொண்டுவரலாம் என்று சொன்னார்கள். அது நல்ல யோசனைதான். ஆனால் நிலப் பிரச்னையைத் தள்ளிப்போட்டுக் கொண்டே போனால், அது தீரும் நிலைமையே வராது. அதனால்

[Sri P. S. K. Lakshmipathiraj] [11th September 1958

பின்னால் பல விளைவுகள் ஏற்படும் என்பது என்னுடைய கருத்து. நிலச் சீர்திருத்தத்தை எவ்வளவு சீக்கிரம் கொண்டுவர முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் கொண்டுவர வேண்டும். உதாரணமாக பம்பாய் ராஜ்யத்தில் நில உடமைக்கு ஒரு உச்ச வரம்பு கட்டி, அதற்கு மேல் உள்ள நிலத்தை ஒரு காலவரை கொடுத்து அதற்குள் எப்படியோ விநியோகம் செய்துவிட வேண்டுமென்று ஒரு வரம்பு ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்பது என் ஞாபகம். நான் பத்திரிகையில் அவ்வாறு பார்த்தேன். அதே போன்று ஒரு நிலையையாவது இங்கும் ஏற்படுத்த வேண்டும். நிலம் உழுபவர்களுக்குச் சொந்தம் என்ற கோஷத்தை கிளப்பியது காங்கிரஸ் தான். முன்பு இருந்த நிலைமை வேறு. விவசாயிகளிடையோ அல்லது தொழிலாளிகளிடையோ ஒரு தனிப்பட்ட கட்சி தான் இருந்து சேவை செய்ய முடியும் என்ற எண்ணம் நாட்டிலே இருந்தது. தொழிலாளர்களைப் பற்றி இடதுசாரி மனோபாவம் தங்களுக்குத்தான் உண்டு என்று பூரண உரிமையை கம்யூனிஸ்டு கட்சி பெற்றுக்கொண்டிருந்தது. இன்று இந்திய உப கண்டத்தில் இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ் நல்ல உரம் பெற்று, செல்வாக்கு பெற்றிருக்கிறது. தொழிலாளிகளின் ஏகோபித்த மனதை அது சந்தோஷப்படுத்தியிருக்கிறது. விவசாயிகள் மத்தியிலும், தொழிலாளர்கள் மத்தியிலும் இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ் சிறந்த சேவை செய்கிறது.

நில உடமையைப் பற்றி இன்று நாம் கூறுகிறோம். ஆனால் அன்றே தமிழ் கவிஞர் கடந்த காலத்தில் கூறுவதை இன்று நாம் புதியதாக கூறவில்லை. "காணி நிலம் வேண்டும், பராசக்தி" என்று அன்றே தேசிய கவிஞர் பாரதியார் தமிழ் மக்களுக்கு குரல் கொடுத்தார் என்பதை மறந்து விடக்கூடாது. அன்று கவிஞராக இருக்கக்கூடியவர்கள் சாப்பாட்டிற்கு இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார்கள். இன்று கவிஞராக, அறிஞராக வரக்கூடியவர்கள் பஞ்சணையில் அமர்ந்து நல்ல சௌகரியமான நிலையில் இருக்கிறார்கள். வறுமையினால் வாடி கடற் கரையிலே வயிற்றுப் பசி ஆராமல் வாயாரப் பாடிய பாட்டுக்கள் இன்று தமிழ் நாட்டிலே புது உணர்ச்சியை கொடுத்து இந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்கின்றன. நில உடமையைப் பற்றி கடந்த காலத்தில் சொல்லியதை உட்கருத்தாக வைத்து யாரும் எதையும் சொல்லியிருக்க முடியுமே தவிர, புதியதாக ஒன்றும் சொல்லியிருக்க முடியாது.

அதுமட்டுமல்ல, இன்று உள்ள நிலைமையில் விவசாயிகள் அதிக உற்பத்தி செய்து கள்ள மார்கெட் செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. எதில்தான் இந்த கள்ள மார்கெட் இல்லாமல் இருக்கிறது. எல்லாவற்றிலும் கள்ள மார்கெட் இருக்கிறது. சினிமாவில் கூட "வைட்டில் எவ்வளவு பணம், பிளாக்கில் எவ்வளவு பணம்" என்று பேசுகிறார்கள். அதுமட்டுமல்ல, எல்லா இடத்திலும் பல யுக்திகள், பல தவறான போக்குகள், இப்பொழுது சிருஷ்டிக்கப்பட்டு வருகிற காரணத்தினாலே, சமுதாயத்திலே பல குறைபாடுகள் இருக்கின்றன. தொழிற்சங்க இயக்கத்திலும்கூட இது விட்டபாடு இல்லை. அதிலும் பல தவறுகள் ஏற்படுகின்றன. இன்று நில உச்ச வரம்பை ஏற்பாடான முறையில் அமைத்து, நல்ல முறையிலே சட்டம் கொண்டு வந்து கூடியசீக்கிரம் அமுல் செய்ய காங்கிரஸ் கட்சி முற்பட்டுக்கொண்டிருக்கிறது. அதற்கான சட்டத்தை அமைச்சர் அவர்கள் துரிதமாக கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதை ஒரு பெரிய பிரச்னையாக வைத்துக்கொண்டு பல்வேறு மேடைகளிலே பேசுகிறார்கள். இன்று சட்ட சபையிலே ஒரு மாதிரியாகப் பேசுகிறார்கள். வெளியே ஒரு மாதிரியாகப் பேசுகிறார்கள். சிறு கைத்தொழில், இன்னும் பல திட்டங்கள், பல அபிவிருத்திகள் இவைகளை குறிப்பிட்டு, இதை ஏன் செய்யவில்லை, அதை ஏன் செய்யவில்லை என்று கேட்கிறார்கள். சேரி ஒழிப்பு திட்டத்திற்கு மத்திய சர்க்கார் எவ்வளவு கொடுத்திருக்கிறார்கள் ஏன் அதைச் செய்யவில்லை என்றெல்லாம் கேட்கிறார்கள். வெளியே பிரசாரம் செய்யும்பொழுது, "அரசாங்கம் ஒன்றுமே செய்யவில்லை, தென்னாட்டை கவனிப்பதே இல்லை, இதற்கு புள்ளி விவரங்கள் கொடுக்க முடியுமா" என்றெல்லாம் திராவிட முன்னேற்றக் கழகத்தார் பேசும்பொழுது மக்களிடையே குழப்ப மனோபாவம் உண்டாகிறது. இதுதான்

நாட்டில் நடக்கிறது. சீர்திருத்தம் வேண்டுமென்று சொன்னால், உழவர்களுக்கு உரிமை பெற்றுக்கொடுக்க வேண்டுமென்று சொன்னால், தங்களுடைய கட்சிப் போக்கை சற்று மாற்றிக்கொண்டு, ஒரு முக அமைப்பிலே அவர்கள் உழைக்க வேண்டும். ஊழியர்கள் வாஸ்தவத்தில் கஷ்டப்பட்டு உழைக்கவேண்டும். நிலம் வைத்திருப்பவர்கள் பழைய காலத்தையே எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். பழைய காலத்திலே உள்ள வசதிகளை எண்ணிக்கொண்டு சட்ட சபைக்கு வந்தபொழுது காங்கிரஸ் சர்க்காரை குறை கூறுகிறார்கள். அதுபற்றி வியாபாரிகள், விவசாயிகள், மற்றும் உபயோகிப்பவர்கள் எல்லோருமே சேர்ந்து குற்றம் சொல்லுகிறார்கள். எதிர்க்கட்சிக்காரர்கள் கூறுவது போல காங்கிரஸ் மிராசுதார்களுக்கு எதாவது நன்மை செய்திருந்தால், மிராசுதார்கள்கூட காங்கிரஸை கண்டிக்க வேண்டிய அவசியமில்லை. எங்கள் பகுதியில் சில மிராசுதார்கள் "ஒரு காலத்தில் விவசாயிகள் கம்யூனிஸ்டாக இருந்தார்கள், அவர்கள்கூட நாங்கள் சொல்லுவதை கேட்டார்கள். இப்பொழுது தொழிற்சங்க காங்கிரஸ் சொல்லுவதை விவசாயிகள் கேட்கிறார்கள். கம்யூனிஸ்டே தேவலை போல் இருக்கிறதே" என்று பகிரங்கமாக தெரிவித்திருக்கிறார்கள். என்னை ஒரு கம்யூனிஸ்டு என்று போலீஸ்காரர்களிடம் ரிபோர்டு கொடுத்திருக்கிறார்கள். நாட்டில் விவசாயிகளுடைய கிளர்ச்சியை அடக்குவதற்கு என்னென்ன செய்ய முடியுமோ அவ்வளவு வேலையும் செய்கிறார்கள். அங்கு இருக்கும் நிலத்திலே வேலை செய்கின்ற 4,000, 5,000 ஜனங்கள் அங்கு இருக்கிற நிலைமை காரணமாக கஷ்டப்படுகிறார்கள். அங்கே பரம்பரையாக உழுதுகொண்டிருப்பவர்களை திடீரென்று நிலத்தை விட்டு வெளியேற்றி விடுகிறார்கள். ஜில்லா ஜட்ஜிடம் கேஸ் போட்டால் சப்-கலெக்டரிடம் கொடுக்க வேண்டுமென்ற நிலைமையை மாற்றி, ஹைகோர்ட்டிற்கு அந்த கேஸ்களை தள்ளி விடுகிறார்கள். பிறகு ஹைகோர்ட்டிற்கு சென்று நூற்றுக்கணக்கில் ரூபாய் செலவு செய்து கேஸ்களிலே நாங்கள் வெற்றிபெற வேண்டியிருக்கிறது. இதுபோன்ற விவசாயிகளுக்கு இன்னும் பல தொல்லைகள் இருக்கின்றன. கனம் ரெவின்யூ மந்திரி அவர்கள் இவைகளையெல்லாம் நன்றாக பரிசீலனை செய்து, நல்லதோர் சட்டத்தை சீக்கிரம் கொண்டு வரவேண்டும். நாங்களெல்லாம் இதை மிக்க ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம். மற்றவர்கள் போல நான் பேச விரும்பவில்லை. நான் பகிரங்கமாக பிரசாரம் செய்கிறேன். நில உடமைக்கு உச்சவரம்பு கட்டப்பட வேண்டும், நிலம் உழுபவர்களுக்கு சொந்தமாக்கப்பட வேண்டுமென்று, உழவர்களும் அதிலே ஆர்வப்படுகிறார்கள். புதிய கொள்கையுடன், நல்ல முறையில் இப்பொழுது சீர்திருத்தம் நம்மை நோக்கி வந்து கொண்டிருக்கிறது. எதிர்காலம் ஒளிவீசும் காலமாக அமையும் என்று அவர்கள் எதிர்பார்த்து வோட்டு செய்திருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்திலே, செய்யாமல் விட்டு விட்டால், மீண்டும் மக்கள் என்ன நினைப்பார்கள் என்பதைப் பற்றி யோசிக்கவேண்டும். உள்ள நிலைமையைக் காணவேண்டும். உலகத்திலே, எகிப்து போன்ற நாடுகளிலே புரட்சி ஏற்பட்டு வருவதைக் கவனிக்கவேண்டும். இந்த நாட்டிலே காங்கிரஸ் மீது குறை கூறாமல் இருக்கப் பார்த்துக்கொள்ளவேண்டும். 12-30 p.m.

ஒரு கனம் அங்கத்தினர் சொன்னார்கள் மிராசுதார்கள் உழவர்களைக் கஷ்டப்படுத்துகிறார்கள் என்று. தயவு செய்து அங்கத்தினருக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். இங்கே ஏதோ உழவர்களுக்காகப் பரிந்து பேசுவதுபோல் பேசுகிறீர்களே தவிர, கிராமங்களிலே பெரும் நிலச் சொந்தக்காரர்களை ஆதரித்து அவர்கள் உதவியைக் கோரி நிற்கிறார்கள். ஒருவேளை அது உங்கள் கட்சிக் கொள்கையாக இருக்கலாமோ என்னவோ. . . .

**Sri P. U. SHANMUGAM** : பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார். அங்கத்தினர் பேசும்போது, திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பார்த்து உங்களுக்குச் சொல்லுகிறேன், உங்களுக்குச் சொல்லுகிறேன் என்கிறார்களே அவர் தங்களைப்பார்த்து, சபாநாயகரைப் பார்த்து பேசுவதை விட்டு இப்படிப் பேசுவது ஒழுங்கா ?

[11th September 1958

MR. SPEAKER : அங்கத்தினர் சபாநாயகரைப் பார்த்துத்தான் பேச வேண்டும். ஆனால், பொதுக்கூட்டத்தில் நாலு பக்கமும் பார்த்துப் பேசும் பழக்கத்தால் அப்படிப் பேசுகிறார்கள் போலும். (சிரிப்பு). நீங்கள், சபா நாயகரைப் பார்த்துப் பேசுங்கள்.

SRI P. S. K. LAKSHMIPATHIRAJ : நான் சாதாரணமாக தங்களைப் பார்த்துத்தான் பேசுகிறேன். ஆனால் அங்கத்தினர் அவர்களுக்கு அப்படிப்பட்டதோ என்னவோ. இந்த நிலைமைகளை கனம் கிருஷ்ணசாமி நாயுடு நல்ல பண்போடு பேசினார்கள். நானும் அவ்வாறேதான் பேச வேண்டும் என்று விருப்பம். அந்தக் கட்சிக்காரர்கள் எங்கள் கட்சியைத் தாக்கிப் பேசும்போது, அதற்குப் பதிலாக நாமும் பேச வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியதால் அப்படிப் பேசினேன். டி. எம். கே.-யைச் சேர்ந்தவர்கள் காங்கிரஸ் கட்சியைத் தாக்கிப் பேசும்போது காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த நாங்களும் அவர்களைத் தாக்கிப் பேச வேண்டும் என்று விரும்பினேன்.

இன்று சமுதாயத்தில் ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டு வருகிறது. கடந்த காலத்திலுள்ள முறையை மாற்றி, புது முறையை அமலாக்கும் நேரத்தில் இருக்கிறோம். காங்கிரஸ் கட்சியானது சபையில், நாட்டில், அரசாங்கத்தில் நல்ல பலத்தை அடைந்திருக்கிறது. இந்த சமயத்தில் உழவர்கள் உரிமையைப் பாதுகாக்க துரிதமாக நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். கிராமத்தில் எவ்வளவு நலங்கள் ஏற்பட்டாலும், ஏழைகளின் குடும்ப நிலைமை மோசமாகவே தான் இருக்கிறது. அந்த ஏழை உழவன் ஒரு ஓட்டைக் குடிசை, மண் குடிசை தவிர வேறொன்றையும் அறியவில்லை. இன்னமும் அவர்கள் கேவலமான நிலையில்தான் இருக்கிறார்கள். நாம் சட்ட சபையில் பேசுகிறோம். இங்கே நமக்கு எல்லா வாய்ப்புகளும் இருக்கின்றன. ஆனால் அந்த வோட்டர் மகா ஜனங்கள் அந்த லட்சக்கணக்கான வோட்டர்கள், எவர்கள் தங்கள் வோட்டுகளைக் கொடுத்து நம்மை இங்கே அனுப்பினார்களோ அவர்கள், முன்னேறவில்லை. சட்டம் வரும்போது, எல்லோரும் காங்கிரஸ் கட்சியோடு, சர்க்காரோடு ஒத்துழைத்து உழவர்கள் உரிமைகளை அதிகப் படுத்துவதில், பாடுபட வேண்டும்.

சிலருக்கு ஒரு ஆசை. காங்கிரஸ் சட்ட சபையில் சட்டம் கொண்டு வருகிறார்கள். ஆனால் அவர்கள் மக்களிடையே பிரசாரம் செய்வதில்லை. ஆகவே அவர்கள் தாங்கள் தங்கள் நன்மைக்கு வேண்டிய பிரகாரம் பிரசாரம் செய்யலாம் என்று செய்து வருகிறார்கள். உதாரணமாக, மதுரையில், தி.மு.க. அங்கத்தினர் ஒருவர், சட்ட சபையிலே இருக்கும் காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு தமிழிலே பேசத்தெரியாது என்று சொன்னதாக பத்திரிகையில் பார்த்தேன். சட்ட சபையில் இருக்கும் அங்கத்தினர்களுக்குத் தெரியும் அதில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்று அவர்களுக்குச் சொல்லுவேன். தமிழைக் கற்றுக் கொடுத்தவர்களே நாங்கள். சென்ற காலங்களிலே ஆங்கிலத்திலே எல்லா நடவடிக்கைகளும் நடந்து வந்த காலத்தில், அவர்களை எதிர்த்து, கூட்டங்கள் போட்டு, உரிமைக்காகப் போராடியவர்கள் நாங்கள். அதன் பயன் தான் இன்று என் போன்றவர்கள் இந்த சட்ட சபையில் இடம்பெற பொன்னான சந்தர்ப்பம் ஏற்பட்டது என்று எல்லோரும் அறிவார்கள். நாங்கள் தேசீயக் கவி பாரதியாரின் சந்ததிகள். ஆகவே எங்களை அவர்கள் அப்படிச் சொல்ல வேண்டாம் என்று கூறிக்கொள்ளுகிறேன்.

SRI C. NATARAJA ODAYAR : கனம் அங்கத்தினர் திருத்தத்தின் மீது பேசுகிறாரா, அல்லது திராவிட முன்னேற்றக் கட்சியைத்தாக்கிப் பேசுகிறாரா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : அவர்களுக்குப் பதில் சொல்லிவிட்டு நீங்கள் பேசிக்கொண்டே போகலாம்.

11th September 1958]

Sri P. S. K. LAKSHMIPATHIRAJ : நான் திருத்தத்தின் மீது தான் பேசுகிறேன். எனவே, சபையில் இருக்கும் காங்கிரஸ் அரசாங்கம், துரிதமாகச் சீர் திருத்தங்களைக் கொண்டு வரவேண்டும், தாமதம் எதும் இன்றி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். திடீர், திடீர் என்று சட்டங்களை நிறைவேற்றும் நேரத்தில், உழவர்களுக்கு வேண்டிய நிலச் சீர் திருத்தத்தையும் துரிதமாக அமலாக்க ஏற்பாடு செய்யவேண்டும். சிலர் சொல்லலாம், நிலத்தைப் பங்கீடு செய்தால் தலைக்கு ஒரு ஏக்கர், அல்லது அரை ஏக்கர் தான் வரும் என்று. ஆனாலும், ஒரு சிலர் மாட மாளிகையில் வாழ, மற்றவர் கிழிந்த ஆடைகளைக் கட்டிக்கொண்டு நிற்க இனியும் பொருத்திருக்க முடியாது. ஒருவன் ஒரு வேளை உணவுக்கும், கஞ்சிக்கும் இல்லாமல் தவிக்கும் போது, மற்றவன் ரூ. 25,000 பொருமான கார்களில் போவதைப் பொருக்க முடியாது. இந்த நேரத்திலே இன்னொன்றும் சொல்ல விரும்புகிறேன். கிராமப் புரங்களிலே போனால், எதிர்க் கட்சிக்காரர்கள் பேசுகிறார்கள். ஏதோ பேசுகிறார்களே தவிர சட்டம் சீக்கிரம் வராது என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். கிராமப்புரங்களிலே சென்றால், ஏழை விவசாயிகள் ஏக்கத்தோடு இருக்கிறார்கள். அவர்கள் எவ்வளவோ வசதிகள் வேண்டும் என்று எதிர் பார்த்து நிற்கிறார்கள். ஒரு சிலர் பரம்பரை பரம்பரையாக நிலம் தங்களிடம் இருக்கவேண்டும் என்று பார்க்கிறார்கள். ஆகவே, சீக்கிரம் சீர்திருத்தத்தைக் கொண்டு வந்து நிலம் எல்லோருக்கும் இருக்கும்படி செய்ய வேண்டும்.

Sri M. JAGANNATHAN : I am afraid, the hon. Member is taking his fullfill thereby exceeding the limit fixed for him. May I know from the Chair whether any time limit has been fixed for the hon. Member or whether the hon. Member can speak for any length of time?

Mr. SPEAKER : To-day is a day allotted for non-official business. So I did not fix any time limit for hon. Members so that they might have their complete and satisfactory say. Inasmuch as no time limit had been fixed for other hon. Members who spoke earlier, I do not fix any time limit for the hon. Member. Sri Lakshmipathi Raj. He may continue his speech. நீங்கள் சீக்கிரம் முடித்தால், இன்னும் 4, 5 பேர்கள்கூடப் பேசலாம்.

Sri P. S. K. LAKSHMIPATHIRAJ : எனக்கு ஒரு ஆசை இருக்கிறது. நிலம் அதிகம் இருப்பவர்களுக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டும் என்று கோருகிறோம். அதேபோல், சிலபேர் பணத்தைச் சம்பாதித்து, பெரிய பெரிய வீடுகளைக் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். நிலத்திற்கு 15, 20 ஏக்கர் என்று வரம்பு கட்ட வேண்டும் என்று சொல்லுகிறோம். அதேபோல் இந்த வீடுகள் வைத்திருப்பவர்களையும் விட்டு வைக்கக் கூடாது. இவர்கள் பல வீடுகளை வைத்திருப்பதால், பல ஆயிரக்கணக்கான ரூபாய்கள் வாடகையாக வருகிறது. சென்னை நகரத்தில் பலர் பல வீடுகளைச் கட்டிக் கொண்டு, ஸோபாவில் சாய்ந்து கொண்டு இருக்கிறார்கள். சினிமாவில் பல லட்சக்கணக்கான ரூபாய் வருவதால், பலர் புது மனைகளைக் கட்டிக் கொண்டும், மீண்டும், மீண்டும் மாடிக் கட்டிடங்களைக் கட்டிக்கொண்டும் இருக்கிறார்கள். இதையும் கட்டுப்பாடு செய்து ஒரு சட்டம் கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, பலபேர் பேச வேண்டியிருப்பதால், என் உரையை இத்தோடு முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri V. SUBBIAH : சபாநாயகர் அவர்களே, இன்று ஸ்ரீ கோதண்டராமன் கொண்டு வந்திருக்கும் தீர்மானத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச திரும்புகிறேன். கட்சி மாறுபாடற்ற ஒரு சம தர்ம சமுதாயத்தை விரும்பும் நாம், நில உடமைக்கு ஒரு வரம்பு கட்ட

[Sri V. Subbiah] [11th September 1958

வேண்டும் என்பதை இந்த சட்ட மன்றத்திலே, முழு மனதோடு ஆதரிக்கிறேன். இந்த நாட்டிலுள்ள நிலங்களின் தரங்கள் எப்படியிருக்கின்றன, விவசாயிகள் எப்படி இருக்கிறார்கள் என்று பார்த்தால், அவர்கள் பல தரப்பட்டவர்கள் என்பது தெரியும். எங்கள் பகுதியை எடுத்துக்கொண்டால், அங்கே பெரிய பாசன வசதி உள்ளவர்களும் இருக்கிறார்கள்; சிறு சிறு பாசன வசதியுள்ளவர்களும் இருக்கிறார்கள். மழையையே எதிர் பார்த்து வானம் பார்த்த பூமியை நம்பியவர்களும் இருக்கிறார்கள்.

(Deputy Speaker in the Chair.)

அந்தப் பகுதியில் ஒரு ஏக்கரா 50 ரூபாயாக இருக்கிறது. அதேயிடத்தில் 7 ஆயிரம் ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள நிலங்களும் அமைந்திருக்கிறது. இவ்வளவு ஏற்றத்தாழ்வு உள்ள இடத்திலே எப்படி நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்டுவது என்பதையும் அமைச்சர் அவர்கள் நன்றாக யோசிக்க வேண்டும்.

அடுத்தபடியாக இந்த நாட்டின் பொருளாதார அமைப்புப் பற்றியும் நன்றாக யோசிக்கவேண்டும். மிட்டாக்களும், ஜமீன்களும் ஒழிந்துபோன பிற்பாடு எவ்வளவு பெரிய மாறுதல்களை எல்லாம் இந்த நாடு அடைந்திருக்கிறது என்பதை மனதில் வைத்துக் கொண்டு பார்க்கவேண்டும். பெரிய மிராசுதாரர்கள் நடுத்தர விவசாயிகள், அவர்களுக்குகீழ் உள்ள சாகுபடியாளர்கள் இவர்களுடைய நிலைமைகளை எல்லாம் மனதில் வைத்துக் கொண்டு தான் இதைப் பரிசீலனை செய்யவேண்டும். இந்தப்பொறுப்பு அரசாங்கத்திற்கு இருக்கிறது.

அதுமட்டுமல்ல, நமது வினோபாஜி அவர்கள் நில விநியோகத்தை ஆரம்பித்திருக்கிறார்கள். அதே நேரத்தில் சம்பத் தானம் என்ற இயக்கத்தையும் ஆரம்பித்திருக்கிறார்கள். வெறும் நிலத்தை மட்டும் பிரித்துக் கொடுப்பதால் மட்டும் விவசாயிகளிடையே பொருளாதார முன்னேற்றம் ஏற்படாது. ஆகவே இந்த நாட்டிலுள்ள நிலத்தைப் பகிர்ந்து கொடுக்கும் காலத்தில் சிறு சிறு நிலங்களாகப் பிரித்து விடுவதில் பயன் இல்லை. கூட்டுறவு முறையில் அவர்களுக்குப் பொருளாதார வசதியை அளிக்கவும் ஏற்பாடு செய்தால் தான் நல்ல நிலைமையை உண்டாக்க முடியும் என்பதை நமக்கு வினோபாஜி அவர்கள் நன்றாக் காட்டியிருக்கிறார்கள். பல பல துண்டுகளாக நிலத்தைப் பிரிப்பதைக் காட்டிலும் பொருளாதார வகையில் விவசாயிகளுக்கு எப்படி உதவி செய்வது என்பதைப் பற்றி இவர்கள் நன்கு ஆராய்ந்து பார்த்தல் நலம் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நிலப் பிரபுக்கள் மாத்திரம் தான் இந்த நாட்டில் இருப்பதாக எண்ணிக்கொண்டுவிடக்கூடாது. மில் முதலாளிகள், சுரங்கம், கப்பல் போக்குவரத்து முதலாளிகளும் பஸ் முதலாளிகளும் இருக்கிறார்கள். பாங்கர்கள் இருக்கிறார்கள். வணிகத் துறையில் பல கோடி ரூபாய்களையுடைய தனவந்தர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களுடைய வருமானத்திற்கு எல்லாம் வரம்பு கட்டாமல் நிலவுடமைக்கு மட்டும் வரம்பு கட்ட வேண்டுமென்பதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை. ஏககாலத்தில் சமதர்ம முறையில் இந்நாட்டின் பொருளாதார அமைப்பை வகுக்க வேண்டுமென்று நடவடிக்கை எடுத்தால் அதை எல்லோரும் வரவேற்பார்கள். அதற்கும் ஓர் திட்டம் வேண்டும். ஆனால் ஸ்ரீ கோதண்டராமன் தீர்மானத்தை ஆதரிக்கும் முறையில் இவ்வளவு விஷயங்களையும் பூர்ணமாக மனதில் வைத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதைக் கொண்டு வருவதற்குக் காலம் என்ன எப்போது கொண்டு வரவேண்டும் எப்படிக்கொண்டு வந்தால் அதனால் விவசாயிகள் நல்ல பலனை அடைவார்கள் என்பதையெல்லாம் நன்றாகப் பரிசீலனை செய்து இதைக் கொண்டுவர வேண்டுமென்பதாக நான் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

*SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே இன்றைக்கு கனம் கோதண்டராமன் அவர்கள் நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்டவேண்டும் என்பதற்கு ஒரு தீர்மானம் கொண்டு வந்திருக்கிறார்கள். அந்தத் தீர்மானத்தின் இரண்டாவது பாகம் என்ன

11th September 1958] [Srimathi T. N. Anandanayaki]

வென்றால் அந்த உச்ச வரம்பு எந்த அளவுக்கு இருக்கவேண்டும் என்பது என்றும் சொல்லியிருக்கிறார்கள். நிலமில்லாதவனுக்கு எந்த **"For the distribution of excess lands which are in excess of the ceilings fixed to the tenants and landless poor."** அளவுக்கு உச்சவரம்பு கட்டியிருக்கிறோமோ அந்த அளவுக்கு நிர்ணயிக்க தீர்மானம் கொடுத்திருக்கிறார்கள். எனக்கு முன்னால் பேசிய அங்கத்தினர்கள் எல்லாம் நிலவுடமைக்கு வரம்பு கட்டுவது அவசியம் என்பதை மறுக்க வில்லை. ஆனால் அதைக் கொண்டுவருவதற்கு இது ஏற்ற சமயமா ? அதைக் கொண்டுவந்தால் நல்ல முறையில் விவசாயிகளுக்குப் பயன் தரக் கூடிய சூழ்நிலையை உண்டாக்கியிருக்கிறோமா ? அப்படி எல்லாம் இல்லாத இந்தச் சமயத்தில் விவசாயிகளுடைய மத்தியில் குழப்பத்தை உண்டுபண்ணத்தக்க வகையில் அடிக்கடி ஒவ்வொரு சட்டசபைக் கூட்டத்திலும் நிலவுடமைக்கு உச்சவரம்பு கட்டவேண்டும் என்பதாகச் சொல்வதானது நன்மையைக் காட்டிலும் அதிகத் தீமையையே விளைவிக்கும். நன்மை ஒன்றும் ஏற்படப்போவதில்லை என்று திட்டவட்டமாகக் கூறினார்கள். பயன் இல்லாதது மாத்திரம் அல்ல. அடிக்கடி இப்படிப்பட்ட குழப்பத்தை உண்டு பண்ணிக்கொண்டே போவதால் உற்பத்தி எப்படி பாதிக்கப் பட்டிருக்கிறது என்பதை நான் சொல்ல ஆசைப்படுகிறேன்.

நிலச்சுவாந்தார்கள் என்ன செய்கிறார்கள் ? இன்றோ நாளைக்கோ தம்மிடமுள்ள நிலத்தைப் பிடுங்கிக் கொண்டு விடப்போகிறார்கள். எதற்காக நாம் நிலத்தில் பணத்தைக் கொட்டிப் பாடுபடவேண்டும் என்பதாக எண்ணி சாகுபடியில் அக்கறை காட்டாது போய்விடுகிறார்கள். உழுகிறவன் என்ன நினைக்கிறான். இன்னும் இரண்டு வருஷத்தில் இந்த நிலம் நமக்கே வந்தாலும் வந்துவிடும். இப்போது மிராசுதார்களுக்குத்தானே சொந்தம். நாம் எதற்காகப் பாடுபட்டு உழைக்க வேண்டும், நம் கைக் வந்த பின்னர் உழைத்துக் கொண்டால் போகிறது என்று சாகுபடியில் அக்கறை காட்டாது போய்விடுகிறான். இந்த நிலைமையில் நிலம் என்னகதி ஆகிறதென்றால் நிலச்சுவாந்தாருக்கும், உழவனுக்கும் இடையில் நிலம் கவனிப்பாரற்று பாழ்பட்டுக் கொண்டிருக்கிறது. இதனால் அதிக அளவில் உற்பத்தி தான் பாதிக்கப்படுகிறது. இது எப்படி இருக்கிறதென்றால் " **"The threat of bringing in land ceiling is worse than bringing in land ceiling itself** நிலவுடமை கொண்டு வருவதால் ஏற்படக்கூடிய குழப்பத்தைக் காட்டிலும், " நில வுடமைக்கு உச்சவரம்பு கொண்டுவரவேண்டும். கொண்டுவரும்படி செய்வோம். எங்கள் கைக்கு ஆட்சி வந்தால் முதல் காரியம் அதுதான். இந்தச் சர்க்கார் விவசாயிகளின் நல்வாழ்வில் அக்கறை இருந்தால் இதைதான் முதலில் கொண்டுவரவேண்டும் " என்பதாக நாட்டிலே பூசலை அடிக்கடி எழுப்பிக் கொண்டிருப்பது, அதனால் உண்டாகிற குழப்பம், அமைதி யின்மை, எதிர்காலத்தைப் பற்றிய நிம்மதியற்ற கொள்கை இவை விளைவிக்கிற துன்பம் மிக அதிகமாக இருக்கிறதென்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். கொஹாட்டி காங்கிரஸ் பற்றிச் சொன்னார்கள். அது ஒன்றும் கெடுத்துவிடவில்லை. சுதந்திரம் பெற்ற பின்னர் காங்கிரஸ் கட்சி தான் நிலச்சீர்திருத்தம் பற்றி நன்கு திட்டமிட்டுப் படிப் படியாக ஆராய்ச்சி செய்து கொண்டே வந்திருக்கிறது. ஜே. ஸி. குமரப்பாவை தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டியைப் போட்டு ஆராய்ச்சி நடத்தினோம். இந்திய நாட்டிலுள்ள விவசாய முறையைப் பற்றியெல்லாம் நன்கு ஆராய்ச்சி செய்து ஸ்ரீ மாளவியா அவர்கள் ஒரு புத்தகமே எழுதியிருக் கிறார்கள். மிக அழகான புஸ்தகம். அதைப்படித்துப் பார்த்திருந்தால் இப்படிப்பட்ட ஒரு தீர்மானம் இந்தச் சட்டசபையில் கொண்டு வந்திருக்கவே மாட்டார்கள். இந்த ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றுவதன் மூலம் எப்படிப்பட்ட துன்பத்தை நீக்கிவிடலாம் என்று நினைக்கிறோமோ அது சாத்தியமாகுமா ? அதற்கேற்ற சூழ்நிலை நாட்டில் நிலவுகிறதா ? அதற்கேற்ற அமைதியோ, வசதியோ இருக்கிறதா என்றால் அது கிடையாது. அந்தத் தீர்மானத்தினால் மேலும் இப்போது இருக்கிற குழப்பம் தான் அதிகப்படுமே தவிர வேறு ஒன்றும் கிடையாது.

[Srimathi T. N. Anandanayaki] [11th September 1958

நம் மாகாணத்தைப் பொறுத்த மட்டும் நிலச்சீர்திருத்தம் படிப்படியாகக் கொண்டுவரப்படுகிறது. இதை இல்லையென்று யாரும் மறுக்க முடியாது. இந்தச் சட்டசபை ஒன்றுமே கொண்டுவரவில்லை என்று சொல்பவர்கள் ஒருகால் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தைப் படித்துப் பார்த்திருக்க மாட்டார்கள் பார் ரெண்ட் பில்லின் நன்மைகள் என்ன என்பதைப் பற்றி ஆராய்ந்திருக்கமாட்டார். அல்லது ப்ரொடெக்ஷன் ஆப் டெனன்ஸி பில்லைப் படிப்பதற்கு நேரம் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆகவே அப்படிப்பட்ட கருத்தைத் தெரிவித்து விட்டார் என்று சொல்லியிருக்கலாமே தவிர நிலச்சீர்திருத்தச் சட்டத்தில் நம் மாகாணம் பின் தங்கி விட்டது என்று சொல்வதானது நம்மை நாமே இழிவுபடுத்திக் கொள்ளும் இழிச்சொல்லாகத் தான். விளையும். வேறு ஒன்றும் கிடையாது. நிலச்சீர் திருத்தச் சட்டத்தில் இந்தியாவில் உள்ள எந்த மாகாணமானது நன்றாக ஆராய்ந்து ஒழுங்காக முன்னேறிக் கொண்டிருக்கிற தென்றால் அது நம் சென்னை மாகாணம் தான். இதை யாரும் மறுக்க முடியாது. விவசாயிகளைப் பொறுத்த வரையில் நிலச்சீர்திருத்தம் கொண்டு வருவது என்று சொன்னால் அடிப்படையில் அவர்களுக்கு "பிக்ஸிடி ஆப் டென்யூர்" வேண்டும் அடுத்தபடியாக உழைப்புக்கு ஏற்ற கூலியைப் பெறுவதற்கு "பார் ரெண்ட் ஆக்ட்" வேண்டும்.

திடீர் திடீர் என்று குத்தகையை மாற்றி வைக்கக்கூடிய நிலைமை நீடித்தால் விவசாயிகளுக்கு அந்த நிலத்தின் மீது பாடுபடுவதற்கு ஒரு உத்தரவாதம் இல்லாமல் போய்விடுகிறது. குத்தகையை ஒழுங்காக அளந்து கொண்டிருக்கும் வரையில் தன்னை நிலத்திலிருந்து அப்புறப்படுத்த முடியாது என்கிற உத்தரவாதம் விவசாயிகளுக்குக் கொடுக்கப்பட்டால் தான் அவன் அதிக உற்சாகமாகச் சாகுபடியில் ஈடுபட முடியும். இல்லாவிட்டால் அவனுக்கு நிலத்தின் மீது ஆசை இருக்காது. இந்த அடிப் படையான கருத்தை நன்றாக உணர்ந்து கொண்டு "நாம் பிக்ஸிடி ஆப் டென்யூர்" கொடுத்திருக்கிறோம். இன்றைய தினம் எந்த நிலச்சுவாந்தாரும் தம் நிலத்தில் பாடுபடுகிறவனை குத்தகை ஒழுங்காக அளந்து கொண்டிருக்கும் வரையில் தாம் நினைத்தபடி வெளியேற்ற முடியாது. இதைத்தான் நிலச்சீர் திருத்தத்தின் முதல் படி என்று எல்லோரும் ஏற்றுக்கொண்டு இருக்கிறார்கள். இதை நமது ராஜ்யத்தில் செய்திருப்பதற்கு நாம் பெருமைப்படவேண்டும். அடுத்தபடியாக அவனது உழைப்புக்கு ஏற்ற கூலி கிடைக்கவேண்டும். அதையும் உணர்ந்து நாம் தான் "பார் ரெண்ட் பில்" கொண்டு வந்து நிறைவேற்றியிருக்கிறோம். இப்படியிருக்க நாம் ஒன்றுமே செய்ய வில்லை யென்று கனம் அங்கத்தினர் ஒருவர் கூறினார் என்றால் ஏதோ தெரியாமல் கூறிவிட்டார் என்கிற முறையில் இந்தச் சபை அவரை மன்னிப்பதைத் தவிர அவர் மீது எந்த நடவடிக்கையும் எடுத்துக்கொள்வதற்கில்லை.

பேர் ரெண்ட் ஆக்ட்டை எடுத்துக் கொள்வோம். முதலில் நாம் நிலச்சுவாந்தாருக்கு விளைவில் 60, 40% என்றும் கொண்டு வந்திருந் தோம். எதிர்க்கட்சிக்காரர்கள் 50 %, 50% ஆகவாவது கொண்டுவர வேண்டும் என்றார்கள். உழைப்பவனுக்குத் தக்க கூலி கிடைக்க வேண்டும் என்பதை நன்கு உணர்ந்த நமது ரெவின்யூ அமைச்சர் அவர் கள் மிகத் தீவிரமாக உழைப்பவனுக்கு விளைவில் 60%ம், நிலச்சுவாந் தாருக்கு 40 % என்றும் சட்டம் கொண்டு வந்து மாற்றினார். இது புரட்சிகரமான நிலச்சீர்திருத்தத்தின் ஒரு பகுதி இல்லையா என்பதைக் கனம் அங்கத்தினர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். 60, 40 என்று இங்கே காங்கிரஸ் சர்க்கார் கொண்டு வந்தபோது நிலச்சுவாந்தார்கள் எல் லாம் கும்பகோணத்தில் ஒரு மகாநாடு கூட்டி அதை வன்மையாக எதிர்த்தார்கள். சாகுபடியாளருக்கு 60 % கொடுக்கக் கூடாது என்று எதிர்த்தார்கள். அந்த மகாநாட்டில் கலந்து கொண்ட ஒருசில கட்சிகள் என்ன என்ன என்று பாருங்கள். உழுகிறவனுக்கு 60% கொடுக்கக் கூடாது என்பதற்காகக் கூடித் தீர்மானம் செய்த அந்த விவசாயிகள் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தவர் எதிர்க்கட்சியைச் சார்ந்த ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்கள். அந்த மகாநாட்டுக்குப் பொருளாளராக இருந்து மிகத்

தீவிரமாக வேலை புரிந்தவர் கரூர் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு ஓர் தூண் போன்று இருக்கக் கூடிய குழந்தைவேலு என்பவர். அந்த மகா நாட்டின் வெற்றிக்கு மிகவும் துணையாக இருந்தவர் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த நல்லசிவம் என்பவர். இதை யாரும் மறுக்க முடியாது. இந்த மகாநாடு கும்பகோணத்தில் நடந்தது. (குறுக்கீடு). உங்கள் கும்பகோணத்தில்தான் இந்தக் கும்பகோணத்தைச் செய்தார்கள்.

* **Sri S. M. ANNAMALAI** : கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு ஒழுங்குப் பிரச்னை. கனம் அங்கத்தினர் " உங்கள் கும்பகோணத்தில் " என்று சொல்கிறார். அவ்வாறு இந்த சபையில் சொல்லலாமா ? 12-50 p.m.

**DEPUTY SPEAKER** : I hope the hon. Member will not repeat the word.

* **Srimathi T. N. ANANDANAYAKI** : உங்கள் கும்பகோணம் என்று நான் சொல்லிவிட்டேன் என்பதால், கும்பகோணம் உங்களது என்று நீங்கள் கருதுவீர்களானால், " கும்பகோணர்கள் " உங்களைச் சும்மா விட மாட்டார்கள். (சிரிப்பு) கும்பகோணம் என்ற வார்த்தை **House of Commons**-லேயே சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாறு, விவசாயிகள் மகாநாட்டிலே, எதிர்க் கட்சியைச் சார்ந்து மிராசுதார்கள், விவசாயிகளுக்கு சர்க்கார் 60 சதவிகித வாரம் கொடுத்து விட்டார்கள் என்று எங்களை இடித்துக்காட்டினார்களே தவிர, விவசாயிகளுக்குப் பரிந்துபேசவில்லை. விவசாயிகளுக்கு சர்க்கார் 60 சதவிகித வாரம் கொடுத்ததை, எதிர்க் கட்சியைச் சார்ந்த மிராசுதார்கள்தான் எதிர்த்திருக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்டுவதற்காகத்தான் அவர்களுடைய பெயர்களைக் குறிப்பிட்டேன். சர்க்கார் துணிச்சலாக விவசாயிகளுக்கு 60 சதவிகித வாரம் கொடுத்ததை எதிர்க் கட்சிக்காரர்கள் வரவேற்றிருக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை ; ஆனால் அதை அவர்கள் வாழ்த்தியாவது இருக்கவேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன்.

நிலச் சீர்திருத்தத்தைக் கொண்டுவரும் விஷயத்தில், " பிக்ஸிடி ஆப் டெனுயூர் ", நியாய வாரம் ஆகிய இரண்டிற்கும் வகை செய்த பிறகு, இப்போது நில உடைமைக்கு வரம்பு கட்டும் சட்டத்தைக் கொண்டுவருவதற்காக, ஒரு கமிட்டியைப் போட்டு ஆலோசனைகள் செய்துகொண்டிருக்கிறோம். இந்த ராஜ்யத்தில் நில உடைமைக்கு வரம்பு கட்டுவது மிகவும் கஷ்டம், ஏனென்றால், அதற்குத் தகுந்தவாறு இங்கே நிலங்கள் இல்லை. நில உடைமையை எடுத்துக்கொண்டால், சாதாரணமாக அறிஞர்கள் " ஹோல்டிங்ஸை " மூன்று விதமாகப் பிரிக்கிறார்கள். அதாவது, நில உடைமையை " பேஸிக் ஹோல்டிங், இகனாமிக் ஹோல்டிங், ஆப்டிமம் ஹோல்டிங் " என்று மூன்று வகையாகப் பிரிக்கிறார்கள். ஒரு சாதாரண குடும்பத்தில் அத்தனை பேரும் நிலத்தில் உழைத்தாலும் கிடைக்கும் வருமானம் அக்குடும்பத்திற்குப் போதாததாக இருக்கக்கூடிய அளவிற்கு அக்குடும்பத்தின் நிலஉடைமை அளவு இருந்தால், அந்த அளவு நிலம் " பேஸிக் ஹோல்டிங் " எனப்படுகிறது. அம்மாதிரி, " பேஸிக் ஹோல்டிங் " நில உடைமையாளர்கள் இந்நாட்டில் நிறைய இருக்கிறார்கள் ; அவர்கள் சிறு நிலச்சுவாந்தார்கள் ; ஒரு ஏக்கர் அல்லது இரண்டு ஏக்கர் நிலம் வைத்துக்கொண்டு, மாற்றுத் துணிக்குக் கூட கதியில்லாத நில உடையாளர்கள் இந்நாட்டில் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களுடைய பிரச்னைதான் முதலில் கவனிக்கப்பட வேண்டிய பிரச்னை. இரண்டாவது, " இகனாமிக் ஹோல்டிங் ". பிள்ளை-குட்டிகள் உட்பட 4-5 அங்கத்தினர்கள் கொண்ட குடும்பத்தில் அத்தனை பேரும் நிலத்தில் உழைத்தால் அந்நிலத்தின் மூலம் வரும் வருமானம் அவர்களுடைய மானத்தைக் காப்பாற்றக்கூடிய அளவிற்கு அக்குடும்பத்தின் நில உடைமை அளவு இருக்குமானால், அந்த அளவு நிலம் " இகனாமிக் ஹோல்டிங் " எனப்படும். மூன்றுவது, " ஆப்டிமம் ஹோல்டிங் ". ஒரு நபருக்கு அதிகபட்சமாக இவ்வளவு நிலம் தான் இருக்கலாம் என்று அறிஞர்கள் நிர்ணயித்திருக்

[Srimathi T. N. Anandanayaki] [11th September 1958

இருர்கள். ஒரு நபர் அதிகப்பட்சமாக வைத்துக்கொள்ளக்கூடிய நிலம்தான் "ஆப்டிமம் ஹோல்டிங்". "ஆப்டிமம் ஹோல்டிங்" "இகனமிக் ஹோல்டிங்கைப்" போல் மூன்று மடங்காக இருக்க வேண்டும் என்று அறிஞர்கள் நிர்ணயித்திருக்கிருர்கள். நான் அறிஞர்கள் என்று சொல்லும்போது யாரும் தவருகப் புரிந்துகொள்ள வேண்டாம். நான் பொருளாதார அறிஞர்களைக் குறிப்பிடுகிறேன்.

இப்போது நம் ராஜ்யத்தில் நில உடைமைக்கு வரம்பு நிர்ணயிக்கும் சட்டம் கொண்டு வரவேண்டுமானல் நம் ராஜ்யத்திற்கேற்ற "இகனமிக் ஹோல்டிங்கை"யும் "ஆப்டிமம் ஹோல்டிங்"-கையும் நிர்ணயிக்க வேண்டும். நமது மாநிலத்தில் சராசரியாக ஒவ்வொரு விவசாயக் குடும்பத்திலும் 6 பிள்ளைகளாவது இருப்பார்கள். அதையும், நமது ராஜ்ய நிலங்களின் வளத்தையும் கணக்கிலெடுத்துக்கொண்டு, பொருளாதார அறிஞர்கள் குறிப்பிட்டுள்ள முறையில் நமது ராஜ்யத்திற்கேற்ற "இகனமிக் ஹோல்டிங்"-கை நிர்ணயிக்க வேண்டும். அதற்குப் பிறகு "ஆப்டிமம் ஹோல்டிங்"-கை நிர்ணயித்து அதை உச்சவரம்பாக ஆக்கவேண்டும். இதை யெல்லாம் கவனிக்கும்போது, இந்த அம்சங்கள் கொண்டிராத இந்தத் தீர்மானத்திற்கு அர்த்தமே இல்லாமல் போகிறது. நிலமில்லாத ஏழைகளுக்கு நிலங்களைப் பகிர்ந்து கொடுக்கும் போது ஒவ்வொருவருக்கும் 5 ஏக்கர் கொடுக்கலாம் என்றும் 5 ஏக்கர் நிலத்திலிருந்து வருடத்திற்கு 5,000—6,000 ரூபாய் வருமானம் கிடைக்கும் என்றும் சொல்லப்படுகிறது. இது தவருன மதிப்பீடு. வண்டல் மண் உள்ள தஞ்சாவூரில்கூட ஏக்கருக்கு 300 ரூபாய் தேருவது கஷ்டம்; 5 ஏக்கருக்கு 1,500 ரூபாய், 2,000 ரூபாய் கிடைப்பது கஷ்டம். மேலும் நம் நாட்டில் விவசாயிக்கு வருஷத்திற்கு எவ்வளவு ரூபாய் நில வருமானம் கிடைக்கும் என்று நிச்சயமாகச் சொல்லமுடியாது. **Agriculture in India depends on the vagaries of nature** இந்த நாட்டில் விவசாயிகள் பருவமழையை நம்பித்தான் பயிர் செய்கிருர்கள். பருவமழை தவறிவிட்டால், இந்த ராஜ்யத்தில் விவசாய உற்பத்தி கெட்டுவிடும். இந்த நாட்டிலுள்ள எந்த ஒரு விவசாயிக்கும் "இந்த வருஷம் இவ்வளவு மகசூல் கிடைத்து இவ்வளவு நில வருமானம் கிடைக்கும்" என்று எந்த நிபுணராலும் சரிவர முன்கூட்டி அனுமானிக்க முடியாது மனித சக்திக்கு அப்பாற்பட்ட சக்தியுடைய மனிதனுலும் அதை அனுமானிக்க முடியாது. சில சமயங்களில் உழவனுக்கு, அவன் செலவழித்த பணம்கூட திரும்பிவராது. ஆந்திராவில் 5 ஏக்கருக்கு 600 ரூபாய் வருட வருமானம் வருகிறதென்றும், ராஜஸ்தானத்தில் வருடத்திற்கு 5 ஏக்கருக்கு 3,600 ரூபாய் வருட வருமானம் வருகிறதென்றும் சொல்கிருர்கள் என்பதால், இங்கே அதைவிட கொஞ்சம் அதிகமாகவே நிர்ணயிப்போம் என்று அதிகமாக நிர்ணயித்துவிட்டால் எல்லா ஆண்டிலும் இங்கே அவ்வளவு வருமானம் வருமா? ஒரு ஆண்டில் அவ்வளவு விளையலாம். ஆனல் அடுத்த ஆண்டில் அப்படி விளையாவிட்டால் விவசாயிகளுக்கு அரசாங்கம் உதவிசெய்யுமா? ஒரு ஆண்டில் மகசூல் சாவியாகப் போய்விட்டால் என்ன செய்வது? அப்படிப்பட்ட காலங்களில் விவசாயிகளுக்கு பண உதவி செய்வதற்காக ஸ்ரீ கோதண்டராமன் நிதி திரட்டி வைத்திருக்கிருரா? அவ்வாறு நிதி திரட்டி வைத்துக்கொண்டு இந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ருல், இதை நாம் உடனடியாக ஏற்றுக் கொள்ளலாம். நிலவுடைமைக்கு வரம்பு கட்டும் போது, விவசாயிகளின் வருமானத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். நம் மாநிலத்தில் 14 மில்லியன் ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவருவதற்காக அதிகப்பட்சமான நிலங்களில் பயிர் செய்வதாக இருந்தாலும், 3 மில்லியன் ஏக்கர் நிலங்கள்தான் "கல்டிவபில் லாண்ட்ஸ்" என்று தெரிவிக்கப் பட்டிருக்கிறது. குடியானவர்களுக்குக் கிணறுகள் வெட்டுவதற்குக் கடன்களும், பம்பு செட்டுகளுக்குச் சலுகைகளும், மற்றெல்லாவிதச் சலுகைகளும் கொடுத்தாலும் மொத்த நிலங்களில் 32 சதவிகித நிலங்களுக்கு மேல் பூரண நீர்ப்பாசன வசதி கொடுக்கமுடியவில்லை. ஆகவே மொத்த நிலங்களில் 3/4 பங்கு நிலங்கள் வானம்பார்த்த பூமிகளாக இருக்கின்றன.

11th September 1958] [Srimathi T. N. Anandanayaki]

மேலும், மண்ணின் தரத்தைப் பொறுத்துத்தான் நிலவளம் இருக்கிறது.

நம் ராஜ்யத்திலுள்ள மண்களை "ரெட் ஸாயில்" (செம்மண்), "அல்யூவியல் ஸாயில்" (வண்டல் மண்), Blacksoil, laterite soil என்று நான்கு வகையாக பிரிக்கலாம். கறுப்பு மண்ணில் (blacksoil) பருத்தி, புகையிலை முதலியன விளையும். இது ராமநாதபுரம் ஜில்லாவில் இருக்கிறது. வண்டல் மண் தஞ்சாவூர் ஜில்லாவிலும் வேறு சில ஜில்லாக்களிலும் இருக்கிறது. மண் நம் ராஜ்யத்தில் ரொம்பக் குறைவு. நில வருமானம் மண் வளத்தையும் மழையையும் நீர்ப்பாசன வசதியையும் பொறுத்திருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லாவில் ஆற்றுப் பாசனம் இருப்பதால் மழை இல்லாவிட்டால் விளைச்சல் அதிகம் பாதிக்கப்படாது, மழை பெய்வதாலும் அவ்வளவு அதிகமான அனுகூலம் இருந்துவிடாது. ஆனால் ராமநாதபுரம் ஜில்லா மழையை நம்பியிருக்கிறது. அது அப்படியிருந்தாலும், அங்கே உரிய காலங்களில் கொஞ்சம் மழை பெய்துவிட்டாலும் அந்த வருஷத்தில் தஞ்சை ஜில்லாவில் கிடைக்கும் வருமானத்தைவிட அதிக வருமானம் கிடைக்கும். ஏனென்றால், ராமநாதபுரத்தில் அங்கேயுள்ள கறுப்பு மண்ணிற்கேற்றவாறு பருத்தி, புகையிலை, கருணைக்கிழங்கு முதலியவை பயிரிடப்படுகின்றன. அங்கே அவை நன்கு விளையும் வருஷங்களில் ஏக்கருக்கு வருஷத்திற்கு 2,000 ரூபாய்கூட வருமானம் கிடைக்கும். அவ்வளவு வருமானம் தஞ்சாவூர் ஜில்லாவில்கூட கிடைக்காது. ஆகவே ராமநாதபுரம் ஜில்லாவின் அந்தப் பயிர்களுக்கு ஒரு தடவை மழை பெய்துவிட்டாலும் போதும். மற்ற ஜில்லாக்களில் அப்படி இல்லை. தஞ்சாவூரில் இருக்கும் மண் அடிக்கடி உபயோகப்படுத்தப்படுகிறது. ஆனால் ராமநாதபுரத்தில் இருக்கும் கருமண் அடிக்கடி உபயோகப்படுத்தப்படாததால் ஒருதரம் மழை பெய்தாலும், கருணைக்கிழங்கு, பருத்தி, புகையிலை போன்ற பயிர்கள் நல்ல மகசூலைக் கொடுக்கிறது. ஆகவே, ஒரு விவசாயின் வருமானத்தை நிர்ணயிக்கும்போது நிலத்தின் மண்ணின் வளத்தையும் கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டும். விவசாயின் வருமானத்தை நிர்ணயிக்கும்போது, விவசாயத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தை மட்டும் கணக்கில் எடுத்துக்கொள்வதா அல்லது "அதர் ரிஸோர்ஸை" யும் கணக்கில் எடுத்துக் கொள்வதா என்ற குழப்பம் இருக்கிறது. நில உடைமைக்கு வரம்பு கட்டும்போது, விவசாயின் வருமானத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆகவே பல விஷயங்களையும் கவனித்துத்தான் நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டியிருக்கிறது. நிலம் இருக்கும் பூகோளயிடம் (ஜ்யொக்ராபிகல் ப்ளேஸ்), அங்கே பெய்யும் மழை, அங்கேயுள்ள வெப்ப தட்ப நிலை, அந்த நிலத்தின் மண்ணின் ரகம் ஆகிய நான்கையும் எடை போட்டுப் பார்த்துத்தான் நிலத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தை நிர்ணயிக்க முடியும். "ஏழை விவசாயிகளுக்கு 5 ஏக்கர் நிலம் கொடுத்து விடுங்கள்" என்று சொல்லப்படுகிறதே என்று அவ்வாறு நிலங்களைப் பங்கீடு செய்தால், ராமநாதபுரம் போன்ற ஜில்லாக்களில் ஏழைகளாக இருக்கும் உழவர்கள் ஏழைகளாகவே இருந்துகொண்டிருப்பார்கள். கேரளத்தில் உள்ள கம்யூனிஸ்டு சர்க்கார் அங்கே நிலச் சீர்திருத்தம் கொண்டுவந்து விட்டார்கள் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோதண்டராமன் அவரது கட்சியைச் சார்ந்த சர்க்காரைப் பற்றிப் பெருமையாகக் கூறிக்கொண்டார்கள். அவசர அவசரமாக நிலச்சீர்த்திருத்தத்தை கேரளத்தில் கொண்டுவந்திருப்பதால் ஏற்பட்டிருக்கும் குழப்பம் அவர்களுக்குத் தான் தெரியுமே தவிர இங்கே இருப்பவர்களுக்குத் தெரியாது. அங்கே நில உடைமை வரம்பு சரியாக நிர்ணயிக்கப்படவில்லை. அவசர அவசரமாக நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டுவந்த இடங்களில் நிலப் பிரச்னைகள் தீர்க்கப்பட்டிருக்கின்றனவா ? சீனாவில் புரட்சிகரமான நிலச்சீர்திருத்தத்தை உடனடியாகக் கொண்டுவந்தார்கள். சீனாவில் இப்போது உணவு நிலைமை மோசமாக இருக்கிறது. செஞ்சீனாவில் தான் உணவு நிலைமை மோசமாக இருக்கிறதென்று கூறுகிறார்கள்.

நம்மாகாணத்தைப் பொறுத்த மட்டில் இச்சட்டத்தை அவசரமாகக் கொண்டு வந்து சிக்கல்கள் ஏற்படுத்துவது நமக்கு வேதனையைத்தான் தரும் என்பதை எல்லோரும் ஞாபகத்தில் கொள்ளவேண்டும். இச்சட்டத்தைக் கொண்டு வர இப்பொழுதுள்ள சூழ்நிலை அமைதியாக இருக்

[Srimathi T. N. Anandanayaki] [11th September 1958

கிறது என்று கம்யூனிஸ்டு அங்கத்தினர்கள் சொல்லலாம். ஆனால் நான் படித்த செய்திகளில் இருந்து நிலப்பிரச்னையைப் பொறுத்த மட்டில் சூழ் நிலை அமைதியான முறையில் இல்லை என்றுதான் நான் கூறுவேன். உச்ச வரம்பு கட்டுவதற்கு முன்னால் அமைச்சர் அவர்கள் ஒன்றை சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதாவது, "ஸ்டைபிலிட்டி ஆப் ப்ரைஸஸ்" இருக் கிறதா என்று பார்க்கவேண்டும். இன்று நெல் கலம் ஒன்றுக்கு 10 ரூபாய்க்கு விற்றால் நாளை அது 15 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. இன்றைக்கு 10 ரூபாய்க்கு விற்கும் நெல் நாளைக்கு 5 ரூபாயாக குறைந்து விடுகிறது. வெங்காயத்தை எடுத்துக் கொண்டால் வீசை ஒன்றுக்கு 8 அணா என்று இம்மாதம் விற்றால், வெங்காயத்திற்கு நல்ல விலை கிடைக்கிறதே என்று அதை கூடுதல் பயிரிட்டு, அதன் விலை திடீரென்று குறைந்து போய் விடவே உள்ள வெங்காயம் எல்லாம், அழுகிப் போய்விடுகிறது. ஆக, விவசாயப் பொருள்களுக்கு நிர்ணயமான விலை இல்லை என்பதைத்தான் நாம் காண முடிகிறது. வெங்காயத்தின் விலை வீசைக்கு எட்டணா இருக்கிறதே என்று நினைத்து அதை கூடுதல் பயிரிட்டு அதன் விலை இரண்டணாவாகி விட்டால் வெங்காயத்தின் கதி என்னவது (வெங்காயம் போட்டவர்கள்) ஆகவே, வருமானத்தை வைத்துக் கொண்டு உச்ச வரம்பு நிர்ணயிப்பது என்பதாவது வேதனைக்குக் கொண்டு போய் விட்டு விடும். ஆகவே, அமைச்சர் அவர்கள் உச்ச வரம்பு கட்டுவதற்கு முன்னால் "ஸ்டைபிலை ஸேஷன் ஆப் ப்ரைஸஸ்" இருக்கிறதா, பொருளாதார நிலையைப் பாதிக்கக் கூடிய அளவில் விலை குறையக் கூடாது என்பதை முதலில் பார்த்துக் கொள்ள வேண்டும். விவசாயப் பொருள்களுக்கு, அதன் உற் பத்திக்காக போடப்படும் பணமும், "மார்ஜின் ஆப் புராபிட்" என்று சொல்வார்களே, ஓரளவு லாபமும் கிடைக்கக் கூடிய முறையில் இருந் தால் உச்ச வரம்பு கட்டுவதில் இருந்து பாதுகாப்பு அளிக்கும். அடுத்த படியாக, நான் சொல்ல விரும்புவது, "ஸ்கீம் ஆப் க்ராப் இன்ஷுரன்ஸ்" கொண்டு வர வேண்டும். எதெதெற்கெல்லாமோ நாம் இன்ஷுரன்ஸ் வைத்திருக்கிறோம். லைப் இன்ஷுரன்ஸ் வைத்திருக்கிறோம், கார் இன் ஷுரன்ஸ் வைத்திருக்கிறோம், இதுபோன்ற பலவற்றிற்கும் இன்ஷுரன்ஸ் வைத்திருக்கிறோம். அமெரிக்காவில், நாய்களுக்கு இன்ஷுரன்ஸ் வைத் திருக்கிறார்கள். ஆகவே, நான் சொல்வது இங்கு நம் நாட்டில் "க்ராப் இன்ஷுரன்ஸ்" வைக்க வேண்டும். அப்படிச் செய்தால், நெல் சாவி யாகி போய்விட்டாலும் அல்லது பயிர் கெட்டுப் போய் விட்டாலும் அந்தந்தப் பகுதிகளில் உள்ள நிலைமையைப் பார்த்து பாதிக்கப் பட்டவர்களுக்கு அந்த இன்ஷுரன்ஸ் தொகையை கொடுத்தால் விவசாயிகள் பாதிக்கப்படமாட் டார்கள். பருவ மழை தவறினாலும் இதனால் விவசாயிகள் பாதிக்கப்பட மாட்டார்கள். ஆகவே அந்த ஸ்கீமைக் கொண்டு வந்து விட்டு பின்னர் வருமானத்தின் பேரில் உச்ச வரம்பு வைத்தால் பரவாயில்லை. இன்று ஒரு அங்கத்தினர் கேட்டார்கள், வண்டிக்கு முன்னால் குதிரையைப் பூட்டு வதா, குதிரைக்கு முன்னால் வண்டியைப் பூட்டுவதா என்று. அதற்கு நான் சொல்வது, "கிராப் இன்ஷுரன்ஸ் ஸ்கீம்", "ஸ்டபிலைஸேஷன் ஆப் ப்ரைஸஸ்" இவை இரண்டையும் கொண்டு வந்து விட்டு பின்னர் உச்ச வரம்பு கட்டுவதானால் வண்டிக்கு முன்னால் குதிரையைப் பூட்டி அதை ஓட்ட முடியும் அமைச்சர் அவர்களால் என்று தெரிவித்துக்கொள் கிறேன்.

SRI P. U. SHANMUGAM: On a point of order, Sir, சபை யில் அங்கத்தினர்கள் தூங்கலாமா? நாகராஜ மணிகார் அவர்கள் தூங்குகிறார்கள்.

DEPUTY SPEAKER: அவர் தூங்கவில்லை. எதையோ பற்றி ஆழ்ந்து யோசனை பண்ணுகிறார். (சிரிப்பு) The Hon Member Srimathi Anandanayaki will finish her speech soon.

SRIMATHI T. N. ANANDANAYAKI: I shall finish my speech in a few minutes. நிலத்தின் உச்ச வரம்பு கட்டுவது அவசியந்தான். அதை நான் மறுக்கவில்லை. ஆனால் அப்படி உச்சவரம்பு கட்டு வதினால் சிக்கல்கள் அதிகமாகக் கூடாது. கருத்திருமன் அவர்கள்

11th September 1958] [Srimathi T. N. Anandanayaki]

சொன்னதுபோல், சூரியன், சூரியன் என்று கத்துவதால் ஆறு மணிக்கு உதிக்கும் சூரியன் 4 மணிக்கு உதிக்கப் போவதில்லை. விளம்பரத்தில் வேண்டுமானால் வைத்துக்கொள்ளலாம். எங்கள் சூரியன் எப்பொழுது வேண்டுமானாலும் உதிப்பான் என்று. உச்ச வரம்பு, உச்ச வரம்பு என்று வரட்டு சப்தம் போடுவதால் மட்டும் ஒன்றும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. எல்லா அங்கத்தினர்களும் அதில் ஈடுபட்டால்தான், எல்லா கட்சிகளும் அதில் ஈடுபட்டால்தான் அப்பிரச்னையைத் தீர்க்க முடியுமேதவிர அதைச் செய்ய வேண்டியது காங்கிரஸ்காரர்களைச் சேர்ந்தது, அவ்வேலை எங்களைச் சார்ந்ததில்லை, சப்தம் போடுவதுதான் எங்கள் வேலை, திட்டங்கள் தீட்டுவது காங்கிரஸ்காரர்களின் வேலை என்று இருப்பார்களேயானால், கும்பகோண மகாநாட்டைப்போல், கும்பகோணத்தில்தான் உங்களைக் கொண்டு போய் விடும் என்பதை யாரும் மறந்துவிடக் கூடாது. ஆகவே, எல்லோரும் நன்கு சேர்ந்து ஆலோசித்து ஒரு திட்டத்தை உருவாக்குவதுதான் நல்லது. அப்படிச் செய்யாமல் ஒரு திட்டத்தை உருவாக்கி அதன் பேரில் மேலும் மேலும் திருத்தங்கள் கொண்டுவரக் கூடிய சூழ்நிலையை நாம் உண்டாக்கக் கூடாது. திட்டங்களைத் தீட்டும்போது அதன் மேல் எவ்வளவுக்கெவ்வளவு குறைவாக திருத்தங்கள் வரக்கூடிய சூழ்நிலையிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதன் பெருமை உயரும். ஆகவே, அவசரக்கூட்டத்தைப் போட்டு விட்டு அதன்மேல் நாளையை திருத்தங்கள் கொண்டு வருவதை விட்டு, தீர ஆலோசித்து, எல்லாக் கட்சியினரும் ஒன்றுசேர்ந்து அதுபற்றி நன்கு ஆலோசித்த பிறகு ஒரு சட்டம் கொண்டுவருவது தான் நலம். நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தோடு "அதன் ரிஸோர்ஸஸை"யும் சேர்ப்பதா, சேர்க்காமல் இருப்பதா என்பதை பற்றியெல்லாம் நன்கு ஆர அமர ஆலோசித்த பிற்பாடு உச்சவரம்பு கட்டுவதுதான். அப்படி செய்வதினால்தான் உழவைப் பொறுத்தமட்டில் ஒரு "பாலன்ஸ்ட் எக்கானமி" யை உண்டாக்க முடியும். இன்றைக்கு ஒவ்வொரு வருக்கும் ஐந்து எக்கர் நிலம் என்று நிலத்தைப் பிரித்துக் கொடுத்தவிடுவதினால் அவர்களுக்கு கடன் கொடுக்கத்தான் மற்றவர்கள் ஆளாகவேண்டியிருக்கவே தவிர அது அவர்களுக்கு வாழ்வளிப்பதாக இருக்காது. இதைக் கொண்டு வந்திருக்கும் கோதண்டராமன் அவர்களுக்கு, "நிலத்தைப் பிரித்துக் கொடு", "நிலத்தைப் பிரித்துக் கொடு" என்று மட்டும் பாடி பழக்கமேத்தவிர அதை எப்படி பிரிப்பது, எந்த அடிப்படையில் பிரிப்பது, எப்படிப் பிரித்துக் கொடுத்தால் சிக்கல்கள் வளராமல் இருக்கும், இதில் இருக்கும் சிக்கல்கள் எவ்வளவு என்பதையெல்லாம் பற்றி அவர்கள் சிந்தித்ததும் கிடையாது, சிந்திப்பதும் கிடையாது. அப்படி சிந்தித்திருந்தால் அவர்களே அமைச்சர் அவர்களுக்குச் சொல்லியிருப்பார்கள், இதில் எவ்வளவு சிக்கல்கள் இருக்கிறது, அவைகளை இப்படி, இப்படியெல்லாம் தீர்க்கவேண்டுமென்று. "உச்ச வரம்பு கொண்டுவா", உச்ச வரம்பு கொண்டுவா என்று சப்தம் போட்டு விவசாயிகள் மத்தியில் குழப்பத்தை உண்டாக்கி, உற்பத்தியைக் குறைக்காமல் நிம்மதியாக பேசாமல் இருந்து காரியத்தில் ஈடுபடுவார்களேயானால் விவசாயிகளுக்கு பலனைத்தருவதாக இருக்கும். ஆகவே, நாம் கொண்டுவரக் கூடிய உச்சவரம்புச் சட்டம் மற்ற மாகாணங்களுக்கு ஒரு எடுத்துக் காட்டாக, நமது சென்னை மாகாணம் மற்ற மாகாணங்களுக்கு ஒரு எடுத்துக் காட்டாக இருக்கும் விதத்தில் அச்சட்டம் அமைய வேண்டுமென்று கூறிக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI R. CHIDAMBARA BHARATHI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இங்கு பேசிய அங்கத்தினர்கள் அநேகமாக எல்லா விஷயங்களைப்பற்றியும் எடுத்துச் சொல்லிய முறையில் நான் ஒரு விஷயத்தை முதலில் ஞாபகப்படுத்தி விட்டு அடுத்து பேச விரும்புகிறேன். இப்பொழுது இங்கு கொண்டு வரப்பட்டிருக்கும் தீர்மானம், நில நிர்ணயம் பற்றியதும் நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் வினியோகிக்கப்பட வேண்டுமென்பதும் ஆகும். காங்கிரஸ் கட்சி இதைக் கட்டாயம் செய்யத்தான் போகிறது. அது, நிச்சயம் ஏற்படத்தான் போகிறது. அதற்கு முன்பாக ஏன் இப்படிப்பட்ட தீர்மானங்கள் எல்லாம் கொண்டு வரப்படுகிறது என்பதைப் பற்றி இத்தீர்மானத்தைக் கொண்டு வந்தவருக்கும் நன்கு தெரியும், தமிழ்நாட்டு மக்களுக்கு தெரியாதவர்கள் என்று நினைத்துக் கொண்டு தான் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். சென்ற தேர்

தலில் துண்டுப் பிரசுரங்கள் வினியோகித்தார்கள். அதாவது, நிலச்சுவாந்தார்கள் உழுபவர்களை நிலத்தை விட்டு வெளியேற்ற வேண்டுமென்று நாங்கள்தான் கிளர்ச்சி செய்து சட்டம் கொண்டு வந்தோம் என்றும், 60, 40 வாரச் சட்டத்தை நாங்கள்தான் கொண்டு வந்தோம் என்றெல்லாம் பிரசாரம் செய்தார்கள். அதன் பலன் என்னவாயிற்று என்பது தேர்தல் வழி நிதர்சனமாக இந்த சட்ட சபையில் காட்சியளிக்கிறது. அவ்விதம் நோட்டீஸ் போட்டவர்கள், சென்ற சட்டசபையில் எவ்வளவு பேர்கள் இருந்தார்களோ அதை விட மிகவும் குறைவாகத்தான் இந்த சட்டசபையில் இருக்கிறார்கள். அப்படியிருந்தும் கூட, தமிழ் நாட்டைப் பற்றியும், தமிழனின் சிறப்பைப் பற்றியும் தெரிந்து கொள்ளாது மேடைகளில் பேசுவது போல் பாரதி பிறந்த இன்றைய தினம் இங்கும் பேசுகிறார்கள். மேடைகளில், "பொய்தான் பேசுவோம், நிஜமே பேசுவதில்லை" என்ற குறிக்கோளை வைத்துக் கொண்டிருப்பவர்கள் இங்கும் அவ்விதம் பேசுவதை காண நான் மிகவும் வருந்துகிறேன். இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்து அதன் மேல் பேசினால் பரவாயில்லை. அப்படிச் செய்வதோடு நில்லாது, பாரதி, திருவள்ளுவர், காந்தியடிகள் இவர்களின் கருத்துக்களுக்கு நேர் விரோதமாக காங்கிரஸ் காரியங்களைச் செய்கிறது என்று சொன்னார்கள். பாரதியார், "உழவிற்கும், தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்று பாடினார். அதை நான் திரும்ப இங்கு பாட வேண்டிய அவசியமில்லை. வள்ளுவர் கூறியதைபற்றியும் இங்கு எடுத்துக் கூறப்பட்டது. அதையும் நான் திரும்பக் கூற வேண்டியதில்லை. அவர்களின் கருத்தெல்லாம் விவசாயிகள் முன்னேற வேண்டுமென்பதுதான், விவசாயிகள்தான் பூமியில் உடைமைக்கு உரியவர்களாக இருக்க வேண்டும் என்பது தான் விவசாயிகளின் உரிமைக்காக போராடுகிறவர்கள், இந்த நிமிடம் வரையில் அவர்கள் இந்த சட்டசபையில் விவசாயிகளின் நன்மையில், நலனில் அக்கரை கொண்டு ஏதாவது பேசியிருக்கிறார்களா? இந்த மசோதா கொண்டு வந்ததற்காக நான் இதைச் சொல்லவில்லை. அவர்களின் கொள்கை என்ன என்பது எல்லோருக்கும் தெரியும். ரஷ்யாவை பாருங்கள் என்று சொல்லக் கூடியவர்கள் இந்தியாவிலும் அங்கு ஏற்பட்டதுபோன்ற ஒரு புரட்சி ஏற்பட்டாக வேண்டுமென்று விரும்புகிறார்களா? புரட்சி ஏற்படுவதற்கு முன்னர் ரஷ்யா எந்த நிலையில் இருந்ததோ அந்த நிலையில் இந்தியா இல்லை, தமிழ் நாடும், இந்தியாவும். கருத்திருமன் அவர்கள் சொன்னதுபோல், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு

1-10 p.m. முன்னே பொதுவுடமைத் தன்மை ஏற்பட்டாகி விட்டது. மக்களை ஏழைகளாக்கி கஷ்டம் தாங்க முடியாத நிலையில் ஆவேசம் கொண்டு புரட்சி ஏற்பட வேண்டுமென்பது கம்யூனிஸ்டுகளின் கொள்கை. ஆனால் இங்கே அம்மாதிரியான புரட்சி முயற்சியை 11 வருட காலமாக கம்யூனிஸ்ட்டுகள் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் அதற்கான நல்ல படிப்பினையை அவர்கள் தேர்தலில் அடைந்தார்கள். மக்கள் வெளியில் விழிப்பாகத்தான் இருந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். இனிமேலாவது மக்களிடத்தில் சரியாக நடந்து கொள்வோம் என்ற முறையில் இப்போது நீங்கள் பலாத்காரத்தை விட்டு பார்லிமெண்ட்டாரின் திட்டத்திற்கு வந்து விட்டோம் என்று கூறி வருகிறீர்கள். . . .

SRI P. U. SHANMUGAM: கனம் அங்கத்தினர் அவர்கள் தலைவரைப் பார்த்து இவ்விதம் சொல்லுவது சரிதானா என்பதை அறிய விரும்புகிறேன்

DEPUTY SPEAKER: He does not know whom he is addressing. Let him continue his speech.

*SRI R. CHIDAMBARA BHARATHI: இந்த தீர்மானத்தை பிரேரேபித்தவர் காந்தியைப் பற்றியும், காங்கிரஸ் கட்சியைப்பற்றியும் அவதூறான முறையில் பேசினார்கள். அவர்கள் இதைப்பற்றி பேசினதினால் தான் நானும் இதைப்பற்றி பேச வேண்டியிருக்கிறது. இந்த அரசியல் கட்சி, "ரஷ்யா போன்ற நாடுகளைப் போல் தான் இந்தியா இருக்க வேண்டும்" என்ற முறையில் பேசுவார்கள். ரஷ்யாவில் இருந்த நிலைமை . . .

11th September 1958]

**DEPUTY SPEAKER :** வெளிநாட்டு விஷயங்களைப்பற்றி அவசிய மில்லாமல் நாம் சொல்லாமல் இருப்பது தான் நல்லது என்று நான் கருதுகிறேன்.

**Sri R. CHIDAMBARA BHARATHI :** இரண்டு மூன்று தினங் களுக்கு முன்னால் எதிர்கட்சிகாரர்களால் சம்பளத்தை என்.ஜி.ஓ.-க்களுக்கு கேரளத்தில் உயர்த்தி கொடுத்திருப்பது போல் உயர்த்த வேண்டும் என்று சொன்னபோது, கனம் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் அதற்கு பதில் அளிக்கும்போது கேரளத்தில் திட்டசெலவை குறைத்துக்கொண்டு அதன் மூலமாகத்தான் சம்பளத்தை உயர்த்தி கொடுத்திருக்கிறார்கள் என்று சொன்னார். அப்போது இவர்கள் சம்பளத்தை உயர்த்துவதுதான் முக்கியம் என்று சொன்னார்கள். ஆனால் இங்கு விவசாயிகளுக்கு வேண் டிய திட்டங்கள், உணவு உற்பத்திக்கு வேண்டிய பல திட்டங்கள், விவ சாயிகளுக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் செய்து விவசாயத்தை முன் னேற்றத்திற்கு கொண்டு வருவதற்காக பல திட்டங்களை எல்லாம் போட் டிருக்கிறது சர்க்கார். இந்த நிலைமையில் சில தினங்களுக்கு முன்னால் இந்த திட்டங்களையெல்லாம் விட சம்பளத்தை உயர்த்துவது தான் மிக முக்கியம் என்று இவர்கள் சொன்னார்கள். இந்த விதமாக எதிர்கட்சியி லுள்ள பலர் பேசினார்கள். ஆனால் பாரதி தினமாகிய இன்றைய தினத்தி லாவது உங்களுடைய எதிர் கொள்கைகளை மாற்றி வைத்துவிட்டு பொது வான அரசியலை காப்பற்றுவதற்கு வேண்டியாவது ஒழுக்கமாகவும், நாணய மாகவும் நீங்கள் நடந்து கொள்ள வேண்டும் என்பது தான். . . . .

**DEPUTY SPEAKER :** அங்கத்தினர்களுடைய ஒழுக்கம், நாணயம் இவைகளைப்பற்றி பேசுவது சரியல்ல என்பது என் அபிப்பிராயம்.

**Sri R. CHIDAMBARA BHARATHI :** பொதுமக்களுக்கு வேலை செய்கிறோம் என்று சொல்லக்கூடியவர்களுக்கு இருக்கவேண்டு மென்பது தான் . . . . . . . . .

**Sri V. K. KOTHANDARAMAN :** ஸார், பாயிண்ட் ஆப் ஆர்டர், நான் பேசுகிறபொழுது என் தீர்மானத்தைப்பற்றி விளக்குவதற் காகத்தான் காந்தியைப்பற்றியும் திருக்குறளைப்பற்றியும் சொன்னேன். அதல்லாமல் ஏதோ நான் தவறுதலாக சொல்லிவிட்டேன் என்ற முறையில் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லி எதிர்கட்சியைப்பற்றி அவதூறாக சொல்லுவது ஒரு பொறுப்புள்ள அங்கத்தினரின் ஒழுங்காகுமா ?

**DEPUTY SPEAKER :** It is not a point of order.

**Sri R. CHIDAMBARA BHARATHI :** இந்த தீர்மானம் அம்மாதிரி இருக்கிறது என்பதற்காகத்தான் இதைச் சொன்னேன். மக்க ளிடத்தில் ஏதாவது சொல்லி சர்க்காரைப்பற்றி குறை கூறிக்கொண்டு தாங்கள் தான் எல்லாம் செய்வதாக சொல்வதற்காகத்தான் இந்த தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று நான் கருதுகிறேன். இம் மாதிரியுள்ள தீர்மானத்தை தேர்தல் சமயத்தில் கொண்டு வந்தால் வோட்டுகள் வாங்குவதற்காகத்தான் இதை கொண்டு வந்ததாக மக்கள் சொல்லுவார்கள் என்று இவர்கள் சொன்னார்கள். வோட்டு வாங்கு வதற்கு வேண்டிய எந்த நிமிஷத்திலும் காங்கிரஸ் கட்சி எந்தவிதமான முயற்சியும் செய்யவில்லை. சர்க்காரை ஏற்று நடத்துவதற்கு முன்னா லேயே, சுதந்திரம் கிடைப்பதற்கு முந்திய காலத்திலேயே சுதந்திரம் கிடைத்தால் இன்னின்ன திட்டங்கள் கொண்டு வருவோம் என்று காங்கிரஸ் மக்களிடத்தில் சொல்லியிருக்கிறது. அதை பின்பற்றித்தான் காரியங்கள் இப்போது நடைபெற்று வருகின்றன என்பதை உதவி சபாநாயகர் மூலமாக மக்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்றால், இந்தத் தீர்மா னம் கொண்டு வருவதால், ஏதோ மக்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் ஏற் படுத்துவதற்காக கொண்டு வந்திருக்கிறோம் என்றும், விவசாயிகளுக்கு நன்மை கிடைக்கவேண்டும் என்றும் கூறிக்கொண்டு பல தீமைகளை தான் மக்களுக்கு செய்து கொண்டிருக்கிறார்கள். இதனால் பல விதமான கஷ் டங்கள் எல்லாம் ஏற்படுகின்றன. எத்தனையோ கேஸ்கள் நடந்துகொண்

டிருக்கின்றன. மதுரை ஆர்.டி.ஓ. கோர்டில் நடக்கும் கேஸ்களை எடுத்துக் கொண்டால் பல கேஸ்களில் சிக்கிக்கொண்டு பலர் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிறார்கள். ஒன்றரை ஏக்கர் உள்ள ஒரு மாதின் பேரில் கேஸ் போட உழுபவன் என்று பொய்யாக தூண்டிவிட்டார்கள். ஒரு முறை அந்த கேஸ் டிஸ்மிஸ் செய்யப்பட்டது. அந்த விதவை இந்த கேஸின் மூலம் பெருந் தொல்லைக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. இம்மாதிரி மக்களை அதிககாலம் ஏமாற்றிக்கொண்டிருக்க முடியாது. மக்கள் விழித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அதைத்தான் சமீபத்தில் நடந்த உப தேர்தலில் காண்பித்துக்கொடுத்தார்கள். அதன் மூலம் உங்களுக்கு நல்ல பாடத்தையும் கற்பித்துக்கொடுத்தார்கள்......

**Sri P. U. SHANMUGAM** : தலைவர் அவர்களே, உங்களுக்கு நல்ல பாடத்தை கற்பித்துக் கொடுத்தார்கள் என்று அங்கத்தினர் அவர் கள் குறிப்பிடுகிறார்கள். அவ்விதம் சபைத் தலைவர் அவர்களை குறிப்பிடுவது ஒழுங்குதானா என்பதை அறிய விரும்புகிறேன்.

**DEPUTY SPEAKER** : உங்களுக்கு என்று சொல்வது, பேசுகின்ற அங்கத்தினர் சபைத் தலைவரை குறிப்பிடவில்லை என்று தான் நினைக் கிறேன். சிலருக்கு மேடைப் பேச்சு பேசும் பழக்கம் ஏற்பட்டு விடுவதால் "உங்களுக்கு" என்று குறிப்பிட்டுவிடுகிறார்கள். அதில் தவறு ஒன்று மில்லை என்று சபாநாயகர் அவர்களே சொல்லியிருக்கிறார்கள். **It is not addressed to the Chair.**

**Sri R. CHIDAMBARA BHARATHI** : இவர்கள் இந்த தீர்மானத்தை கொண்டுவந்திருப்பது ஏதோ இவர்கள் தான் விவசாயி களுக்கு......

**Sri N. K. PALANISAMI** : ஸார், உச்ச வரம்பை நிர்ண யிப்பது சம்பந்தமாக பேசாமல் கனம் அங்கத்தினர் அவர்கள் வேறு எதையெல்லாமோ பேசிக் கொண்டிருப்பது முறைதானா ? இந்த விஷயத் தைப்பற்றி ஏதாவது தெரிந்தால் அங்கத்தினர் அவர்கள் பேசிக்கொள் ளட்டும்.

**DEPUTY SPEAKER** : **He is coming to the subject of ceiling.** இனிமேல்தான் அவர் விஷயத்திற்கு வரப்போகிறார். (சிரிப்பு.)

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR** : ஸார், பாயிண்ட் ஆப் ஆர்டர், இப்போது மாத்திரம் இவர்கள் கட்சிகளைப்பற்றி பேசக்கூடாது என்று சொல்லுகிறார்கள். ஆனால் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பேசும்போது மாத்திரம் கட்சிகளை குறிப்பிட்டு தாக்கி பேசுவது முறையாகுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**DEPUTY SPEAKER** : நான் சொன்னது ஒரு அங்கத்தினருக்கு மாத்திரம் அல்ல. இந்த சபையில் இருக்கின்ற எல்லா அங்கத்தினர் களுக்கும் சேர்த்து தான் சொன்னேன்.

***Sri R. CHIDAMBARA BHARATHI** : பாயிண்ட் ஆப் ஆர்டரிலே "பேசத் தெரிந்தால் பேசுங்கள்" என்று சொன்னது போல் இருந்தது. அதைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

1-20 p.m. **DEPUTY SPEAKER** : பாயின்ட் ஆப் ஆர்டரைப்பற்றித் தாங்கள் பேசவேண்டியதில்லை. நான் அதைப்பற்றி பதில் சொல்லிக்கொள்கிறேன்.

**Sri R. CHIDAMBARA BHARATHI** : அதல்லாமல் நான் சொல்ல விரும்புவது, நிலத்திலிருந்து வெளியேற்றக்கூடாது உழு பவர்களை என்று கிளர்ச்சி செய்து, அதனால் நிலச்சுவான்தார்களுக்குக் கஷ் டமும், உணவு உற்பத்திக்குக் கஷ்டமும் ஏற்படுத்தி, 60–40-லும் தகராறும், மற்றும் தகராறுகள் செய்வது போன்று நிலங்களை வினியோகிக்கவேண்டு

11th September 1958] [Sri R. Chidambara Bharathi]

மென்று கிளர்ச்சிகள் செய்வதினால், இந்தச் சட்டம் வருவதை, வருவதற்கான சூழ்நிலையை, அதாவது விவசாயிகளை நிலத்தை உழும் சக்தியுள்ளவர்களாகவும், சகல சக்தியையும் உடையவர்களாகவும் செய்யும் ஒரு சூழ்நிலையை, வீணுக்குகிறார்களென்று தான் சொல்லவேண்டும். இப்பொழுதே நிலத்தை வினியோகித்தால், நிலச் சொந்தக்காரர்களுடைய மாடுதான் மேயும் என்று நமது முதன் மந்திரி அவர்கள் ஒரு இடத்தில் சொன்னார்கள் என்று அநேகம் பேருக்கு விவசாயம் செய்யக்கூடிய சக்தியில்லாததால், நிலங்கள் தரிசாக இருக்கும் நிலைமை ஏற்படும். இப்போது விவசாயிகளுக்கு சக்தியில்லை. சக்தியுடையவர்களாக இன்னும் ஆக்கப்படவில்லை. இப்போது நிலத்தைப் பிரித்துக் கொடுத்தால் நிலச் சொந்தக்காரருடைய மாடு தான் அங்கே மேயும். மேயக்கூடிய மாடும் நிலச் சுவாந்தாருடைய மாடாகத்தான் இருக்குமே தவிர, உழுபவர்களுடைய மாடாகக்கூட இருக்காது. அந்தக் கருத்தோடு, மனிதர்களாக வாழ, சௌகரியமாக இருக்க, முதலில் அவர்களுக்கு விவசாயம் செய்யும் சக்தியை உண்டாக்கிய பிறகு, வெகு சீக்கிரத்தில் இந்தச் சட்டம் கொண்டு வரப்படவிருக்கிறது. இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்த அங்கத்தினர் இதைப் பிரசாரத்திற்கு உபயோகப்படுத்தியாகிவிட்டது. இருந்தாலும் இதை வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri M. KARUNANITHI : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, தோழர் கோதண்டராமன் கொண்டு வந்துள்ள, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்ற தீர்மானத்தை ஆதரித்து நான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நிலத்திற்கு உச்ச வரம்பு கட்ட வேண்டுமா ? வேண்டாமா ? என்கிற பிரச்னையில் ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்களும், எதிர்க் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்களும் தெரிவித்த கருத்துக்களில், ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் முறண்பட்ட கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்கள் என்பதும் எதிர் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் ஒருமித்த கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்கள் என்பதும் இந்தச் சபை நன்றாக உணரும். நிலத்திற்கு உச்ச வரம்பு கட்ட வேண்டும்—கட்ட வேண்டியது அவசியம்—என்று ஆளும் கட்சியினர் தீவிரமாகப் பேசியதையும், அதே சமயத்தில் ஒரு சிலர், "அப்படி ஒரு தீர்மானம் வருமானால் நாங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறோம்" என்று கூறி தங்களுடைய கட்சிக் கட்டுப்பாட்டைக் காட்டினார்களே தவிர, அவர்களுடைய ஆர்வத்தை காட்டினார்களில்லை என்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இங்கே பேசியவர்கள் எல்லோரும், குறிப்பாக நண்பர் ப. உ. சண்முகம் "ஒரு நாள் காலை திடீரென்று, உதய சூரியன் உதிக்கிற நேரத்தில் அமுலாக்க வேண்டும், பிரகடனப்படுத்தப்படவேண்டும்" என்று கூறிய வாசகத்தைத் தவறாகப் புரிந்துகொண்டு, உதய சூரியன் என்று சொன்னதை உதய சூரியன் சின்னத்தைக் குறிப்பிடுகிறார்கள் என்று கருதி, சூரியனையே பிடிக்காதவர்கள் போலப் பேசினார்கள். சூரியனே உதிக்காமல், இந்த உலகம் அந்தகார நிலையில் இருக்கவேண்டுமென்று எண்ணுபவர்கள் கள்வர்களும், கற்பை கடை பொருளாக ஆக்கவேண்டுமென்று கருதுபவர்களும் தான். மதிப்பிற்குரிய காங்கிரஸ்காரர்கள், சூரியன் பிடிக்கவில்லை, சூரியன் தேவையில்லை என்று. . . . . . . . . . . .

Srimathi T. N. ANANDANAYAKI : On a point of order, Sir. காங்கிரஸ் அங்கத்தினர்கள் யாரும் சூரியன் வேண்டாமென்று சொல்லும் அளவிற்கு அறிவில்லாதவர்கள் இல்லை. அவர்களுடைய பேச்சைத் தவறாகப் புரிந்து கொண்டு, இந்தச் சபையை ஒரு பிரசார மேடையாக மாற்றுவது அவுட் ஆப் ஆர்டர்.

DEPUTY SPEAKER : The hon. Member has given the ruling.

Srimathi T. N. ANANDANAYAKI : Sir, I only submit that it may be out of order.

[11th September 1958

**Sri M. KARUNANITHI** : எப்போதுமே எதிர்க்கட்சிக்காரர்கள் கொண்டுவந்த..........

**DEPUTY SPEAKER** : தீர்மானத்தைப்பற்றி பேசுங்கள்.

**Sri M. KARUNANITHI** : எதிர்க் கட்சிக்காரர்கள் கொண்டு வரும் தீர்மானங்கள், ஆளவந்தார்களிடையே நல்ல அபிப்பிராயத்தை உண்டாக்குகிற தீர்மானமாக இருந்தபோதிலும் அந்தத் தீர்மானத்தை, "இவர்கள் கொண்டு வந்து நாம் அதை நிறைவேற்றி வைப்பதா ?" என்று முன்பே முடிவு செய்துகொண்டு அந்தக் கருத்தினையொட்டித்தான், எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படக்கூடிய தீர்மானம்கூட, அவர்கள் வரையறுத்து மறுத்திருக்கிறார்கள் என்பதை நான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஒரு உதாரணம் சொல்ல வேண்டுமானால், ஒரு பிச்சைக்காரன் ஒரு வீட்டிலே சென்று பிச்சை கேட்க, அந்த வீட்டு மருமகள் பிச்சையில்லை என்று கூறி விட அந்தப் பிச்சைக்காரன் திரும்பி வரும்போது, குளத்திற்குப் போய்விட்டுத் திரும்பி வரும் மாமியார் அந்தப் பிச்சைக்காரனைக் கூப்பிட்டு "எங்கிருந்து வருகிறாய் ?" என்று கேட்க, அந்த பிச்சைக்காரன், "இந்த வீட்டிலே போய் பிச்சைக் கேட்டேன், பிச்சையில்லை என்று சொன்னார்கள்" என்று சொல்ல, அந்த மாமியார் "அவளுக்கு பிச்சையில்லையென்று சொல்ல என்ன அதிகாரம், வா" என்று சொல்லி அழைத்துப் போய், உள்ளே சென்று விட்டு வெளியே திரும்பி வந்து "நான் இல்லையென்று சொல்கிறேன், போ" என்று கூறினாளாம். இந்த மாமியார் மருமகள் கதை தான் பரிதாபத்திற்குரிய காங்கிரஸ் அங்கத்தினர்களை எண்ணும் நேரத்தில், எனக்கு ஞாபகம் வருகிறது.

**Sri S. NAGARAJA MONIGAR** : ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், ஸார், சதா கதை எழுதி, கதை எழுதுவதிலே வல்லமை பெற்றிருந்தும் இவர் பழைய கதையையே சொல்வானேன் ? பழைய கதை தான் சொல்லத் தெரியுமா ? புதிய கதை ஒன்றும் தெரியாததாலா ?

**Sri M. KARUNANITHI** : நாகராஜ மணிகாரரைப் பார்க்கும்போது எனக்கு காமிக் நடிகர் ஞாபகம் வந்தது. ஆகவே தான் இந்தக் கதையைச் சொல்ல வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தது.

**Sri R. CHIDAMBARA BHARATHI** : நான் பேசிய போது கட்சியைப்பற்றி பேசக்கூடாது என்று பாயின்ட் ஆப் ஆர்டர் எழுப்பிய போது என்னைப் பேசக்கூடாது என்று சொன்னீர்களே, இப்பொழுது இவர் பேசுவதை அனுமதிப்பதின் தாத்பர்யம் என்ன ?

**DEPUTY SPEAKER** : அது உங்களுக்கு மாத்திரமல்ல. அவரும் அதைப் புரிந்து கொண்டிருக்கவேண்டும்.

**Sri M. KARUNANITHI** : இதே சட்ட மன்றத்திலே, ஜனநாயகத்தின் முன்னோடும் பிள்ளைகள் என்று கூறிக்கொள்ளும் காங்கிரஸ்காரர்களும், அவர்களின் தலைவராக இருக்கின்ற மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் சென்ற தடவை நண்பர் ப. உ. சண்முகம் நம் நாட்டுக்கு, சென்னை என்ற பெயரை மாற்றி, தமிழ் நாடு என்ற பெயரை வைக்க வேண்டும் என்று கூறிய நேரத்தில், எதிர் கட்சிக்காரர்கள் சொல்லாமல் இருந்திருந்தால் வைத்து விட்டிருப்போம் என்று சொன்னார். . . .

**DEPUTY SPEAKER** : How is it relevant to the resolution that is now before the House.

**Sri P. U. SHANMUGAM** : The hon. Member comes to the point.

11th September 1958]

**Sri M. KARUNANITHI :** அதைப் போலவே எதிர் கட்சிக்காரர்கள் கொண்டு வருகிற தீர்மானத்தை நாங்கள் ஆதரிக்கத் தயாராயில்லை என்று பேசப்படுகிறது. இங்கே கும்பகோணத்தைப்பற்றி யாரோ பேசினார்கள். அதிலே . . . . . .

**Sri R. CHIDAMBARA BHARATHI :** நிதி அமைச்சர் எதிர் கட்சிக்காரர்கள் சொல்லியதாகச் சொல்லும் விஷயத்திற்கும் இதற்கும் அதிகம் வித்தியாசம் இருக்கிறதே, அப்படிச் சொல்வது நியாயமா ?

**DEPUTY SPEAKER :** இந்த விஷயத்தைப் பற்றி நான் நினைவு படுத்திக் கொள்கிறேன். நீங்கள் சொல்ல வேண்டியதில்லை.

**Sri M. KARUNANITHI :** கும்பகோணத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் கலந்து கொண்டார்கள் என்று குறிப்பிட்டார்கள் கனம் அனந்தநாயகி அம்மையார். . . .

**Sri P. U. SHANMUGAM :** நீலமேகம் பிள்ளை திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் என்று சொன்னது தப்பு. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் அல்ல.

**Sri M. KARUNANITHI :** மிராசுதார்கள் மாநாட்டிலே பேசியதையொட்டியும் அங்கு அவர் பேசிய கருத்தினை வலியுறுத்தியதையும் தவறான பிரசாரமென பத்திரிகைகளில் மறுப்பு வெளியிட்டிருக்கிறார். திரு நீலமேகம் திராவிட முன்னேற்றக் கழகம் விவசாயிகள் பிரச்னையிலேயும், நிலத்திற்கு உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்ற கொள்கையிலும், மிக மிகத் தீவிரமாகப் பிரசாரம் செய்து கொண்டும், செயல் மூலமாக அத்தகைய காரியங்களைச் செய்வதிலே ஈடுபட்டுள்ள கழகம் என்று இங்கே பெருமையுடன் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களோ அல்லது வேறு எதிர் கட்சியைச் சேர்ந்தவர்களோ ஒரு தீர்மானத்தைக் கொண்டு வருவார்களேயானால், அதை அவமதிப்பதும், ஏளனமாகப் பேசுவதும், "எங்களுக்கு இருக்கும் ஏக்கர்களைப் பிரித்துக் கொடுக்கத் தயார், சட்டம் வரட்டும்" என்று கூறுவதும், உள்ளபடியே அவர்களுடைய கட்சிக் கட்டுப்பாட்டைத் தான் குறிப்பிடுகிறது. உள்ளபடியே இங்கு இருக்கக்கூடிய கனம் லட்சுமிபதி ராஜ் போன்றவர்கள் இருதயத்தில் கை வைத்து உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்று வலியுறுத்திக் கூறினார்கள். அதே நேரத்தில் காங்கிரஸில் உள்ள வேறு அங்கத்தினர்கள், மிராசுதார்களாக இருப்பவர்கள், மிராசுதார்களாகவே வாழவேண்டுமென்று எண்ணுபவர்கள், "சட்டம் வந்தால் ஏற்றுக் கொள்கிறோம்" என்று கூறிக் கொண்டிருக்கிறார்கள்.

திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த நாங்கள், கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்கள், சோஷலிஸ்ட் கட்சித் தோழர்கள் எல்லோரும், "எதிர் கட்சி எப்போதும் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டப் போகிறார்கள்" என்று கோருகிறார்களே, ஏன் அது இன்னும் அமுலாக்கப்படவில்லை என்று கேட்கிறோம்.

அம்மையார் அவர்கள் சொன்னார்கள், இந்த தோழர் கோதண்டராமன் அவர்களின் தீர்மானத்தின் வாசகத்தில் தவறு இருப்பதாக. நான் மிக மிக பணிவோடு, தாழ்வோடு, மரியாதையோடு கேட்கிறேன். . . .

**DEPUTY SPEAKER :** The discussion on the resolution will be continued on the next non-official day. 1-30 p.m.

The House will now adjourn and meet again at 9 a.m. to-morrow.

The House then adjourned.

## VI.—PAPER LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A. Statutory Rules, Orders and Notifications.*

118. *Notification issued with G.O. Ms. No.* 2732, *Industries, Labour and Co-operation, dated* 11th *July* 1958, *amending Rule III-A of the rules published with the late Development Department Notification No.* 264, *dated* 1st *August* 1933, *under Rule* 65 (3) *of the Madras Co-operative Societies Act,* 1932 (*Madras Act VI of* 1932).

11th September 1958]

## APPENDIX.

[Vide answer to clause (b) of started question No. 100-H asked by Sri A. A. Rasheed at the meeting of the Legislative Assembly held on 11ht September 1958, page 611 supra.]

### THE MADRAS INDUSTRIAL INVESTMENT CORPORATION, LIMITED, MADRAS.

*Disbursements against the borrrowers classified industrywar and districtwar during the year* 1956–57 (*1st April* 1956 *to* 31*st March* 1957).

| District. (1) | Amount. (2) RS. | nP. |
|---|---|---|
| Ramanathapuram .. .. .. | 28,67,888 | 35 |
| Tirunelveli .. .. .. .. | 12,55,106 | 56 |
| Chingleput .. .. .. .. | 8,27,016 | 37 |
| Kerala State .. .. .. .. | 7,76,705 | 00 |
| Coimbatore .. .. .. .. | 7,50,000 | 00 |
| Salem .. .. .. .. .. | 5,80,381 | 31 |
| Tanjore .. .. .. .. .. | 4,00,000 | 00 |
| Madras .. .. .. .. .. | 1,59,678 | 11 |
| Total .. | 76,16,775 | 70 |

(Rupees seventy-six lakhs sixteen thousand seven hundred and seventy-five and naye Paise seventy only.)

| Industry. (1) | Amount. (2) RS. | nP. |
|---|---|---|
| Textiles . .. .. .. .. | 52,92,051 | 03 |
| Surgical Cottons .. .. .. | 6,45,000 | 00 |
| Electricity distribution . .. | 4,75,000 | 00 |
| Light Engineering—Wood Screws .. | 3,39,940 | 00 |
| Wheat Flour Mills .. .. .. | 67,847 | 00 |
| Printing (Card Board, etc.) .. .. | 81,831 | 11 |
| Inks .. .. .. .. .. | 10,000 | 00 |
| Salt .. .. .. .. .. | 55,106 | 56 |
| Synthetic Gem Manufacturing .. | 6,50,000 | 00 |
| Total .. | 76,16,775 | 70 |

[11th September 1958

*Disbursements against the borrowers classified industrywar and districtwar during the year* 1957–58 (1*st April* 1957 *to* 31*st March* 1958).

| District. (1) | Amount. (2) RS. | nP. |
|---|---|---|
| Coimbatore .. .. .. .. | 31,39,910 | 14 |
| Ramanathapuram .. .. .. | 12,59,788 | 19 |
| Tirunelveli .. .. .. .. | 7,20,070 | 85 |
| Madras .. .. .. .. .. | 7,00,644 | 90 |
| Chingleput .. .. .. .. | 4,04,495 | 39 |
| Tiruchirappalli .. .. .. .. | 2,63,902 | 31 |
| North Arcot .. .. .. .. | 2,00,000 | 00 |
| Salem .. .. .. .. .. | 15,820 | 36 |
| Total .. | 67,04,632 | 14 |

(Rupees sixty-seven lakhs, four thousand six hundred and thirty-two and naye Paise fourteen only.)

| Industry. (1) | Amount. (2) RS. | nP. |
|---|---|---|
| Textiles .. .. .. .. .. | 52,31,276 | 82 |
| Surgical Cottons .. .. .. | 40,000 | 00 |
| Electricity distribution .. .. | 2,00,000 | 00 |
| Water Flour Mills .. .. .. | 6,93,610 | 71 |
| Leather Tanning .. .. .. | 2,63,902 | 31 |
| Light Engineering—Wood Screws .. | 2,60,008 | 11 |
| Salt .. .. .. .. .. | 8,800 | 00 |
| Printing—Envelopes .. .. .. | 7,034 | 19 |
| Total .. | 67,04,632 | 14 |